# ப்ரீஸ்

Breeze

Breeze

## மேனியின் ஆரோக்கியத்தையும் அழகையும் ஓங்கச் செய்வது *ப்ரீஸ்*!

[illegible]

ஆரோக்கியத்துடன் மிளிரும் மேனியே பெண்மையழகின் இலட்சணம். மணங்கமழும் ப்ரீஸ் சோப்பில் 'ஆக்டமர்' அடங்கியுள்ளது; சருமக் களங்கங்களுக்குக் காரணமான கிருமிகளிடமிருந்து உங்கள் சருமத்தை விடுவிக்கும் பொருளே 'ஆக்டமர்'. மேனியழகின் பராமரிப்பையும், புது மலர்ச்சியையும் விரும்புவோர் தேர்ந்தெடுப்பது ப்ரீஸ்தான்! நீங்களே உபயோகித்துப் பார்த்துத் திருப்தி பெறுங்கள்.

**சரும நலனுக்கான 'ஆக்டமர்' கலந்துள்ள சோப்**

BZ.13-50 TM

[illegible]

# கல்கி

## பொருளடக்கம்

நவம்பர் 22, 1959



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

இதுவரை தயாரித்த படங்களில் மிகவும்
இன்பமானதும் மென்மையானதுமான மகோன்னதச் சித்திரம்




பிரஸாத் புரொடக்ஷன்ஸாரின்

# சோட்டி பெஹன்

(ஹிந்தி)

சென்னை, பிளாஸாவில்

தினசரி: 2-45; 6-15; 9-45

—— ராஜ்ஸ்ரீ ரிலீஸ் ——

டைரக்ஷன்: எல். வி. பிரசாத்

சங்கீதம்: சங்கர் ஜெய்கிஷென்

★ பால்ராஜ் சஹானி ★ ஷியாமா

★ நந்தா இன்னும் இதரர்கள் நடித்தது

Moulis



மலர் 19 | தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற | விகாரி ௵
இதழ் 17 | தாயென்று கும்பிடடி பாப்பா —*பாரதியார்* | கார்த்திகை ௴

# மீண்டும் பரிசீலனை செய்ய வேண்டும்

இந்தியாவின் வெளிநாட்டுக் கொள்கை விஷயத்தில் உடனடியாகத் தீவிர சிந்தனையும், புரட்சிகரமான மாறுதலும் தேவை.

நம்மை யாரும் தாக்காதவரையில், நமது நடுநிலைமைக் கொள்கைக்குப் பொருள் இருந்தது. மேற்கத்திய அமெரிக்க கோஷ்டியையோ, கம்யூனிஸ்ட் கோஷ்டியையோ சேரமாட்டோம், நமக்கு இரண்டு நாடுகளின் நல்லுறவும் நட்பும் தேவை என்று சொல்லிக்கொண்டதில் பொருள் இருந்தது.

ஆனால் சீனு நம்பிக்கைத் துரோகம் செய்து விட்டது. நமது நட்பைப் புறக்கணித்து நமது எல்லையில் புகுந்து பதினாயிரம் சதுர மைல்களுக்கு அதிகமான பிரதேசத்தைப் பலாத்காரமாக ஆக்கிரமித்துக் கொண்டது. இப்படிச் செய்த அன்றே நமது நடுநிலைமைக் கொள்கையும் முறிந்து விட்டது. இனியும் நாம் நடுநிலைமையைப் பற்றிப் பேசுவதில் பொருள் என்ன இருக்கிறது? சீனுதான் அப்படிச் செய்ததே; ருஷ்யாவாகிலும் சீனுவைத் தான் செய்த தவற்றை உணரச் செய்து, திருத்த முயன்றதா? அதுவும் இல்லை. இதிலிருந்து கம்யூனிஸ்ட் கோஷ்டி நாடுகளில், சீனுவின் அக்கிரமத்தைக் கண்டிக்கும் எண்ணமோ நமது நடுநிலைமைக் கொள்கையைப் பொருட்படுத்தும் மனப் பான்மையோ இல்லை என்பது தெளிவாகிவிட்டது.

இந்நிலையில் நாம் மட்டும் நடுநிலைமைக் கொள்கையை விடமாட்டோம் என்று சொல்லிக்கொண்டே வருகிறோம். நமது பிரதமரும், அவருடைய சக மந்திரிகளும் பழைய பல்லவியையே இன்னும் பாடிக் கொண்டிருப்பது ஏளனத்துக்கு இடமளிக்கிறது!

சென்றவாரம் அமெரிக்க முக்கிய மந்திரி ஹெர்டர், பத்திரிகை நிருபர்களுக்கு அளித்த பேட்டியில், அமெரிக்கா இந்தியாவின் நடுநிலைமையை எடுத்துக் கொண்டு பேசுவதுபோல் இருந்ததே ஒழிய, பகிரங்கமாகத் தனது அனுதாபத்தைத் தெரிவித்துப் பேசுவதாக இல்லை. இந்தப் பேட்டி இந்தியாவுக்கு ஏமாற்றம் அளிக்கக் கூடியதாக இருக்கும் என்று அமெரிக்கத் தலைநகரிலேயே பேசிக் கொண்டார்களாம். பிறகு வந்த அறிக்கைகளிலும், ஏதோ விளக்கம் செய்வதாக இருந்தபோதிலும் மொத்தத்தில் பழைய ஸ்வரமாகத்தான் பாடியிருக்கிறார்கள்.

அமெரிக்கா, உலகில் எந்தக் கோடியில் கம்யூனிஸ்ட் நாடுகள் அதிக்கிரமம் செய்தாலும் உடனே தனது கோபத்தையும், அருவருப்பையும் காட்டிக் கொள்ளும். இந்திய எல்லையில் சீனு புகுந்து பகிரங்கமாக ஆக்கிரமித்துக் கொண்டபின் இந்தியாவுக்கு அனுதாபமாகப் பேச மறுக்கிறது.

இந்தியா இவ்வளவு சூடுபட்ட பின்னரும் 'நடுநிலைமைக் கொள்கையை விட மாட்டோம்' என்று சொல்லிக்கொண்டு வருவதாலேயே இப்படி அமெரிக்கா செய்கிறதோ என்னவோ!

நமது நடுநிலைமைக் கொள்கைக்கு அர்த்தமில்லாமல் போன பின்னரும் அதையே கட்டிக் கொண்டு அழுதோமானால் நமக்கு உலகில் சிநேகிதர்களே இல்லாமல் பரிதாப நிலைக்கு ஆளாவோம். நமது வெளிநாட்டுக் கொள்கையைச் சீன அக்கிரமத்தினால் உண்டான சூழ்நிலையில் புனர் ஆலோசனை செய்து மாற்றிக்கொள்ள வேண்டும்.

# பொறுத்தது போதும்!

நமது பழைய சேனாபதி மேஜர் ஜெனரல் திரு கரியப்பா அவர்கள் விடுத்துள்ள அறிக்கை நமது ராணுவத்தின் மதிப்பைக் காப்பாற்றக் கூடிய வகையில் இருக்கிறது.

இந்திய சர்க்கார், நான்கு வருஷங்களுக்கு மேலாக எல்லைப்புற விவகாரத்தை மூடி மறைத்து வைத்தது போதாதென்று, சமீபத்தில் பல உயிர்ச்சேதம் ஆனபின்னரும் ஆக்கிரமிப்பாளர்மீது கடுமையான ராணுவ நடவடிக்கை எடுக்கத் தயங்குவதைப் பார்க்கும்போது, இந்திய மக்களுக்கு நம் ராணுவ பலத்தில் அவநம்பிக்கை ஏற்பட்டுள்ளதாகத் தோற்றம் அளிக்கிறது. நாம் உண்மையில் பலவீனமான நாடுதானா? இந்திய சர்க்கார் வருஷ வருமானத்தில் பாதிக்குமேல் ராணுவப் பாதுகாப்புக்குச் செலவழித்துக் காப்பாற்றி வரும் இந்திய சைன்யம் நமது மானத்தைக் காப்பாற்றக்கூட யோக்கியதை இல்லாமல் இருக்கிறதா என்ற சந்தேகங்கள் மக்கள் உள்ளத்தில் எழுந்திருக்கின்றன.

ஜெனரல் கரியப்பா இந்த விஷயங்களை எடுத்துக் காட்டியபோது, நமது பிரதமர் பகிரங்கமாக வரவேற்காவிடினும், சும்மாவாகிலும் இருந்திருக்கலாம். அதற்குமாறாக அவரைத் தூஷித்திருக்கிறார்.

ஆயினும் ஸ்ரீ கரியப்பா அவர்கள் நேருஜியின் தாக்குதலை லாகவமாக ஏற்றுக்கொண்டு, தமது கருத்தை மீண்டும் ஒரு அறிக்கை மூலம் தெளிவாகவும் தேசபக்தி உணர்ச்சியோடும் வெளியிட்டிருக்கிறார்.

“நாம் செயலில் இறங்க வேண்டிய காலம் வந்துவிட்டது. தைரியமாகவும் உறுதியோடும் நடவடிக்கை எடுக்க வேண்டும். ‘வார்த்தை’களுடனும் காகிதத்தில் மரியாதையுடன் நமது எதிர்ப்பைத் தெரிவித்துக் கொள்வதுடனும் நின்றால் போதாது. வெளிப்படையான ராணுவ நடவடிக்கை மூலமும் நமது எதிர்ப்பைக் காண்பித்துக்கொள்ள வேண்டும். நமக்குரிய பிரதேசத்தில் எங்கெல்லாம் சீனர்கள் தங்கள் ராணுவத்தைப் புதிதாக வைத்திருக்கிறார்களோ, அங்கெல்லாம் நமது துருப்புக்களை அனுப்பி அவர்களை வெளியேற்றி நமது உரிமையை மீட்க வேண்டும்.

“எந்த எந்தக் கணவாய்கள் வழியாக நுழைய முடியுமோ, அங்கெல்லாம் நமது படைகளை அனுப்புவோம். பனி மூடிக் கொள்ளுமுன் இதைச் செய்ய வேண்டும். ராணுவ தளவாடங்களை இந்த மலைப்பாங்கான பிரதேசங்களில் அனுப்ப முடியாதிருக்கலாம். நமது படை வீரர்கள், தக்க தந்தி டெலிபோன் வசதிகளுடன் நமது எல்லை முனைவரையில் செல்ல வேண்டும். சென்ற யுத்த காலத்தில் அமைக்கப்பட்ட எல்லா விமான நிலையங்களும் எவ்விதத் தாமதமுமின்றிச் சீர்ப்படுத்தப் படவேண்டும். நம் நாட்டுக் கோடிக்கணக்கான மக்கள் உள்ளத்திலிருக்கும் சந்தேகங்களைப் போக்கும் வகையில் ராணுவ முயற்சிகள் விரைவில் எடுத்துக்கொள்ளப்பட வேண்டும்” என்று சொல்லுகிறார்.

ஜெனரல் கரியப்பா அவர்கள் எழுத்து, இன்று நாட்டில் ஏற்பட்டுள்ள சிக்கலை நமது ராணுவம் வெற்றிகரமாகத் தீர்க்கக் கூடியது தான் என்ற நம்பிக்கையைப் பாரத மக்களுக்கு அளித்திருக்கின்றது.

ஆனாலும் பொதுமக்கள் எத்தனை காலம் பொறுமையாக இருக்க முடியும் என்பதை நேருஜி நினைவுபடுத்திக் கொள்ள வேண்டும்.

இந்த நிலையில் நம் நாட்டுக் கம்யூனிஸ்டுகளின் போக்கு பரிகசிக்கத்தக்க அளவுக்குச் சென்றுவிட்டது. சீனாவின் ஆக்கிரமிப்பு, நம்முடைய வெறுப்பையும் கோபத்தையும் மூளச் செய்துவிட்ட போதிலும் நாட்டுக்கு ஒரு நன்மை செய்திருக்கிறது. கம்யூனிஸ்ட் கட்சிக்காரர்களின் தேச பக்தியின்மையை வெளிப்படுத்தி விட்டது. அவர்கள் சாமர்த்தியமாக இப்படியும் அப்படியும் பேசிவருவதை மக்கள் நம்ப மாட்டார்கள்.

# வேண்டாம் இந்தச் சலுகை!

சமீபத்தில் மத்திய சர்க்கார் ரயில்வே மந்திரி அவர்கள், சர்க்கார் உத்தியோகங்களில் தாழ்த்தப்பட்ட வகுப்பாருக்கென்று விசேஷ சலுகைகள் அளிக்க வேண்டிய அவசியத்தைப் பற்றிப் பேசியிருக்கிறார். சர்க்கார் உத்தியோகங்களிலும் ரயில்வே உத்தியோகங்களிலும் சில ஸ்தானங்களை ஒதுக்க வேண்டும். அதுமட்டு மல்ல, அந்த ஸ்தானங்களுக்குத் தகுதியானவர் தாழ்த்தப் பட்ட வகுப்பாரிடமிருந்து அகப்படவில்லையாயின் அவற்றைக் காலியாகவே வைத்திருக்க வேண்டும். மற்ற வகுப்பினரைக் கொண்டு நிறைவு செய்யக் கூடாது. இப்படி யெல்லாம் சர்க்காரிலிருந்து உத்தரவுகள் பிறப்பிக்கப்படுகின்றன. இவற்றைப்பற்றி நாட்டில் வாத விவாதங்கள் நடைபெற்று வருகின்றன.

இதில் உள்ள நியாயத்தையும் நேர்மையையும் நாம் இங்கு எடுத்து விவாதிக்க விரும்பவில்லை. ரிபப்ளிகன் கட்சியார் ஹரிஜனங்களுக்குத் தனித்தொகுதி ஏற்பாட்டை நீடித்துத் தருவதை வரவேற்கவில்லை என்பதை இங்கு எடுத்துக்காட்ட விரும்புகிறோம். ரிபப்ளிகன் கட்சியில் சென்னை தாழ்த்தப்பட்ட வகுப்பாரின் பிரதிநிதியாகத் தில்லி மக்கள் சபையில் அங்கம் வகிக்கும் திரு என். சிவராஜ் அவர்கள் இருக்கிறார்கள். அவருடைய கருத்து கவனத்துக்குரியது. அவர் மந்திரி ஜகஜ்ஜீவன்ராம் அவர்கள் சொல்வது போல், சில ஸ்தானங்களைத் தாழ்த்தப்பட்டவர்களுக்கென்று ஒதுக்கினால், காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த அல்லது அனுதாபமுள்ள தாழ்த்தப்பட்டவர்களே நியமனங்களும் சலுகைகளும் பெறுகிறார்களேயன்றி மற்றவர்களுக்கு வாய்ப்புக் கிடைப்பதில்லை. ஆகவே இம்முறையினால் கட்சி விருப்பு வெறுப்புகளுக்கு இடமேற்படுகிறது என்கிறார். இதில் உண்மை இருக்கிறதல்லவா?

சென்னை மாகாண

# நெல், மாவு & ஆயில் மில் உரிமையாளர்கள் மகாநாடு

## 22-11-59 காலை 9-30 மணிக்கு கடலூர் என். டி. டவுன் ஹாலில் நடைபெறும்

திறப்பாளர் : கனம் எம். பக்தவத்சலம் (உணவு, விவசாய மந்திரி)
தலைவர் : ஸ்ரீ எம். ராஜகோபாலன், (காரியதரிசி, த. நா. கா. க.)
தேசியக் கொடி ஏற்றுபவர் : ஸ்ரீமதி கே. பி. சுந்தராம்பாள், எம். எல். ஸி.
காந்திஜி படத் திறப்பாளர் : ஸ்ரீ கே. ராஜாராம் நாயுடு, (தலைவர், த.நா.கா.)
ஜவஹர் படத் திறப்பாளர் : ஸ்ரீ எம். எத்திராஜ், எம். எல். ஸி.
காமராஜ் படத் திறப்பாளர் : ஸ்ரீ ஏ. சுப்பிரமணியம், எம். எல். ஸி.

**பிரதிநிதி கட்டணம் ரூ. 5 பார்வையாளர் கட்டணம் ரூ. 1**

அனைவரும் வருக!

குறிப்பு : பிரதிநிதிகளுக்கு சாப்பாடும் தங்குவதற்கு வசதியும் செய்யப்பட்டிருக்கிறது

பிரதிநிதிக் கட்டணத்தை காரியதரிசிக்கு அனுப்பி வைக்கவும்
அவசியம் விஜயம் செய்து ஆதரிக்குமாறு கேட்டுக்கொள்கிறோம்

வி. கே. எஸ். ஷண்முகசுந்தர நாடார்
மணிமேகலை மில்ஸ், கடலூர் ஓ. டி.
வரவேற்புக் கமிட்டி தலைவர்

டி. சீனிவாச ரெட்டியார்
ஜெயா ரைஸ் மில்ஸ், மஞ்சகுப்பம்
வரவேற்புக் கமிட்டி காரியதரிசி

# ஆஸ்தமா பிராங்கைடீஸ் குளிர்சுரம்

முதலியவைகளை எப்படி அடக்குவது

மூச்சுத் திணரல், இருமல், சிரமப்பட்டு மூச்சு விடுதல் சுவாசம் தடைபடுதல் ஆஸ்த்மா, ப்ராங்கைடீஸ், ஜலதோஷம், குளிர் சுரம் முதலிய உபாதைகளால் அவதிப்படும் பல்லாயிரக்கணக்கான பேர்கள் இப்பொழுது மெண்டாகோ Mandaco) சாப்பிட்டு நிவாரணம் அடையலாம். இந்த நவீன விஞ்ஞான அமெரிக்க மருந்து, இரத்தத்தின் மூலமாக சுவாசப்பைகள், சுவாசக் குழாய்கள், மற்றும் மூக்குக்குச் சென்று அங்கு கெட்டியாக அடர்ந்துள்ள சளியை இளக்கிக் கரைக்கிறது. பின்னர் நீங்கள் இருமல் மற்றும் சிரமப்பட்டு மூச்சுவிடுதல், இல்லாமல் சுகமாக சுவாசித்து குழந்தைபோல் தூங்கலாம். பூரண திருப்தி உங்களுக்கு அது நிச்சயமாக அளிக்கும்.

# உங்கள் சருமத்தை சுத்தமாக வையுங்கள்

நிக்ஸோடர்ம் (NIXODERM) உபயோகித்தால் முகப் பருக்கள் எல்லாம் மறைந்துவிடுகின்றன. இன்றிரவு நிக்ஸோடர்ம் (NIXODERM) உபயோகியுங்கள். உங்கள் சருமம் மிருதுவாகவும், வழவழப்பாகவும் மாக மறுவின்றியும் ஆவதைக் கவனிப்பீர்கள் நிக்ஸோடர்ம் (NIXODERM) சருமத்தின் மீது ஏற்படும் முகப் பருக்கள், கட்டிகள் செந்நிறத் தழும்புகள், மேலாகப் பரவும் படை, படர் தாமரை, வெடிப்புகள் முதலிய உபாதைகளுக்குக் காரணமான கிருமிகளையும் பூச்சிகளையும் அழிக்க விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்டது. உங்கள் சருமத்தின் மெல்லிய துவாரங்களில் இருக்கும் பூச்சிகளையும், கிருமிகளையும் அழித்தாலன்றி உங்கள் சரும உபாதைகள் விலகா. இன்றே உங்கள் கெமிஸ்டிடம் நிக்ஸோடர் (NIXODERM) வாங்குங்கள். முகப் பருக்களை மறையச் செய்து சருமத்தை மிருதுவாகவும் வழவழப்பாகவும் அது இருக்கச் செய்யும் என்ற பூர்ண நம்பிக்கையுடன் நிக்ஸோடர்ம் (NIXODERM) வாங்குங்கள்.



**அப்பு :** ஏன், ஐயா கோவிந்தசாமி! போன திங்கட்கிழமை எங்கே உம்மைக் கண்ணிலேயே காணோம்.... என்னோடு அழைத்துக்கொண்டு போகணும் என்று உம்மை வலை போட்டுத் தேடினேன், கிடைக்கவில்லை...அடாடா! அற்புதம், அபாரம் அந்த டான்சுகள் போம்....!

**கோவி :** எந்த டான்ஸுகளைப் பற்றிச் சொல்லுகிறீர் என்று நானே சொல்லி விடுகிறேன். அண்ணாமலை மன்றத்தில் நடந்ததே அந்த அமெரிக்க டான்ஸுகள்தானே?

**அப்பு :** ஆமாம்! ஆமாம்! அது உமக்கு எப்படித் தெரியும்?

**கோவி :** நானும் அதற்கு வந்திருந்தேன்.

**அப்பு :** அடப் பாவி மனிதரே! யார் உமக்கு இலவச பாஸ் கொடுத்தது?

**கோவி :** உமக்கு 'பிரீ பாஸ்' கொடுத்தது யார்? முதலில் அதைச் சொல்லும்.

**அப்பு :** இது தெரியாதா உமக்கு? எங்கு போனாலும் எனக்குப் பாஸ் தேவையே இல்லை! 'அக்கப்போர் அப்பு' என்று என் பெயரைக் கேட்டதுமே எப்பேர்ப்பட்ட 'கலா நிகழ்ச்சி யானாலும் சரி, வாய் திறவாமல் உள்ளே விட்டு விடுவார்கள்.

**கோவி :** நீர் கோபித்துக் கொள்ளாதேயும்... 'அப்புவின் சிநேகிதர்' என்று சொல்லிக்கொண்டுதான் நானும் உள்ளே வந்துவிட்டேன். உள்ளே வந்து உமக்குத் தெரியாமல் பின் பக்கம் உட்கார்ந்து கொண்டிருந்தேன்.

**அப்பு :** இனிமேல் இப்படிச் செய்யாதேயும். என் பெயரைச் சொல்லிக்கொண்டு எல்லோருமே போக ஆரம்பித்து விடுவார்கள். அப்புறம் வீண் அக்கப்போர்கள் ஏற்படும்.

**கோவி :** ஏதோ கலை ஆசையினால் அப்படிச் செய்து விட்டேன். பேப்பரில் இமயமலை படையெடுப்பைப் பற்றியே படித்துப் படித்துக் காபராவாக இருந்ததால், ஒரு மாறுதலுக்காக அண்ணாமலை மன்றத்தில் நடந்த கலைப் படையெடுப்புக்கு வந்தேன்.

**அப்பு :** ஆமாம்; அன்று அமெரிக்க நடனக் கலைஞர்கள் நடத்திய டான்ஸ் விழாவை அப்படித்தான் கூறவேண்டும். அவ்வளவு பிரமாதமாக விளங்கி, மனத்திலிருந்த காபராக்களையெல்லாம்—சோர்வுகளையெல்லாம் துரத்தி அடித்துவிட்டது....! இந்த நடன விழாவைச் சென்னையில் நடத்தி, பண வசூல் முழுவதையும் தர்ம காரியங்களுக்கு அளிக்க முன் வந்த, சென்னை அமெரிக்க மாதர் சங்கத்தைப் பாராட்ட வேண்டும்.

**கோவி :** கேளுங்க அப்பு! இந்த நடனங்களில் பல விஷயங்கள் எனக்கு அதிகம் புரியாவிட்டாலும்....

**அப்பு :** என்னென்ன புரியவில்லை?

**கோவி:** இந்த நிகழ்ச்சிகளை 'நடன ஜுபிலி' என்றார்களே, அது என்ன?

**அப்பு :** அப்படிக் கேளும், சொல்லுகிறேன். சென்ற அறுபது வருடங்களில் அமெரிக்காவில் நடனக் கலை எவ்வாறெல்லாம் மாறுதல் அடைந்து வளர்ந்து வந்திருக்கிறது என்பதைத் தான் ஒரு கோவையாக அமைத்து, அதற்கு ஜுபிலி நிகழ்ச்சிகள் என்று கூறினார்கள்.

**கோவி :** அப்படியா சமாசாரம்?

**அப்பு :** அந்தக் காலத்து அமெரிக்க கனவான்களின் நடனம், தெரு நடனம், இரவு நடனம், பிரார்த்தனை நடனம், நாடோடி



நடனம் என்று பல அயிட்டங்களை இந்த ஜூபிலியில் ஆடினார்கள். இவை தவிர....

**கோவி :** எல்லாரும் பொம்மைகள் போல் தங்களைப் பாவித்துக் கொண்டு விறைப்பாகக் கைகால்களை அசைத்துக் கொண்டு ஆடினார்களே, அது என்ன?

**அப்பு:** அதுவா ? அது ஒரு பொம்மைக் கதையைப் பின்னணியாகக் கொண்டு அமைந்த நடனம். ஒரு மியூசியத்திலுள்ள பொம்மைகள் இரவு நேரத்தில் உயிர் பெற்று விடுகின்றன. ஆண் பொம்மை ஒவ்வொன்றும் தன்னுடைய காதலியை அழைத்துக் கொண்டு ஆடுகின்றது. இதில் சில பொம்மைகளுக்கிடையே சச்சரவுகளும் நடக்கின்றன. கதாநாயகனாகிய பொம்மையும், கதாநாயகியாகிய பொம்மையும் ஒரு சிறு விஷயத்தில் மனமுடைந்து பிராணனை விடுகிறார்கள்.

**கோவி :** கதாநாயகனாகவும் கதாநாயகியாகவும் நடனம் ஆடியவர்கள் யாரோ ?

**அப்பு :** அவர்தான் ராட் அலெக்ஸாண்டர் என்பவர். அவருடன் பொம்மைக் காதலியாக நடித்தவர்தான் ஸ்ரீமதி கெம்ளிடி லாப்பி என்பவர். நடனக் கலையில் அமெரிக்காவிலும், ஐரோப்பாவிலும் மிகவும் புகழ் பெற்றவர்கள் இருவரும். ஸ்ரீமதி லாப்பி பல பரிசுகள் பெற்றிருக்கிறார். திரை உலகிலும் புகழ் பெற்றிருக்கிறார்கள் இருவரும்.

**கோவி :** துப்பாக்கியால் கொள்ளைக்காரனைச் சுடுவதுபோல் ஒரு நடனக் காட்சி வந்ததே....

**அப்பு :** வந்தது. அதுவும் ஒரு காதல் சம்பவம்தான். வீரமும் காதலும் இணைந்த நடனம் அது.

**கோவி :** ஆனால், எனக்கு மிகவும் பிடித்தது குடையைப் பிடித்துக் கொண்டு கண் கவரும் உடைகளில் தோன்றி அவர்கள் ஆடிய நடனம்தான். அதன்பிறகு 'டக் டக் டக்' என்று குதிரைகள் சுற்றிச் சுற்றித் துள்ளி ஓடுவதுபோல் காணப்பட்ட நடனம்; இரண்டும் ரொம்ப நன்றாக இருந்தன.

**அப்பு :** எல்லா நிகழ்ச்சிகளுமே நன்றாகத்தான் இருந்தன. வாத்திய இசையும் நன்றாகத்தான் இருந்தது. மேடையில் இடையிடையே வந்து பாடிவிட்டுப் பெரும் 'அப்ளாஸ்'கள் வாங்கிச் சென்றாரே, கவனித்தீரா ? அவருடைய சாரீரமும் பிரமாதமாய் இருந்தது.

**கோவி :** ஸ்ரீமதி கெம்ளிடி லாப்பியுடன் நடனமாடிய இதர பெண்களும் அழகாக ஆடிய காட்சியைக் கட்டாயம் குறிப்பிடத்தான் வேண்டும்.

**அப்பு :** ஆண், பெண் இரு பாலாரும் தேர்ந்தெடுத்த நிபுணர்கள்தான்.

**கோவி :** கொஞ்சமாக உடைகள் அணிந்து பெண்கள் நடனம் ஆடியதைப் பற்றி, நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?

**அப்பு :** மேனாட்டு நடனங்களில் இவையெல்லாம் சாதாரணம். ஆனால் இங்கு வந்த அமெரிக்க நடன கோஷ்டியார் கூடுமானவரை இந்தியாவின் பண்புக்கு முரண்படாத வகையில் நிகழ்ச்சிகளை அமைத்துக் கொண்டு வந்தார்கள் என்று கேள்விப்பட்டேன்.

**கோவி :** பெண்களும் ஆண்களும் நட்டாமாலை சுற்றுவது போல் சுற்றுகிறார்கள். பெண்களை ஆண்கள் ஆகாயத்தில் தூக்கிச் சுழற்றுகிறார்கள். இவர்களும் அவர்களைப் பணிய வைக்கிறார்கள்.

**அப்பு :** அதையெல்லாம் ரசிக்கத் தெரிந்து கொள்ள வேண்டும். மேனாட்டு மக்கள் தங்கள் வாழ்க்கையில் ஓர் அம்சமாகவே, நடனக் கலையை வளர்த்து வருகிறார்கள். சந்தோஷம், துயரம் எதையும் நடனத்தால் வெளியிடும் பண்பு அங்கு வளர்ந்திருக்கிறது.

**கோவி :** ஒரு சின்ன சந்தேகம். ஆகாயத்தில் தூக்கி வீசி, கீழே பிடித்துத் தள்ளி இப்படியெல்லாம் ஒரு காட்சி நடந்ததே. அதில் கடைசியாக யார் ஜயித்தார்கள்? குஸ்திப் பந்தயம் போல் எனக்குத் தோன்றியதாலேயே கேட்கிறேன் உண்மை.

**அப்பு :** உம்முடைய கேள்வியே கேள்வி... இந்த மாதிரி வேறே யாரையாவது கேட்டு வைத்தால், உம்முடைய நண்பர் என்ற முறையில் எனக்குத்தான் அவமானம் வந்து சேரும். அதோ ! குப்புவும் வந்துவிட்டான் ஆட்டோ ரிக்ஷாவுடன். நான் கிளம்பவேணும், ஒரு மீட்டிங்குக்கு...

—'கொக்கி'

# ஆகாச வெடி

''உதகமண்டலத்தில் இந்தியப் பல் வைத்திய ஆராய்ச்சியாளர் கூட்டம் நடந்தது.''

— செய்தி

பிரசங்கிகள் பலர் குளிரால் பல்லைக் கடித்துக்கொண்டு, பேசாமலிருந்திருப்பார்களானால் ஆச்சரியமில்லை.

★

'' நகைகளால் மட்டும் குடும்பப் பெண்களுக்கு அழகு ஏற்படுவதில்லை.''

—இந்திய மந்திரி கிருஷ்ணப்பா

நகைக்கும் வார்த்தைகளாகவே இதைக் குடும்பப் பெண்கள் கருதுவார்கள் என்பதிலும் சந்தேகமில்லை.

'' இந்திய யூனியனைச் சேர்ந்த ஜூனாகத் சமஸ்தானப் பகுதியை பாகிஸ்தான் தனது தேசப் படத்தில் சேர்த்திருப்பது சின்னத்தனமாகும்.''

—ஒரு அரசியல்வாதி

சின்னத்தனமில்லா விட்டாலும், சினத்தனமாகும்.

★

''சப் மாஜிஸ்டிரேட் கோர்ட்டு கட்டிடத் திறப்பு விழா நடந்தேறிற்று. வந்திருந்தவர்களுக்குத் தாம்பூலம்,பழம் வழங்கப்பட்டது.''

—திருவையாறு செய்தி

அன்று கோர்ட்டுக்குப் போன அனைவரும் போன காரியம் 'பழம்' என்று சொல்லிக் கொண்டிருப்பார்கள் !

★ தமிழகத்தின் தவப் புதல்வர்களின் முன் வரிசையில் நிற்கும் டாக்டர் ஸர் ஸி. பி. ராமஸ்வாமி அய்யர் அவர்களுடைய 81-வது ஆண்டு பிறந்த நாள் விழா மிகச் சிறப்பாக அவருடைய இல்லத்தில் கொண்டாடப்பட்டது. நவம்பர் மாதம் 22-ந் தேதி சென்னை நகர மக்களின் விசேஷக் கமிட்டியினர் இவ் வைபவத்தைச் சிறப்பாகக் கொண்டாட ஏற்பாடு செய்திருக்கின்றனர். மேன்மைதங்கிய மைசூர் மகாராஜா அவர்களது தலைமையில் நடைபெறவிருக்கும் இச் சந்தர்ப்பத்தை யொட்டி, கல்கி வாசகர்களுக்கு ஏற்கனவே அறிமுகமான திரு சித்ரா எஸ். நாராயணஸ்வாமி அவர்கள் டாக்டர் ஸி. பி. அவர்களைப் பற்றி வழங்கிய கட்டுரையைக் கீழே பிரசுரித்திருக்கிறோம்.

— ஆசிரியர்

# கர்ம வீரர் டாக்டர் சி. பி.

## சித்ரா எஸ். நாராயணசுவாமி

**டா**க்டர் சி. பி. ராமசுவாமி ஐயரவர்களைப் பற்றி என்னைப் போன்றவர்கள் எழுதுவதில் சில சங்கடங்கள் உள்ளன. கடந்த பத்தாண்டுகளாக அவரைப் பற்றி எழுதுவதற்கு எனக்கு ஏற்பட்ட வாய்ப்புக்களையெல்லாம் அச்சத்தின் காரணமாகத் தவிர்த்து வந்திருக்கிறேன். எதற்கும் காரணம் கண்டு பிடிக்கும் மனநிலையில் இன்று நாம் வாழ்ந்து வருகிறோம். தகுதிக்கு உரிய புகழ்ச்சி எதையுமே, 'தடங்கலின்றி பெற்றுக் கொண்ட நன்மைக்கு நன்றி செலுத்தும் முறை தான்' என்று ஒரே வார்த்தையில் தள்ளி விடுவது வழக்கம். நமக்குப் பிடிக்காத ஒருவரை இன்னொருவர் புகழும் போது, 'கண்மூடித்தனமான வீரவணக்கம்' என்று நாம் தள்ளி விடுகிறோம் அல்லவா?

பல ஆண்டுகளுக்கு முன்பே டாக்டர் சி. பி. அவர்கள் போற்றுதலுக்கும், தூற்றுதலுக்கும் இலக்கானவர். போற்றுதல் அவருக்கு மகிழ்ச்சி தந்ததுமில்லை. தூற்றுதல் அவருக்குத் தளர்ச்சி தந்ததும் இல்லை. இன்றைக்கும் அதே நிலை தான். முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னால் சென்னையில் மின்சாரத் திட்டங்களை ஆரம்பித்த காலத்தில் மக்களுடைய ஐயப்பாடுகளுக்கும், திட்டங்களைத் தகர்த்துவிட அமைச்சர் குழுவின் சகாக்கள் செய்த சூழ்ச்சிகளுக்கும், நடுவில் இதே மனோ நிலையில் தான் அவர் செயலாற்றி வந்தார். இலக்கியத் துறையில் வல்லவராக இருப்பவர் செயல் வீரராகவும் இருப்பதற்கு இந்தியாவில் டாக்டர் சி. பி. அவர்கள் ஒரு சிறந்த உதாரண புருஷர். இத்தகையதொரு நல்ல இணைப்பு இந்தியாவில் காண்பது அரிது. அண்மையில் சி. பி. அவர்களின் இலக்கியப் படைப்புக்கள் மிக அதிகமாக வெளி வந்துள்ளன. ஆனால் அவற்றின் அளவால் ஏற்படும் பெருமையைக் காட்டிலும் வேறோர் பெருமையும் உள்ளது. பேரொளி விளக்கைப் போலப் பிரகாசம், ஆழம், பரப்பு, புலமை ஆகிய யாவும் அவருடைய எழுத்துக்களுக்குச் சிறப்பூட்டுகின்றன. இன்றைக்கும் கறுகறுப்புள்ள ஒரு மாணவன் தன்னுடைய சிந்தனைக் கட்டுரையை எவ்வளவு கவனத்துடன் தயார் செய்வானோ அதே போலத்தான் தம்முடைய சொற்பொழிவுகளை அவர் மிகுந்த கவனத்தோடு சொற்களை, பொருட்களை குன்றாது தயார் செய்கிறார்.



அவரது இல்லத்தில் சதாபிஷேகம் நடந்த அன்று ஸி. பி.

சில மாதங்களுக்கு முன்பு ஐதராபாத்தில் மோட்சகுண்டம் விசுவேசுவரையா சாசனச் சொற்பொழிவுகளை சி. பி. அவர்கள் நிகழ்த்தினார். அப்பேச்சுக்களிலிருந்து தற்காலத்துப் பொருளாதார வளர்ச்சி பற்றி அவருடைய ஊன்றிய படிப்பும், நுணுக்கங்களைப் பற்றி அவருக்கு இருந்த ஞானமும், ஆழ்ந்த பொருளாதார நோக்கும், எண்பதாண்டு வயதுள்ள ஒருவரிடம் எதிர்பார்க்க முடியாத 'நுண்மாண் நுழை புலனும்,' தெரியவருகின்றன. கடந்த பன்னிரண்டு ஆண்டுகளாக அவர் ஏராளமான நூல்களைப் படித்து வருகிறார். கவர்ச்சிகரமான உதக

மண்டலத்தின் மனோகரமான அமைதியுள்ள சூழ்நிலையும், தனிமையின் இனிமையும், படிப்பதற்குத் தகுந்த தூண்டுகோல்களாகும் என்று சொல்லக்கூடும். ஆனால் அதேமாதிரி உதகமண்டலத்தில் வசிப்பவர்களில் இவ்வாறு படிக்கும் பழக்கம் பலரிடம் இருப்பதாக நான் கண்டதில்லை. மற்றோர் குறிப்பிடத்தக்க பண்பும் அவருக்கு உண்டு. ஒரு பொருளைப் பற்றிப் பேசும்போதும், விரிவுரையாற்றும் போதும் கூட எழுதும்போதுள்ள இலக்கியத் திறனோடு பேசவும், விரிவுரையாற்றவும் அவரால் முடியும். இந்த நாட்களிலும் கூடக் கருத்துக்களை எழுதிக் குறிப்பதைப் போலவே அவற்றைக் கூறும்போதும் ஆற்றல் கனிந்து மிருமாறு கூற வல்லவர் சி. பி. அவர்கள். ஜியார்ஜ் பெர்னார்ட்ஷா தம் நாடகங்களை முதலில் கருக்கெழுத்தில்தான் எழுதிக் கொள்வாராம். கருத்து ஓட்டத்தின் வேகம் தடைபடாமல் இருக்க எழுத்து ஓட்டமும் வேகமாக இருக்கவேண்டுமென்று இந்த முறையை அவர் கையாளுவாராம். அதே போலவே ஸர் சி. பி. அவர்களுடைய கருத்தின் மனோவேகம் சாதாரணமாக அவர் எழுதும் எழுதுகோல், காகிதங்களைக் காட்டிலும் திறமை வாய்ந்த அவருடைய செயலாளரின் சுருக்கெழுத்துத் திறமையுடன் போட்டியிடும்.

டாக்டர் சி. பி. அவர்கள் பொருளாதாரத் துறையில் தீர்க்கதரிசனம் வாய்ந்தவர். பலரைக் காட்டிலும் எதிர்காலத்தை எட்டிப் பார்க்கும் ஆற்றல் வாய்ந்தவர். இந்தியாவில் திட்டம் வகுக்கும் ஆக்க உள்ளம் இருந்தால் மட்டும் போதாது. ஆக்க வேலைகளைச் செயலில் தாங்களாகச் செய்தறியாதவர்களும், அவற்றைச் செய்யாமலிருப்பதற்கு விசேடமான மனப்போக்குடையவர்களையும் ஏற்றுக் கொள்ளச் செய்வதே சிரமமான வேலை. பெரிய பதவிகளில் சிறிய மனிதர்கள் இருப்பதாலேயே உலகம் முழுதும் அரசாங்கங்கள் சிக்கல்களில் மாட்டிக் கொள்கின்றன. அனுபவமற்றவர்களையும், சிறுமையுள்ளம் கொண்டவர்களையும் எதிர்த்து நீண்ட போராட்டம் நடத்திவந்ததே சி. பி. அவர்களின் நிர்வாக வாழ்வில் ஓர் சிறந்த அம்சமாகும்.

தமது ஆட்சிக் காலத்தில் திருவாங்கூரின் வாழ்க்கை நிலையை அவர் தெளிவாக எளிதில் உணர்ந்து கொண்டார். படிப்புத் தரம் உயர்ந்திருப்பதையும் வாழ்க்கை வறுமை மிகுந்திருப்பதையும், வேலையில்லாத் திண்டாட்டத்தையும் கண்டு அவைகள் தாம் அந்த ராஜ்யத்தின் முக்கிய பிரச்னைகளென்பதை உணர்ந்தார். எனவே திருவாங்கூரைத் தொழில் வளம் மலியச் செய்யும் முயற்சியில் தீவிரமாக இறங்கினார். தொழில்களுக்கான மூலப்பொருள்களும், வசதிகளும் கிடைக்கும் இடங்களை ஆராய்ந்தார். தொழில் வளத்துக்கு மின்சாரம் முதலாவது அவசியம் என்பதை உணர்ந்து 'பள்ளிவாசல் மின்சாரத் திட்டத்தை'ச் செயல்படுத்தினார்.

அன்று மலையாளப் பத்திரிகைகள் இம் மின்சாரத் திட்டத்தால் கிடைக்கும் மின்சார வசதியில் பெரும் பகுதி உபயோகமின்றிப் போய்விடும் என்று கூறின. ஆனால் இன்றோ பற்றாக்குறை காரணமாக வெளி மாகாணங்களிலிருந்து கேரளம் மின்சாரத்தை விலைக்குப் பெறுகிறது. சி. பி. அவர்கள் ஆல்வாயில் 'இந்தியன் அலுமினியம் கம்பெனி'யை ஏற்படுத்தச் செய்தார். ஒரு பெரிய உர உற்பத்திச் சாலையையும் ஏற்படுத்தினார். பெரும்பாவூரில் ரயான் ஆலையையும் உண்டாக்கினார். குண்டாராவில் அலுமினியம் தொழிலையும், கோட்டயத்தில் 'சிமெண்ட்' தொழிலையும், 'கவளி'யில் 'டிடானியம் டையாக்ஸைடு' தொழிற் சாலையையும் வளம்பெற ஏற்பாடுகள் செய்தார். 'திருவாங்கூர் பாங்கும்' அவராலேயே நிறுவப் பெற்றது. இவ்வாறு அவர் குறுகிய காலத்தில் திருவாங்கூர் முழுதும் தொழில்வளம்பெருகச்செய்தார்.

டாக்டர் சி. பி.யின் நிர்வாகச் செயல்களின் நீண்டகால நலன்கள் சரியாகப் புரிந்து கொள்ளப்படாமல் முதலில் தப்பாகப் புரிந்து கொள்ளப்படுவது அவருடைய துரதிருஷ்டமாகும். அவருடைய காரியங்களைக் காலம் சரியென்று நிரூபித்துக் காட்டியதை மக்கள் இன்று நேரில் கண்டு களிக்கின்றனர்.

டாக்டர் சி. பி. அவர்கள் எழுபது வயதுக்குப் பின்னர் அமெரிக்கப் பல்கலைக் கழகங்களிலும், சான்பிரான்ஸிஸ்கோவில் ஆசியக் கல்விக் கழகத்திலும், சொற்பொழிவுகள் செய்ய ஒப்புக்கொண்டார். எண்பதாண்டுகள் பயன் நிறைந்த வாழ்க்கையை நடத்திய பின்னர் டாக்டர் சி. பி. அவர்கள் சர் எம். விசுவேசுவரையாவைப் போல் நீண்ட வாழ்வு என்னும் மலைச் சிகரத்தின் மீதிருந்து தமது திட்டங்கள் நிறைவேறி வருவதைக் கண்டு களித்து வருகிறார். விசுவேசுவரையா அவர்களைப் போலவே டாக்டர் சி. பி. அவர்களும் பல்லாண்டு வாழ்வார்களாக.

# வேஷம் கலைந்தது

கொழும்பு, நவம்பர் 12உ

பிரதம மந்திரி திரு விஜயானந்த தஹநாயகா தமது சக மந்திரிகளுக்கும் இலாகா தலைவர்களுக்கும் இவ்வாரம் அனுப்பி வைத்துள்ள ஒரு சுற்று நிருபம் மிகுந்த கவலையைக் கொடுப்பதாக இருக்கிறது. புதிய பிரதமர் பதவிக்கு வந்தவுடன் தமிழ் பேசும் மக்களுக்கு அநீதி இழைக்கப்பட்டிருக்கிறதென்றும் அந்த அநீதியைப் போக்கி அவர்களுடைய நம்பிக்கையைப் பெறவும் நாட்டின் அமைதியையும் சமாதானத்தையும் நிலைநிறுத்தவும் தம்மால் இயன்றதையெல்லாம் செய்யப் போவதாகவும் அறிவித்தார். பொதுத் தேர்தலை ஏன் உடனடியாக நடத்த முடியாதென்பதற்குக் காரணம் கூறுகையில்கூடத் தமிழ் மக்களின் நியாயமான குறைபாடுகளைக் கவனிக்க வேண்டியிருப்பதாக அவர் சொன்னார். இக் கூற்றுகள் அவருக்குத் தமிழ் மக்களிடம் சற்று அனுதாபம் இருப்பதைப் போலத் தோன்றச் செய்தன. மொழி விஷயத்தில் தமிழர்களுக்குச் செய்யப்பட்டுள்ள அநியாயத்துக்குப் பிரதமர் பரிகாரம் செய்வதென்றும் நம்புவதற்கு அவருடைய அறிக்கைகள் இடமளிப்பதாக இருந்தன. ஆனால் இவ்வாரம் சக மந்திரிகளுக்கும் இலாகா தலைவர்களுக்கும் பிரதமர் அனுப்பியிருக்கும் சுற்று நிருபம் அவருடைய வேஷத்தைக் கலைத்து, உண்மையான சொரூபத்தைக் காட்டி விட்டது.

இலங்கையின் இன்றைய அவல நிலைமைக்கெல்லாம் அரசாங்கம் தனிச் சிங்களச் சட்டத்தை இயற்றி வகுப்புவாத பூதத்தைக் கிளப்பியதுதான் மூல காரணமென்பதை யாவரும் அறிவர். அரசாங்கம் கிளப்பிய வகுப்புவாதம் நாட்டில் ரத்தக் களரியை உண்டு பண்ணி, பல நூற்றுக்கணக்கானவர்களைப் பலி வாங்கியிருக்கிறது. ஒரு பிரதம மந்திரியே பட்டப் பகலில் படுகொலை செய்யுமளவுக்கு நாட்டில் அராஜகத்தைத் தழைக்கச் செய்து விட்டது. இதன் பிறகேனும் ஆட்சியாளர்களுக்கும் வகுப்புவாதிகளுக்கும் புத்தி தெளிந்திருக்கு மென்று எதிர்பார்ப்பது இயற்கை. பிரதமர் தஹநாயகா தமிழ் மக்களுக்கு ஆதரவாகப் பேசியபொழுது, அது வெறும் வேஷமென்றும் கடும் வகுப்புவாதியான அவரிடமிருந்து தமிழ் மக்கள் எவ்வித நன்மையையும் எதிர்பார்க்க முடியாதென்றும் எதிர்க்கட்சித் தலைவர் டாக்டர் என். எம். பெரைரா எச்சரித்தார். காலஞ் சென்ற பிரதமர் பண்டாரநாயகாவை ஒரு கடும் வகுப்புவாதியாக்கியதற்குத் திரு தஹநாயகா மூலகாரணமென்றும் டாக்டர் பெரைரா ஒரு அறிக்கை விட்டிருந்தார். இது எவ்வளவு தூரம் உண்மை என்பதைத் திரு தஹநாயகா இப்பொழுது பட்டவர்த்தனமாகக் காட்டி விட்டார். இவ்வாரம் அவர் வெளியிட்டிருக்கும் ஒரு சுற்று நிருபத்தில் தனிச் சிங்களச் சட்டத்தைத் தீவிரமாக அமுல் நடத்த வேண்டும் என்றும், அரசாங்கத்துடன் சிங்களத்திலேயே சகல கடிதப் போக்குவரத்துகளையும் நடத்த வேண்டுமென்றும் வர்த்தக ஸ்தாபனங்களையும் கட்டாயப்படுத்த வேண்டுமென்றும் திரு தஹநாயகா உத்தரவிட்டிருக்கிறார். நாட்டு மக்கள் ஒவ்வொருவருக்கும் அவர்களது தாய்மொழியில் கடிதம் எழுதும் உரிமை உண்டு என்றாலும் இந்தச் சலுகையை வர்த்தக ஸ்தாபனங்களுக்கு அளிக்கக் கூடாதென்று புதிய பிரதமர் உத்தரவிட்டிருக்கிறார். ஒவ்வொரு பிரஜைக்கும் தாய்மொழியில் கடிதம் எழுத உரிமையுண்டு என்றால் வர்த்தக ஸ்தாபனத் தலைவர்கள் இந்நாட்டுப் பிரஜைகளல்லவா? அவர்களுக்கு மட்டும் இந்தச் சலுகையை ஏன் மறுக்க வேண்டும் என்பது முதலாவது கேள்வி. வர்த்தக ஸ்தாபனங்களில் தமிழர்களும் மற்றவர்களும்தான் அதிகம். சிங்களவர்கள் குறைவு. எனவே பிரதமரின் உத்தரவு தனிச் சிங்களத்தைத் தமிழர் மீது மறைமுகமாகவும் வலுக்கட்டாயமாகவும் திணிப்பதாக இருக்கும். அரசாங்கத்தின் இவ்வித முயற்சி கடந்த காலங்களில் நாட்டின் அமைதியைச் சீர்குலைத்தது போதாதா? மீண்டும் ரத்தக் களரியை உண்டு பண்ணப் பிரதமர் திட்டமிடுகிறாரா என்பது இரண்டாவது கேள்வி. தமிழ் மக்களின் நியாயமான குறைபாடுகளை நீக்கப் போவதாக உறுதிமொழியளித்ததெல்லாம் எதிர்க் கட்சித் தலைவர் எச்சரித்ததைப் போல் வெறும் பகல் வேஷமா என்பது மூன்றாவது கேள்வி. பிரதமரின் இந்தச் சுற்று நிருபம் தமிழ் மக்களுக்கு மிகுந்த கவலையையும் கிலேசத்தையும் கொடுத்திருக்கிறது.

* * *

இதைப் பற்றி ஊர்க் காவற்றுறை பார்லிமெண்ட் அங்கத்தினரும் தமிழரசுக் கட்சிப் பிரமுகருமான திரு வி. ஏ. கந்தையா என்பவர் வெளியிட்டிருக்கும் ஒரு அறிக்கையில் நெருக்கடிகள் மலிந்துள்ள இத்தருணத்தில் மக்களின் கவனத்தை வேறு வழியில் திருப்புவதற்காகவே பிரதமர் நடவடிக்கை யெடுப்பதாகத் தோன்றுகிறதென்றும், அவரது அறிக்கை ஒரு அரசியல் தில்லுமல்லு என்றும் காலஞ்சென்ற பிரதமர் பண்டாரநாயகா அளித்த வாக்குறுதிகளைக்கூடப் புதிய பிரதமர் மீறுவதாயும் சுட்டிக்காட்டியிருக்கிறார். தனிப்பட்ட பிரஜைகளும் வர்த்தக ஸ்தாபனங்களும் அரசாங்கத்துக்கு எந்த மொழியில் கடிதம் எழுதுகிறார்களோ, அதே மொழியில் பதில் அளிக்கப்படுமென்று காலஞ் சென்ற பிரதமர் பார்லிமெண்டில் வாக்களித்தார். அந்த வாக்குறுதியை மீறுகிறது புதிய பிரதமர் தனிச் சிங்களத்தை வர்த்தக ஸ்தாபனங்கள் மீது திணிக்க இப்பொழுது நடவடிக்கையெடுப்பது என்கிறார் திரு வி. ஏ. கந்தையா.

## நம்பிக்கையில்லாத் தீர்மானம்

—கொழும்பு, நவம்பர் 5உ

சென்ற ஒரு மாத காலமாகப் பதவியில் இருந்துவரும் தஹநாயகா அரசாங்கத்தின் மீது எதிர்க் கட்சிகள் கொண்டுவந்த நம்பிக்கையில்லாத் தீர்மானம் தோல்வியடைந்து விட்ட பொழுதிலும் அத் தீர்மானம் அரசாங்கத்தினிடம் பார்லிமெண்டுக்கு நம்பிக்கை

வில்லையென்பதை அப்பட்டமாகத் தெரிவித்திருக்கிறது. ஐந்து வோட்டுகளினால் நம்பிக்கையில்லாத் தீர்மானத்தை அரசாங்கம் தோற்கடித்திருப்பது உண்மையே. ஆயினும் மக்களினால் தேர்ந்தெடுக்கப்படாத ஆறு நியமனப் பிரதிநிதிகளும் சபையில் பிரசன்னமாகியிருந்து அரசாங்கத்தை ஆதரித்து வோட்டுக் கொடுத்து அதற்கு உயிர்ப்பிச்சையளித்திருக்கிறார்கள். எனவே உண்மையைச் சொல்லப்போனால் தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்களில் ஒரு வோட்டினால் அரசாங்கம் தோற்கடிக்கப்பட்டுள்ளதென்றே கூற வேண்டும். ஜனநாயக நாட்டில் தெரிவு செய்யப்பட்ட அங்கத்தினர்களே மக்களின் கருத்தைப் பிரதிபலிப்பவர்களென்றும் அரசாங்கத்திடம் மக்களுக்கு நம்பிக்கையில்லையென்பது தெளிவாகத் தெரிந்துவிட்டபடியினால் தஹநாயகா அரசாங்கத்துக்கு ஒரு நிமிடம் கூடப் பதவியில் தொடர்ந்திருக்க உரிமையோ தகுதியோ இல்லை என்றும் எதிர்க்கட்சித் தலைவர் டாக்டர் என். எம். பெரைரா ஒரு அறிக்கை வெளியிட்டிருக்கிறார். நம்பிக்கையில்லாத் தீர்மானத்தின் விவாதத்துக்குப் பிறகு தஹநாயகா அரசாங்கம் ஆளும் உரிமையை இழந்துவிட்டதென்றும் உடனே ராஜினமா செய்து பொதுத் தேர்தல் நடத்துவதுதான் அதற்கு மரியாதையென்றும் நாட்டிலுள்ள ஆங்கிலப் பத்திரிகைகளும் சிங்களப் பத்திரிகைகளும் ஒருமுகமாக வற்புறுத்தி வருகின்றன. ஆனால் வீரகேசரியென்ற தமிழ்ப் பத்தி-



முப்பதாண்டுகளுக்கு முன் சென்னையில் பிரபல டாக்டராக வாழ்ந்த டாக்டர் நஞ்சுண்டராவ் அவர்களின் திருவுருவப் படத்தைச் சமீபத்தில் சென்னை விவேகானந்தா கல்லூரியில் டாக்டர் ஸி. பி. ராமஸ்வாமி அய்யர் அவர்கள் திறந்து வைத்தார். டாக்டர் நஞ்சுண்டராவ் அந்தக் காலத்தில் பிரபல டாக்டராக இருந்தாற்போலவே அரசியல் துறையிலும் பொது வாழ்விலும் முன்னணியில் நின்று சென்னைக்கு ஒரு திலகமாக விளங்கினார். அன்னாளில் அவருடன் பெருந் தலைவர்கள் எல்லாரும் தொடர்பு கொண்டிருந்தார்கள். அரசியலில் தீவிரக் கட்சியாருடன் இருந்தாலும் எல்லாருடன் நட்புறவுகொண்டு திகழ்ந்தார். அவருடன் பழகும் வாய்ப்புப்பெற்ற ராஜாஜி இவ்விழாவுக்குத் தலைமைதாங்கி ரஸமான சில சம்பவங்களை நினைவுகூர்ந்தார். டாக்டர் நஞ்சுண்டராவ் அவர்களின் புதல்வர் டாக்டர் தாமோதரம் அவர்கள் அவ்வுருவப் படத்தை விவேகானந்தா கல்லூரிக்கு வழங்க, ஸ்ரீ சுப்பராய அய்யர் கல்லூரியின் சார்பாக அதை மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொண்டார்.

ரிகை மாத்திரம் உடனடியாகப் பொதுத் தேர்தல் நடத்துவதை ஆதரிக்கவில்லை. மக்கள் நம்பிக்கையை யிழந்துவிட்ட தஹநாயகா அரசாங்கத்துக்கு ஆளும் யோக்கியதை இல்லையென்பதை வீரகேசரி ஒப்புக்கொண்ட பொழுதிலும் மக்களின் மனம் குழம்பியிருக்கும் இத்தருணத்தில் நடத்தும் பொதுத்தேர்தல் உண்மையானதொரு ஜனநாயக அரசாங்கத்தையோ அல்லது ஸ்திரமான அரசாங்கத்தையோ தோற்றுவிக்குமென்ற நம்பிக்கைக்கு இடமளிக்கவில்லையென்றும் ஆகையால் சர்வ கட்சி அரசாங்கம் ஒன்றை நிறுவி, நாட்டில் அமைதியையும் நல்லெண்ணத்தையும் பொதுத் தேர்தல் நடத்துவதற்கான சூழ்நிலையையும் முதலில் உண்டு பண்ணவேண்டுமென்றும் கூறியிருக்கிறது.

## பதவி துறக்கும் எண்ணமில்லை

நம்பிக்கையில்லாத் தீர்மானத்தைப்பற்றிப் பிரதம மந்திரி திரு விஜயானந்த தஹநாயகா வெளியிட்டிருக்கும் ஒரு அறிக்கையில் தமது அரசாங்கம் கண்டிப்பாகப் பதவி துறக்கப் போவதில்லையென்றும், பார்லிமெண்டின் சாதாரண ஆயுட்காலமான 1961-ம் வருட ஏப்ரல் மாதத்துக்கு ஒரு நாள் முன்புகூடப் பொதுத் தேர்தல் நடைபெற மாட்டாதென்றும் அழுத்தம் திருத்தமாக அறிவித்திருக்கிறார். ''கூப்பாடு எல்லாம் ஒருவிதமாக முடிந்துவிட்டபடியால் இனி நாங்கள் வேலை செய்ய ஆரம்பிக்கப் போகிறோம். மக்களின் பசிப் பிணியைப் போக்க நாட்டின் பொருளாதாரத்தை அபிவிருத்தி செய்ய வேண்டியிருக்கிறது. அரசாங்கத்தினிடம் தமிழ் மக்களுக்குப் பல குறைபாடுகள் இருப்பதால் அவற்றைக் கவனித்துப் பரிகாரம் செய்ய வேண்டியிருக்கிறது. அவசரமான பல பிரச்னைகள் நாட்டை எதிர்நோக்கியிருப்பதால் அவற்றில் உடனடியாகக் கவனம் செலுத்தப் போகிறோம். நாங்கள் ராஜிநாமாச் செய்வதென்ற பேச்சுக்கோ பொதுத்தேர்தல் நடத்துவதென்ற பேச்சுக்கோ இடமே கிடையாது.'' இவ்வாறு பிரதம மந்திரி ஒரு அறிக்கை வெளியிட்டிருக்கிறார். இதைப் பற்றி எதிர்க் கட்சித் தலைவர் டாக்டர் என். எம். பெரைரா வெளியிட்டிருக்கும் ஒரு பதில் அறிக்கையில் பிரதம மந்திரி விரும்பினாலும் சரி, விரும்பாவிட்டாலும் சரி, பொதுத்தேர்தல் நடைபெற வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டே தீருமென்றும் எதிர்க்கட்சிகளுக்கும் நாட்டு மக்களுக்கும் மாத்திரமின்றி அவருடைய சக மந்திரிகளுக்கே அவருடைய திறமையில் நம்பிக்கையில்லாதிருக்கும்பொழுது அவருடைய அரசாங்கம் எப்படி நீடிக்க முடியுமென்றும் கேட்கிறார். பண்டாரநாயகா படுகொலை சம்பந்தமாக நடைபெறும் விசாரணையில் திருப்தியில்லாமல் பல மந்திரிகள் கவர்னர்ஜெனரலைச் சந்தித்து அவருடைய தலையீட்டை நாடியதை எதிர்க் கட்சித் தலைவர் சுட்டிக்காட்டி, பிரதமரிடம் சக மந்திரிகளுக்கு நம்பிக்கையிருந்தால் அவர்கள் முதலில் பிரதம மந்திரியிடம் சென்று தங்களுடைய அதிருப்தியைத் தெரிவித்துக் கொண்டிருப்பார்களேயன்றி கவர்னர் ஜெனரலிடம் போவார்களா? சக மந்திரிகளே நம்பாதவரை நாட்டு மக்கள் நம்புவார்களென்று எப்படி எதிர்பார்க்க முடியும்? என்று எதிர்க் கட்சித் தலைவர் கேட்டிருக்கிறார்.

உங்களுக்குத் தேவையான
இடத்தில் தீபம் (ஒளி)
உங்களுக்கு தேவையான
இடத்தில் அடுப்பு...



# பிரபாத்

விளக்குகளும
ஸ்டவ்களும்

பிரபாத் விளக்குகளும், ஸ்டவ்
களும் மிகச் சிறந்தவை, லே
சானவை, உறுதியானவை,
கைக்காரியத்துக்கு உகந்தவை.
அதனால் தீபமும் அடுப்பும்
உங்களுக்கு தேவையான
இடங்களுக்கு இலகுவாய்
கொண்டுபோகலாம்.
பிரயாணிகளுக்கும்,
பிக்னிக், முதலிய
வற்றுக்கும் மிகவும்
சிறந்தவை.







"இந்தியாவில் முதன்மை
யானவை--- இன்றும்
முதல் தரமானவை"

பிரபாத் ( ஸ்டவ்ஸ் & லாம்ப் ) பிராடெக்ட்ஸ் கம். பிரைவேட் லிட்.
கோவின் சேம்பர்ஸ், பார்ஸி பஜார் தெரு, போர்ட், பம்பாய்-1.

K. S. K.

TAM

# நேருஜியும் படுகுழியும்

ராஜாஜி

சுதந்திரக் கட்சியைப் பின்பற்றினால் தேசம் அதோகதி அடையவேண்டியதுதான் என்று நேருஜி சொன்னார். அவர் எந்தக் கருத்தை மனத்தில் கொண்டு அவ்வாறு சொன்னார் என்பது தெரியவில்லை.

காந்தி மகானின் முக்கியமான கருத்துக்களை முன்னால் கொண்டு மக்களிடத்தும், உண்மையினிடத்தும் அஹிம்சையினிடத்தும் பூரண நம்பிக்கை கொண்டு சுதந்திரக் கட்சி இயங்கத் தீர்மானித்திருப்பதனால் நேருஜி தேசம் அதோகதி அடைந்து விடும் என்று கருதுகிறாரா? அல்லது காங்கிரஸ் கட்சிக் கங்காணிகள் சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் மீது கட்சிச் செல்வாக்கை உபயோகப்படுத்தி அவர்களைத் தங்களுக்குரிய கடமைகளிலிருந்து தவறான வழிகளில் நடந்து கொள்ளச் செய்யும் முறைகளைச் சுதந்திரக் கட்சி எதிர்ப்பதனால் இவ்வாறு கருதுகிறாரா?

அல்லது சுதந்திரக் கட்சி தனது 18வது கொள்கையால் நிலத்தில், தொழிற்சாலையில், கடைகளில் வேலை செய்யும் அத்தனை மக்களுக்கும் நியாயமான ஊதியம் கிடைக்கச் செய்ய உறுதி கொண்டிருப்பதாலும், தொழிலாளிகளுக்கும் முதலாளிகளுக்கும் மனஸ்தாபம் ஏற்பட்டால் மத்யஸ்தம் ஏற்படுத்தி, சமாதான முறையில் குறைகளைத் தீர்க்க முடிவு செய்திருப்பதனாலுமா நேருஜி அவ்வாறு கருதுகிறார்?

அல்லது சர்க்காரின் நிர்வாகச் செலவைக் கணிசமாகக் குறைக்க வேண்டும் என்பதனாலா? அல்லது நாணயமும் திறமையும் உத்தியோகத் துறையில் இருக்க வேண்டும் என்று சொல்வதாலா? தனி மனிதர்களும் தனிப்பட்ட ஸ்தாபனங்களும் திறமையாகவும் சிக்கனமாகவும் செய்யக் கூடிய காரியங்களைச் சர்க்கார் எடுத்துக்கொண்டு உத்தியோக வர்க்கத்தை விரிவுபடுத்துவதை எதிர்ப்பதனாலா நேருஜி இவ்வாறு எண்ணுகிறார்?

சுதந்திரக் கட்சி சர்க்கார் செலவைக் குறைக்க வேண்டும் என்கிறது. தாங்க முடியாத வரிப் பளுவை எதிர்க்கிறது. மிதமிஞ்சிய பற்றுக்குறை பட்ஜெட் சமர்ப்பித்து விலைகள் ஏறச் செய்வதை எதிர்க்கிறது. அடைக்கக் கூடிய சக்திக்கு மேல் வெளி நாட்டுக் கடன் வாங்குவதைக் கண்டிக்கிறது. இவற்றினால் எல்லாம் சுதந்திரக் கட்சி தேசத்தை அழிவுப் பாதையில் ஆழ்த்தி விடும் என்று நேருஜி கருதுகிறாரா?

சுதந்திரக் கட்சியினர் மக்களுக்கு உண்ண உணவும், குடிக்க நீரும், வசிக்க வீடும் அளிப்பதுதான் முதன்மையாகக் கவனிக்க வேண்டிய காரியம் என்ற கருத்துக்கொண்டிருக்கிறார்கள். இதில் ஒன்றும் அபாயமில்லை அல்லவா? தானே முதலாளியாகவும் பாட்டாளியாகவும் இருந்து வேலை செய்யும் சுதந்திர விவசாயியின் முயற்சியின் காரணமாகத்தான் நாட்டின் உணவுப் பற்றுக்குறை தீரும். இத்தகைய விவசாயிகளுக்குச் சர்க்கார் உதவி யளிப்பதன் மூலமே உணவு உற்பத்தி பெருகும். இவையெல்லாம் தவறான கொள்கைகள் என்று நேருஜி எண்ணுவதாலா, மேற்கண்டவாறு பேசினார்?

வாணிபத் துறையில் போட்டி உண்டானால் தான், உண்மையான பொருள் உற்பத்தி நாட்டில் உண்டாகும் என்று இக் கட்சி கருதுகிறது. வரம்பு மிஞ்சிய லாபம் சம்பாதித்தால், விலைகளை உயர்த்தல், பங்குதாரர்களுக்கு வரம்பு கடந்த லாபத்தை வழங்குதல் முதலியவற்றில் முதலாளிகள் ஈடுபட்டால், அப்போதுதான் அக்குறைகளை நீக்கச் சர்க்கார் நுழைய வேண்டும் என்று சுதந்திரக் கட்சி கருதுகிறது. தொழில்களில் சர்க்கார் நுழைந்து தாமே நடத்தினால் உற்பத்திச் செலவும் விலைவாசிகளும் குறையும் என்று உண்மையிலேயே நேருஜி நம்புகிறாரா?

மக்களை வெறும் லோகாயதவாதிகளாக்காமல் நமது பண்பாடும், தார்மீகப் பண்பும் நிலைநாட்ட எல்லா முயற்சிகளும் எடுக்க வேண்டும் என்று சுதந்திரக் கட்சி கருதுவதே, அழிவுப் பாதையில் கொண்டு செலுத்தும் என்று நேருஜி எண்ணுகிறாரா?

நேருஜி எந்தக் காரணத்தினால் இத்தகைய முடிவுக்கு வந்திருக்க வேண்டும் என்பதை எண்ணித் தீர்த்துவிட்டேன். இனி நான் சொல்ல வேண்டியது இதுதான். நேருஜியின் ஜோஸ்யம் முற்றிலும் தவறு. காங்கிரஸ் திட்டங்களாலும் செய்கைகளாலும் மக்கள் பெரிதும் அதிருப்தி யடைந்திருக்கிறார்கள். அவர்கள் சுதந்திரக் கட்சியின் மூலம் ஏதாகிலும் விமோசனம் ஏற்படலாகாதா என்று இக்கட்சிக்கு ஆதரவு அளித்துவிடப் போகிறார்களே என்கிற பயத்தின் காரணமாகத்தான் நேருஜி இவ்வளவு கடுமையாகத் தாக்குகிறார். காங்கிரஸ்காரர்களாக இருக்கும் பல பேர்களே சுதந்திரக் கட்சியின் பக்கம் மனம் சாய்வதைக் கண்டுதான் பயப்படுகிறார். 'இதனாலேதான், வேண்டுமானால் விட்டுவிட்டுப் போங்கள், போங்கள்' என்று பலமுறை சொல்லி நேருஜியும் ஸ்ரீமதி இந்திரா காந்தியும் விரட்டுகிறார்கள்.

படுகுழியில் தள்ளப் போவது சுதந்திரக் கட்சியின் கொள்கைகளல்ல, காங்கிரஸ் அரசாட்சியின் மூன்றாவது திட்டமும், நிலத் திட்டமுமே.



# சிறந்த உழைப்பிற்கு உகந்த தயாரிப்புகள்

தரத்தில் உயர்ந்ததும், குறைந்த விலையுள்ளதுமான நேஷனல்-எக்கோ ரேடியோக்களும் க்ளியர்டோன் தயாரிப்புகளும் நீங்கள் தேர்ந்தெடுத்துக்கொள்ளுமாறு விதவிதமாக உள்ளன!

## நேஷனல் எக்கோ ரேடியோக்கள்



**நேஷனல்-எக்கோ மாடல் U-717 :** 5 வால்வுகளும் 3 பாண்டுகளும் கொண்ட இந்த ஏஸி/டிஸி ரேடியோவில் பெரிய நேஷனல்-எக்கோ ஸெட்டுகளில் உள்ள சில அம்சங்கள் அடங்கியுள்ளன. 'மான்ஸூனைஸ்' செய்யப்பட்டது. ரூ. 260/-



**நேஷனல்-எக்கோ மாடல் 732:** அதன் ரகத்தில் இணையற்றது. சிறந்த உழைப்பு. 6 வால்வுகளும் 8 பாண்டுகளும் கொண்ட ஏஸி மற்றும் ஏஸி/டிஸி ஸெட்டுகள் கிடைக்கும். 'மான்ஸூனைஸ்' செய்யப்பட்டது. ரூ. 335/-

## Kleertone 'க்ளியர்டோன்' லாம்புகளும் உபகரணங்களும்

**'க்ளியர்டோன்' எலெக்டிரிக் வாட்டர் ஹீட்டர்கள் :** குழாயைத் திறந்ததும் உடனே வெந்நீர் கிடைக்கும். ஸைஸ்: 5 முதல் 16 காலன்கள் வரை



**'க்ளியர்டோன்' ஸின்க்ரோனஸ் எலெக்டிரிக் கடிகாரங்கள் :** மிகவும் நம்பகமானவை. 7 ஸைஸ்களில் பல்வேறு நிறங்களில் கிடைக்கும்



**'க்ளியர்டோன்' குக்கிங் ரேஞ்சு :** தனித்தனியே கண்ட்ரோல்களுள்ள 2 'ஹாட் ப்ளேட்'களும் ஒரு அடுப்பும் கொண்டது. 6,500 வாட்ஸ் வரை மின் சாரப் பளுவை தாங்கும்



**'க்ளியர் டோன்' பல்புகள், ப்ளோரஸண்ட் ட்யூபுகள் மற்றும் உபகரணங்கள் :** சிக்கனமானவை. பிரகாசமான ஒளியைப் பெற சிறந்த சாதனங்கள்



**'க்ளியர்டோன்' வீட்டு இஸ்திரி பெட்டி :** 7 ராத்தல் எடை. பலமான க்ரோமியம் மூலாம் பூசப்பட்டது, 230 வோல்ட்ஸ், 450 வாட்ஸ்



**'க்ளியர்டோன்' எலெக்டிரிக் கெட்டில் :** பலமான க்ரோமியம் மூலாம் பூசப்பட்டது. 3 பைண்ட் கொள்ளும்; 230 வோல்ட்ஸ், 450 வாட்ஸ்






**ஜெனரல் ரேடியோ அண்ட் அப்ளையென்ஸஸ் பிரைவேட் லிமிடெட்**
ஆபேரா ஹவுஸ், பம்பாய் 4 • 6, மதன் ஸ்ட்ரீட், கல்கத்தா 13 • ப்ரேஸர் ரோடு, பாட்னா 1/18, மௌண்ட் ரோடு, மதராஸ் • 86/79, ஸில்வர் ஜூபிலி பார்க் ரோடு, பங்களூர் ஜோர்ஜியன் காலனி, சாந்தினி சௌக், டில்லி • ராஷ்டிரபதி ரோட், செகந்திராபாத்

GRA 7763

# மூன்றாவது ஐந்தாண்டுத் தி(ண்டா)ட்டம்



முதல் ஐந்தாண்டுத் திட்டம் ஆரம்பித்தபொழுது "நமது நாடு முன்னேறிச் செழிக்கவே இந்தத் திட்டங்களைப் போடுகிறோம். தற்சமயத்துக்குக் கஷ்டங்கள் இருந்தே தீரும். அவைகளை நாம் பொறுத்துக்கொள்ள வேண்டும்" என்றது அரசாங்கம். விலைவாசி ஏறியது. இறக்குமதி குறைந்தது. ஐந்தாண்டு தீர்ந்தது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் ஆரம்பிக்கப் பட்டது. அப்பொழுதும் அரசாங்கம் பஞ்சப் பாட்டைப் பாடியது. "நாட்டின் முன்னேற்றத்துக்காக நாம் தியாகம் செய்ய வேண்டும். தற்சமயம் சிக்கன வாழ்வு நடத்த வேண்டும்" என்றது. மண்ணுலகில் இல்லாத புது வரிகளைப் போட்டார்கள். வருமானத்துக்கும் வரி, செலவுக்கும் வரி, விற்றாலும் வரி, வாங்கினாலும் வரி, இருந்தாலும் வரி, இறந்தாலும் வரி, தருமம் செய்தாலும் வரி, மனைவியாளுக்குக் கொடுத்தாலும் வரி என்றெல்லாம் நாம் வரிகள் கொடுத்து வருகிறோம். ஆனால், இவ்வளவு பணம் வசூலித்துச் செலவு செய்தும் என்ன பயன்? 1957—1958-ல் நாட்டின் வருமானம் குறைந்திருக்கிறது என்று அரசாங்கப் புள்ளிப் பண்டிதர்களே ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். உணவுப் பண்டங்களின் உற்பத்தி குறைந்து போனதுதான் அதற்குக் காரணம் என்றும் அவர்களே கூறுகிறார்கள். ஆலைகளில் நெய்யும் துணியை வாங்க ஆட்கள் இல்லை. தஞ்சையிலும் "செயற்கை"ப் பஞ்சத்தைச் சிருஷ்டி செய்து பொன்னிநதி பாயும் சோழ நாட்டில் பர்மா அரிசியை விற்பனை செய்யும் நிலைக்கு நாம் வந்திருக்கிறோம்!

மூன்றாவது திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வருவதற்கு உதகமண்டலத்தில் நிபுணர்கள் குழாம் ஒன்று கூடியது. மூன்றாவது திட்டத்துக்கு 10,000 கோடி ரூபாய் வேண்டுமென்று தீர்மானம் செய்தார்கள். "இன்னும் வரிகளைப் பெருக்க வேண்டும். வருமான வரியை நம்பிப் பயன் இல்லை. பண்டங்கள்மீது அதிக வரி போட வேண்டும். அரசாங்கத்தின் கைக்குள் இருக்கும் பொதுத் தொழில்களில் உற்பத்திசெய்யும் பண்டங்களின் விலையையும் சர்க்கார் வர்த்தகம் செய்யும் பொருள்களின் விலையையும் ஏற்ற வேண்டும். இன்றையச் சிக்கன வாழ்வை நீடித்து நடத்த வேண்டும்" என்று தீர்மானம் செய்திருக்கிறார்கள்.

ஆகவே சிக்கனம் ஏற, ஏழைகளுக்கு வேண்டிய சாமான்களின் விலை உயர, வெளிநாட்டுக் கடன் அதிகரிக்க, காகிதப் பணம் அரசாங்க அச்சாபீஸிலிருந்து கோடிக்கணக்காக வெளியேற, மூன்றாவது தி(ண்டா)ட்டம் மேளதாளத்துடன் ஆரம்பமாகப் போகிறது. என்றைக்கு இந்தப் பாடு விடிந்து நாடு செழிப்பது? அதை யார் அனுபவிக்கப் போகிறார்கள்? யாருக்காக நாம் வயிற்றில் ஈரத் துணியைப் போட்டுக் கொள்ளுகிறோம்? எதற்காக இந்தத் தீராத சிக்கனம்? இதற்கெல்லாம் பதில் அளிக்க அரசாங்கம் மறுக்கிறது. "சமூகம்" என்று ஒரு உருவத்தைச் சிருஷ்டி செய்து அதற்கு இரை போடுவது பேதைமை. தனி மனிதர் கூடித்தான் சமூகம் ஏற்படுகிறது. தனி மனிதனைக் கவனியாத "சமூகம்" அதிகாரத்தை அனுபவிக்கும் கட்சிக்கு ஒரு மாறு பெயர். தமது அதிகாரத்தைப் பலப்படுத்துவதற்கு ஐந்தாண்டுத் திட்டங்கள் தேவை. தொழிலும், வியாபாரமும், இறக்குமதி ஏற்றுமதிச் சட்டங்களும் தேவை. அப்பொழுது ஒவ்வொருவரும் எதற்காவது அரசாங்கத்திடம் சென்றுதான் ஆக வேண்டும். அதைத்தான் பதவியை அனுபவிக்கும் கட்சி கோருகிறது.

மற்றக் கட்சிகளில் சேர ஏன் பலர் அஞ்சுகின்றனர்? அரசாளும் கட்சி மீது அன்பு மிகுந்தா? இல்லை, 'ஒவ்வொன்றுக்கும் அவர்களிடம் சொல்ல வேண்டுமே; என்ன செய்து விடுவார்களோ?' என்ற பயத்தினால்தான் வேறு கட்சிகளில் சேர அஞ்சுகிறார்கள்.

நாடு செழிக்க வேண்டுமானால் தனியார்த் துறையில் தொழில்கள் ஓங்க வசதிகளை அளிக்க வேண்டும். ஐந்தாண்டு என்று பதறாமல் மரம் வளர்ப்பதைப் போல் நாட்டின் வருமானத்தை வளர்க்க வேண்டும். ஒருவரை யொருவர் தன்னலத்துக்கு வேலை வாங்காது பாதுகாப்பது அரசாங்கத்தின் கடமை. தொழில்களையும் வியாபாரத்தையும் விவசாயத்தையும் திட்டமென்று விலங்கிட்டு மானிட வாழ்க்கையில் அரசாங்கம் புகுந்து சுதந்திரத்தை அழிப்பது தவறு; இதனால் விளையும் கேடுகளைக் கண்முன் காண்கிறோம். ஆகவே, அவசரமின்றி, வேர் ஊன்றி வளரும் திட்டங்களை ஜனங்களே நிறைவேற்ற வாய்ப்பும் வசதிகளும் அளிப்பதே அரசாங்கத்தின் கடமை என்பது சுதந்திரக் கட்சியின் கொள்கை.



காரியாலயம் - தொழிற்சாலை, கோயமுத்தூர்

★★ [இக்கட்டுரை ஆசிரியர் பண்டித ரா. கிருஷ்ணஸ்வாமி கௌண்டர் கோவையைச் சேர்ந்த கணபதி பகுதியின் பஞ்சாயத்துத் தலைவர். விவசாய விஷயங்களில் மிகுந்த அக்கறை கொண்டவர். 'உழவன்' என்ற விவசாயப் பத்திரிகையைப் பல ஆண்டுகள் வெற்றிகரமாக நடத்திக் கிராம மக்களுக்குச் சேவை செய்தவர். சொந்தப் பண்ணை நடத்தி அனுபவமுள்ளவர். கூட்டுப் பண்ணை ஆராய்ச்சி அரங்கக் கட்டுரைகளைப் படித்துவிட்டுத் தமது அனுபவங்களை இங்கே கூறுகிறார். —ஆசிரியர்]

# கூட்டுப் பண்ணை நாட்டுக்கு நலம் தருமா?

**பண்டித ரா. கிருஷ்ணஸ்வாமி கௌண்டர்**

நாமே கவனிப்பது உத்தமம்; தனது மகன் கவனிப்பது மத்திமம்; கூலியாள் கவனிப்பது அதமம் என்பது பழமொழி. கூட்டுப் பண்ணை விஷயத்தில் இது முற்றிலும் பொருந்தும். கூட்டுப் பண்ணை மேற்பார்வையாளர்கள் பண்ணையின் சொந்தக்காரர்களோ அல்லது அவர்களுடைய புதல்வர்களோ அல்ல. சம்பளத்துக்கு வேலைசெய்யும் ஆட்களே யாவார்கள். ஆகவே உடையவர் பார்க்கின்ற அந்த அக்கறை ஒருகாலும் இருப்பதில்லை. நிலத்தின் வருவாயும், அதன் தரமும் உயரவேண்டும் என்ற எண்ணம் அதை உடையவனுக்கே இருக்கும். அந்த அக்கறை விலைமதிக்க வொண்ணாதது. விலைக்கு வாங்கிவிட முடியாதது.

கூட்டுப் பண்ணையைப் பற்றிப் பிரமாதப் படுத்தி. "கட்டாயம் ஒன்றுமில்லை; விரும்பினால் நடத்த உதவுகிறோம்" என்கிறது அரசாங்கம். கூட்டுப் பண்ணைக்கு அரசாங்கம் சலுகைகள் பல கொடுக்கிறது. மானியமாகப் பல ஆயிரங்களும், வட்டியில்லாக் கடனாகப் பல ஆயிரங்களும் இன்னும் சலுகைகள் பலவும் கொடுக்கின்றது. இவ்வாறெல்லாம் மறைமுகமாகத் தூண்டி ஏற்படுத்தப்பட்ட கூட்டுப் பண்ணைகள் எங்கெங்கு எவ்வாறு லாபகரமாக நடக்கின்றன என்பதை நடைமுறையில் காட்டி மற்றவர்களும் ஆசைப்படும்படி செய்தால் அது வரவேற்கத் தக்கது. ஆனால் அவைகளைப்பற்றி ஒரு பேச்சும் இல்லை.

வாலாந்தூர் கூட்டுப் பண்ணையைப் பற்றி ஏற்கனவே அறிஞர் ஒருவரால் நன்கு அறிமுகப் படுத்தப் பட்டுள்ளது. இது மதுரை தேனி மார்க்கத்தில் உள்ளது. ஆரம்பத்தில் சுமார் 200 ஏக்கரா நிலப்பரப்பில் ஆரம்பிக்கப்பட்டது. இதில் சேர்ந்த குறுநில விவசாயிகள் தங்களுக்கு எதிர்பாராத யோகம் வந்துவிட்டதாக எண்ணி மகிழ்ச்சியுடன் சேர்ந்தனர். நடை முறையில் தங்கள் நலனுக்கு ஏற்றதல்ல என்பதை உணர்ந்து பலரும் விலகிக்கொள்ள விரும்பினர். ஆனால் நல்ல முறையில் விலகிக்கொள்ள வாய்ப்பில்லாமையால் வலுவில் பிரிந்து தங்கள் பூமிகளைத் தாங்களே துணிந்து சுவாதீனம்செய்துகொண்டனர்.



ரா. கிருஷ்ணசாமி கௌண்டர்

## கூட்டுப் பண்ணைகள்

கோவைக்கு அடுத்த நாதகவுண்டன் புதூர் கூட்டுப் பண்ணை ஆரம்பித்து இரண்டு ஆண்டுகளுக்கு மேல் ஆயிற்று. இது சுமார் 100 ஏக்கர் பரப்புள்ளது. இது முழுவதும் வானம் பார்த்த பூமி. இந்தக் கூட்டுப்பண்ணையில் சேருவதற்கு முன் இதன் சொந்தக்காரர்கள் 2 முதல் 4 சலகை (1 சலகை சுமார் 2 அந்தர்) சோளம் வரை ஒவ்வொரு ஏக்கரிலும் விளைவு எடுத்து வந்தனர். அவரை, துவரை, உளுந்து முதலிய ஊடு பயிர்களும் மாடு கன்றுகள் தீவனத்துக்கு வேண்டிய பயிர்ப் பச்சைகளும் கிடைத்து வந்தன. அநேகமாகத் தங்கள் நிலத்தில் தாங்களே பாடுபட்டுக் குடும்பத்துடன் ஈடுபட்டவர்கள் இன்று கூலிகளாகக் கூடத் தங்கள் நிலத்தில் பாடுபட விரும்புவதில்லை. கூலிக்காக அயலார் நிலத்தில் பாடுபடுவதை விரும்பாத பலரும் வாளாவிருந்து வருத்தப்படுகின்றனர்.

கூட்டுப் பண்ணை ஆரம்பிக்கப்பட்டபின் ஏக்கர் ஒன்றுக்கு ஒரு சலகை விதம் முதல் ஆண்டு நிலச் சொந்தக்காரர்களுக்குக் கொடுத்ததாகச் சொல்லப்படுகிறது. சிலர் ½ சலகையே கிடைத்ததாகச் சொல்லுகிறார்கள்.

ஏற்கெனவே இந்த நிலங்களின் பேரில் குடியானவர்கள் பலரும் கடன் வாங்கியுள்ளனர். அவை கொடுத்துத் தீர்க்கப் படவில்லை. இப்பொழுது இந்த நிலங்களுக்கு கிட்டத்தட்ட ஏக்கர் ஒன்றுக்கு ரூ. 1000-0-0 விதம் வட்டியில்லாக் கடனாகவும், மானியமாகவும் (இனாமாகவும்) வாங்கியாகி விட்டது. பூமியின் மதிப்போ அந்தப் பகுதியில் ஏக்கரா சுமார் 1000 ரூபாய்தான் பெறும். இந்த நிலையில் அவர்கள் தங்கள் பிற்கால நிலையை எண்ணி ஏங்குகின்றனர். ஆண்டவனே இந்த ஏழைக் குடியானவர்களைக் காப்பாற்ற வேண்டும்.

இக்கூட்டுப் பண்ணைகள் அரசியல் விவசாய நிபுணர்கள் மேற்பார்வையுடனும், கூட்டுறவு இலாகாவினர் கண்காணிப்புடனும் குடியானவர்களின் பிரதிநிதிகளாகிய தலைவர், காரியதரிசி முதலானவர்களாலும் நிர்வகிக்கப்பட்டு வருகின்றன.

கோவை தடாகம் ரோடில் கோவைக்கு ஆறு மைல் தூரத்தில் களப்பராய்க்கன்பாளையம் கூட்டுப் பண்ணை ஒன்றும் சமீபத்தில் ஆரம்பிக்கப்பட்டுள்ளது. பண்ணைக்கு நிலங்களைக் குடியானவர்கள் ரிஜிஸ்தர் செய்து கொடுப்பதற்கு முன்பே விவசாய இலாகாவிலிருந்து மேஸ்திரி ஒருவரும் கூட்டுறவு இலாகாவிலிருந்து இன்ஸ்பெக்

டர் ஒருவரும் நியமித்தாகி விட்டது. இப்பண்ணை ஆரம்பிக்கப்பட்ட சமயத்திலே இப்பண்ணைக்கு 4 பர்லாங் தூரத்தில் நானும் ஓர் பண்ணை ஆரம்பித்திருக்கிறேன். ஏறக் குறைய பூமிகளின் தரமும் ஒன்றாகவே இருக் கும். எனக்கு அப்பகுதியில் சொந்த நிலம் ஐந்து ஏக்கர்தான் உள்ளது. அத்துடன் பிறர் துண்டு நிலங்களைக் குத்தகைக்கு எடுத்துப் பண்ணை ஒன்று ஆரம்பித்துள்ளேன். சொந்த முயற்சிக்கும் கூட்டுறவு முயற்சிக்கும் உள்ள ஏற்றத்தாழ்வு இப்பகுதிகளை நேரில் பார்ப்ப வர்களுக்கு எளிதில் எப்பொழுதும் விளங்கும். எனக்கு மானியமாகவோ வட்டியில்லாக் கடனாகவோ கொடுப்பதற்கு யாரும் இல்லை யென்பதை இங்கே குறிப்பிட வேண்டும்.

## அரசாங்க விதைப்பண்ணை

இனி, தனியாக அரசியலாரின் விவசாய இலாகாவால் நிர்வகிக்கப்பட்டு வரும் அர சாங்க விதைப் பண்ணை ஒன்றைப் பாருங்கள். இப் பண்ணை கோவை விவசாயக் கல்லூரிக்கு அருகில் சுமார் 45 ஏக்கர் பரப்பில் உள்ளது. இது மிக வளமுள்ள பூமி. மூன்று கிணறுகளும் பம்பு செட்டுகளும் இதில் உள்ளன. இதன் சொந்தக்காரர்களால் மிகத் திறமையாக நிர்வகிக்கப்பட்ட பூமி. விளைச்சல் போட்டி களில் பல ஆண்டுகள் இவற்றின் சொந்தக் காரர்கள் பரிசு பெற்றிருக்கிறார்கள்.

சொந்தக்காரர்கள் கையில் இருக்கும்வரை இந்தப் பூமியின் விளைவு எவ்வளவு; அரசாங் கத்தின் கைக்கு வந்த பின் உள்ள விளைவு எவ்வளவு என்ற விவரங்களை நான் விசாரித் தறிந்தவாறு கூறுகிறேன்.

இவற்றின் சொந்தக்காரர்கள் இந்தப் பூமியில் ஏக்கருக்குச் சராசரி சுமார் 6 பொதி விதம் ஆண்டொன்றுக்கு 250 பொதி பருத்தி யும், ராகி, சோளம் ஏக்கருக்குச் சராசரி 15 சலகை விதமும் நெல் ஏக்கருக்குச் சுமார் 30 சலகை விதமும், ஆக ஆண்டொன்றுக்கு 600 சலகைக்குக் குறையாமலும் விளைவு எடுத்து வந்தார்கள். (சலகை என்பது 65 பட்டணம் படி) பருத்தி பொதி 150 ரூபாய் விதம் 37500ம், தானியம் சலகை 30 ரூபாய் விதம் 18000ம் ஆக 55500 ரூபாய் மதிப் புள்ள விளைபொருள்களுக்குக் குறையாமல் எடுத்து வந்தனர். இது உத்தேச மதிப்பானு லும் உண்மையில் விளைவின் அளவும், விலை யின் மதிப்பும் குறைத்தே கணக்கிடப்பட் டுள்ளன. இப்பண்ணையை அரசாங்கம் எடுத்து இரண்டுஆண்டுகள் முடிந்து மூன்றாவதுஆண்டு நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. விதைப் பண்ணைக்கென எடுத்த இந்த நிலம் நன்கு நிர்வகிக்கப்பட்ட வளமுள்ள போதிய உர மிடப்பட்ட நிலம். ஆகையால் முதல் ஆண்டு ஏக்கருக்குச் சுமார் 3 பொதிவிதம் 20 ஏக்கரில் 60 பொதி பருத்தியும், இதர பூமிகளில் சுமார் 100 சலகை தானியமும் விளைவு எடுத்த தாகத் தெரிகிறது. சுமார் 12,000 ரூபாய் பெறுமான விளைபொருள்கள்தான் எடுத்திருக் கிறார்கள். அடுத்த ஆண்டில் இன்னும் மிகமிக மோசமாகப் போய்விட்டது. மூன்றாவது ஆண்டாகிய இந்த ஆண்டில் பருத்தி வேளாண்மை செய்திருக்க வேண்டிய இடங்



அரசாங்கப் பண்ணையில் பயிர் நிலை

களில் எல்லாம் அருகும், எருக்கும், ஊமத் தையும் படர்ந்தும், பூத்தும், காய்த்தும் காட்சியளிக்கின்றன. ராகியும் சோளமும் அறுவடை செய்யவே தகுதியில்லாத நிலையில் கண்டோர் சிரிக்கும் நிலையில் இருக்கின்றன. அறுவடை செய்தால் நிச்சயமாக அறுவடைக் கூலிக்குப் போதாது. இப்பண்ணையிலுள்ள 3 பம்பு செட்டுக்களில் 2 தண்ணீருக்குள் மூழ்கிக் கிடக்கின்றன. தென்னைகள் உயிருக் குப் போராடிக் கொண்டிருக்கின்றன. இந்த அலங்கோலக் காட்சியைப் பார்த்ததும்,

"இலமென்று அசைஇ இருப்பாரைக்
காணின்
நிலமென்னும் நல்லாள் நகும்"

என்ற திருக்குறள் நினைவுக்கு வந்தது. உணவு இல்லையே என்று ஏங்கி நிற்கும் அரசாங்கத் தைக் கண்டு நிலமென்னும் நல்லாள் சிரிக் கின்றாள் என்பது இதன் பொருள்.

இந்த அளவில் அரசாங்க விதைப் பண்ணை களை நடத்தும் சென்னை அரசாங்க உணவு விவசாய இலாகா காரியதரிசி அவர்கள் 14-9-59ல் கோவை விவசாயக் கல்லூரியில் நடைபெற்ற விவசாய உத்தியோகஸ்தர்கள் மகாநாட்டில் பேசுகையில் 'விவசாயத்திலும் உணவு உற்பத்தி விஷயத்திலும் இந்தியாவில் சென்னை ராஜ்யம் தலைமை ஸ்தானம் வகிப்ப தாகவும் இவ்விஷயத்தில் ராஜ்ய மக்கள் பெருமை கொள்ளலாம் என்பதாகவும் இந்த நிலைமையை ஏற்படுத்திக் கொடுத்ததற்காக எல்லா உத்தியோகஸ்தர்களையும் பாராட்டுவ தாகவும்' கூறினார். தலைமைஸ்தானம் வகிக்கக் கூடியவர்களின் நிலையே இப்படியானால் ஏனைய ராஜ்யங்களின் நிலை எப்படியோ அறியோம்.



தனியார் பண்ணையில் விளைச்சலின் தோற்றம்

# பெண் புத்தி...

பூவாளூர் சுந்தரராமன்

'அம்மாவ்...அம்மாவ்!..'

'அத்தே, லச்சுமி ஏன் இப்படிக் கத்துது?'

'மாடுன்னு கத்தாதா? என்னமோ அதிசயமாகக் கேக்கறையே!'

'இல்லே, அத்தை! வாய்க்கால் கரையிலே ராசம்மாவும் அஞ்சலையும் பேசிக் கொண்டிருந்ததைக் கேட்டது முதல் எனக்கு ஒரே பயமாக இருக்குது!'

ஆம், கடந்த ஒரு வாரம் பத்து நாட்களாக ஊரே அல்லோலகல்லோலப் பட்டுக் கொண்டிருந்தது. எங்கும் அதே பேச்சு அடிபட்டது. பக்கத்துக் கிராமங்களில் மூலைக்கு மூலை இரவில் தொழுவங்களில் கட்டியிருந்த மாடுகள் காலையில் காணப்படவில்லை. பிறகு ஆற்றுப் படுகைகளிலோ, வேறு ஜனநடமாட்டமில்லாத இடங்களிலோ அவை உயிருடன் தோல் உரிக்கப்பட்டு, துடிதுடித்து உயிருக்கு மன்றாடிக் கொண்டிருந்த பயங்கரமான காட்சியைத்தான் கண்டார்கள்! இவ்வளவுக்கும் காரணம், தோல் சந்தையில் மாட்டுத்தோல்கள் கொள்ளை விலைக்குப் போனதே!

கன்னியம்மாவுக்குப் பேய் பிசாசு என்றால் கூடப் பயம் கிடையாது! ஆனால் இந்த மாடு கொள்ளை போகும் கதையைக் கேட்டது முதல் அவள் உயிர் அவள் இடத்தில் இல்லை. இரவு ஏன் வருகிறது என்றே நடுங்கினாள். அவளுடைய அருமை 'லச்சுமி'யை எவனாவது களவாடிக் கொண்டு போய்......

அவளால் படுத்துக் கொண்டிருக்க முடியவில்லை. வாரிச் சுருட்டிக்கொண்டு எழுந்தாள். எங்கும் ஒரே இருட்டு; நல்ல அமாவாசை இருட்டு. வெகு சமீபத்தில் இருக்கும் பொருள்கூடத் தெரியவில்லை. தட்டுத் தடுமாறி எழுந்து, தீப்பெட்டியைத் தேடி எடுத்து விளக்கேற்றினாள். அதற்குள் குறட்டை விட்டுத் தூங்க ஆரம்பித்துவிட்ட அத்தையை எழுப்பினாள். கொல்லைக் கதவைத் திறந்து கொண்டு தொழுவத்தைப் பார்த்தாள்! அவள் பயந்தபடியே லச்சுமியை அங்கு காணவில்லை!...

'ஐயோ! அத்தை! லச்சுமியைக் காணோம்!' என்று அலறினாள். அந்த நடுக்கத்தில் கையில் இருந்த விளக்கு கீழே விழுந்து அணைய, ஒரே இருட்டு கவ்விக் கொண்டு விட்டது.

'அத்தே! அத்தே! ஓடி வாயேன்!' என்று கத்தினாள்.

அத்தை ஓடி வந்து பார்த்து, அவளும் பெருங்குரல் எடுத்துக் கத்தவே அக்கம் பக்கத்தில் இருந்தவர்கள் ஓடி வந்தார்கள். செய்தி அறிந்ததும், மூலைக்கு ஒருவராய்த் தேட ஆரம்பித்தார்கள்.

கன்னியம்மா 'லச்சுமி! லச்சுமி!' என்று கதறி அழுவது பார்க்கப் பரிதாபமாக இருந்தது. கடைசியில் ஊர் நாட்டாண்மைக்காரர், 'இதோ பார், நீ வீணாக ஏன் அழுறே?....உன் லச்சுமி எங்கேயும் போய்விடமாட்டாள்! எல்லையம்மனை வேண்டிக்கொண்டு சிறிது அமைதியாக இரு!' என்று ஆறுதல் கூறினார்.

'லச்சுமி குரல் கொடுத்து அஞ்சு நிமிசம்கூட ஆகவில்லைங்களே! பாவி! நான் உடனே எழுந்து ஓடிப் போய் அதைப் பார்த்திருக்க மாட்டேனா?'

'உனக்கு ஒருத்தர் மேலேயும் சிறிதும் சந்தேகம் இல்லியே?' என்று கேட்டார் நாட்டாண்மைக்காரர்.

'இல்லீங்க! நான் யாருக்கு என்ன தீங்கு செய்தேன்?' என்றாள். ஆனாலும் அதே சமயத்தில் அவளுக்கு ஒரே ஒரு ஆள் மேல் இலேசாகச் சந்தேகம் தட்டியது! மாந்துறையான் — வேலுச்சாமி — மீது அவளுக்குச் சந்தேக நிழலாடினாலும், நிச்சயமாகக் கூற மனம் வரவில்லை!

அத்தையிடம் மெதுவாக, 'ஒரு வேளை.... ஒரு வேளை..' முடிக்க முடியாமல் தயங்கினாள்.

அவள் ஏதோ ரகசியமாகக் கூறுவதைக் கண்ட நாட்டாண்மைக்காரர் 'கன்னி! தைரியமாகச் சொல்லு. இந்தச் சமயத்திலே மென்று முழுங்கக் கூடாது!' என்றார்.

இதை அவர் கூறி முடிப்பதற்குள் அவளுடைய சந்தேகம் வளர்ந்து உண்மை உருக் கொண்டு விட்டது.

'ஒரு வேளை...மாந்துறையான்..' என்றாள்.

நாட்டாண்மைக்காரர் 'சரி கிளம்பு! அவன் இடத்திலேயே போய்ப் பார்த்து விடுவோம்!' என்று கூறிக் கிளம்ப, கன்னியம்மா அவரைப் பின்பற்றி வேகமாக நடந்தாள்.

## 2

கன்னியம்மாவுக்கு விவரம் தெரிவதற்கு முன்பே அவளுடைய தாயார் நாலு நாட்கள் அடித்த காய்ச்சலில் கண்ணை மூடிவிட்டாள். அந்த மகத்தான நஷ்டத்தை அறிய முடியாத பருவம். நல்ல வேளையாக, அவள் தகப்பன் சின்னியனுடைய அத்தை குடும்பப் பொறுப்பை ஏற்றுக் கொண்டதால், அந்த நஷ்டத்தின் அளவு ஒரு பகுதி குறைந்தது. அத்துடன் சின்னியனும் மற்றொரு பெண்ணின் 'கையைப் பிடி'க்காமல், தன் தாயற்ற பெண்ணை அருமை பெருமையாக வளர்த்து வந்தான். கன்னியம்மா மூக்கும் விழியுமாகப் பார்க்க வெகு அழகாகவே இருந்தாள். நிறம் சிறிது கறுப்பு என்றாலும், முகத்தில் பொங்கி வந்த களையும், ஒளியும் அதை மறக்கச் செய்தன. அவள் சிரித்தபோது வெளிப்பட்ட வெள்ளை வெளேரென்ற முத்துப் பற்கள் அநேகருடைய பொறாமைக்குக் காரணமாக அமைந்துவிட்டன.

சின்னியனும் அதை அறிந்தவன் போல் அவளுக்கு நல்ல சீட்டித் துணியிலேயே பாவாடை தைத்துக் கொடுத்தான். அடிக்கடி வளையல்கள் வாங்கிக் கொடுத்தான். நாள் தவறாமல் பூ வாங்கி வைத்தான். கன்னியம்மாவும் செவ்வாழைக் கன்றுபோல் நெடுநெடுவென்று வளர்ந்து வந்தாள். அவளைப் பார்க்கும் போதெல்லாம் சின்னியனுடைய கண் கலங்காமல் இராது. தன்னுடைய மனைவி 'கொடுத்து வைக்காதவள்' என்று முணுமுணுப்பான். கூடிய சீக்கிரத்தில் அவளைக் கண் கலங்காமல் வைத்துக் கொள்ள ஆசைப்படும் ஒருவனுக்கு அவளைக் கட்டிக் கொடுத்துவிட வேண்டும் என்று நினைத்தான். ஆனால் அவன் நினைவும் நிறைவேறவில்லை! வயலுக்குப் போனவனை நாலு பேராகத் தூக்கி வந்து கிடத்தினார்கள்; வாயில் நுரை தள்ளப்பட்டு உடம்பு நீலம் பாரித்திருந்தது. வயல் வெளியில் பாம்பு கடித்துவிட்டது என்று கூறினார்கள். உள்ளூர்ப் பூசாரியின் மந்திரத்துக்கும், பக்கத்தூர் கந்தன் பரியாரியினுடைய நாட்டு மருந்துக்கும் அந்த விஷம் கட்டுப்படவில்லை! இரண்டு நாழிகைக்குப் பிறகு தன் அருமை மகளிடம் ஒரு வாய்வார்த்தைகூடக் கூறாமல் சின்னியன் கண்ணை மூடிவிட்டான்.

சின்னியன் இருக்கும் வரையில் புன்செய்க் காட்டிலிருந்து வரும் தானியங்களும், கூலி வேலையில் கிடைத்த பணமும், குடும்பத்தை நடத்தப் போதுமானதாக இருந்தன. அவன் இறந்ததும் குடும்பம் நடத்துவது கஷ்டமாகி விட்டது. பணமுடை பயங்கர பூதமாக வளரத் தொடங்கியது. அதனால் கன்னியம்மாவின் அத்தை தன் கையில் சிறுகச் சிறுகச் சேர்த்து வைத்திருந்த முந்நூறு ரூபாயைப் போட்டு ஒரு பசுமாடு வாங்கினாள். இரண்டு வீடுகளுக்கு வாடிக்கையாகப் பால் ஊற்றியதில், மாட்டின் தீனிச் செலவு போக, கணிசமான தொகை மீந்தது. குடும்பப் படகும் ஏழைமைக் கடலில் மூழ்காமல் மெதுவாக நகரத் தொடங்கியது. அதனாலேயே அந்தப் பசுவுக்கு 'லச்சுமி' என்று பெயரிட்டுத் தன் உயிரினும் மேலாக மதித்து வந்தாள், கன்னியம்மா! அது வந்ததால்தானே அவள் வெளியே போய்க் கூலி வேலை செய்யாமல் இருக்க முடிந்தது? அவளுடைய சின்னச் சின்ன ஆசைப் பொருள்களுக்கு — ரப்பர் வளையல், சிவப்புச் சாந்து, கொண்டை ஊசி, பவுடர் டப்பி இவைகளுக்கு அதுதானே பணம் கொடுத்து வந்தது? எனவே லட்சுமி மேல் ஈ, கொசு உட்காரக்கூட இடம் கொடுக்காமல் வளர்த்தாள்.

## 3

கன்னியம்மா லச்சுமியை இவ்வளவு கவனமாக வளர்த்து வந்தும்கூட அதனால் சிலவேளைகளில் வீண் மனக்கலக்கங்கள் வராமல் இல்லை. இருபது நாட்களுக்கு முன் ஒரு நாள் அவள் சந்தைக்குப் போய்விட்டு, விளக்கு வைக்கும் நேரத்துக்கு வீட்டுக்கு வந்தாள். வந்ததும் வராததுமாகக் கொல்லைக் கதவைத் திறந்ததும் அவளுக்குத் திக்கென்றது. மாட்டுத் தொழுவத்தில் கட்டியிருந்த அவள் லட்சுமியைக் காணவில்லை. கண்கள் விறுவிறென்று அந்தக் கொல்லையின் நாலா பக்கங்களையும் துழாவி விட்டுக் கட்டு முளையில் வந்து நின்றன. அங்கே நைந்து போன கயிறு அறுபட்டுக் கீழே கிடந்தது, சுருண்டு கிடக்கும் பாம்பைப் போல்!

வேகமாக உள்ளே ஓடினாள். வீட்டு முற்றத்தில் கன்றுக்குட்டி



படுத்துக் கொண்டே வைக்கோலை மெதுவாக அசை போட்ட வண்ணம் இருந்தது. அத்தையைக் கூடத்திலே காணவில்லை. பரக்கப் பரக்க வாசல் திண்ணைக்கு வந்தாள். அங்கே ஒரு பக்கத்தில் உட்கார்ந்துகொண்டு, இரும்பு உரலில் வெற்றிலையை இடித்துக் கொண்டிருந்தாள் அத்தை.

'அத்தே, லச்சுமி எங்கே?' என்று கேட்டாள்.

'நான் பார்க்கவில்லையே! கயிற்றை அறுத்துக்கொண்டு எங்கே போயிடுத்தோ?' என்று அவள் அங்கலாய்த்தாள்.

கன்னியம்மாவுக்கு மேலும் அங்கு ஒரு நிமிஷம் நிற்பது முள்மேல் ஒரு யுகம் நிற்பது போல இருந்தது! லட்சுமி எங்கே போயிருக்கும் என்றே உள்ளம் தேட ஆரம்பித்தது.

'நான் வயக்காட்டுப் பக்கம் போய்ப் பார்க்கிறேன்!' என்று அத்தையின் பதிலுக்குக் கூடக் காத்திராமல் வெளியே ஓடினாள். மேலைக்கு மூனி வரைக்கும் போய்ப் பார்த்தாள்; காணவில்லை. வழியில் எதிரே வரும் உழவர்களை 'எங்க பசுமாட்டைப் பார்த்தீங்களா?' என்று வாய் ஓயாமல் கேட்டுக்கொண்டே போனாள். வீடு திரும்பும் அவர்கள் இவளுக்குப் பதிலா சொல்லுவார்கள்? இல்லையென்ற குறிப்பில் தலையை ஆட்டிவிட்டுப் போய்க் கொண்டிருந்தார்கள். இடையிடையே இவளும் நின்று நின்று நான்கு புறமும் கூர்ந்து பார்த்துக்கொண்டே சென்றாள்.

திடீரென்று மாந்துறையான் திடலில் ஏதோ 'கறுப்பாக' மாடு நிற்பது போலத் தோன்றியது. வயலில் இறங்கிக் குறுக்கே ஓடினாள். போகும்பொழுது 'எல்லையம்மா! காலையில் முதல் கால்படி பாலை உனக்கு எடுத்து வைத்து விடுகிறேன்! தாயே! இன்னும் என்னை அலைக்கழிக்காதே!' என்று வேண்டிக் கொண்டாள்.

திடலுக்குள் அடி எடுத்து வைத்ததும், கன்னியம்மா திடுக்கிட்டு அப்படியே நின்று விட்டாள். அவளுடைய லச்சுமி அங்கே கட்டப்பட்டிருந்தது.

'யாரது? ஓகோ நீயா? உன் மாடுதானா இது? நீ மாட்டை வைச்சுக் காப்பாத்துகிற லட்சணத்தை இங்கே வந்து பாரு! தோட்டத்திலே ஒரு கத்தரி நாத்தை வைக்கவில்லை!' என்றான் வேலுச்சாமி.

அதற்குள் கன்னியம்மா மாட்டின் அருகில் வந்து அதைக் கட்டி யிருந்த கயிற்றை அவிழ்க்க ஆரம்பித்தாள். மாடு 'அம்மாவ்!' என்று கத்தியது.

'இந்தா, மாட்டை ஏன் அவிழ்க்கிறாய்? விடிந்ததும் நான் பட்டியிலே கொண்டு போய்



அடைந்து விடுகிறேன்! போய்ப் பணத்தைக் கட்டி விட்டு ஓட்டிக்கொண்டு போ!' என்று அவன் கயிற்றை அவிழ்ப்பதைத் தடுத்தான்.

இந்தச் சத்தத்தில் மாடும் மிரண்டுகொண்டு குதிக்க ஆரம்பித்தது; புது ஆளான மாந்துறையானையும் முட்டப் பாய்ந்தது!

வேலுச்சாமிக்குக் கோபம் 'பொத்துக் கொண்டு' வந்தது. கையில் இருந்த புளிய மிளாரினால் நான்கு 'வாரினை'தும் மாடு பேசாமல் நின்றது.

'அட, பாவி! மாட்டைக் கொன்றுவிட்டுத் தான் மறு காரியம் பார்ப்பாயோ? ஐயையோ! இதோ ரத்தம் கொட்டுகிறதே? ஊரிலே கேள்வி முறையே இல்லையா?' என்று ஆத்திரத்துடன் கத்தினாள் கன்னியம்மா.

'நானும் அதைத்தான் கேட்கிறேன், அம்மாளு! ஊரான் கொல்லையிலே மாட்டை ஓட்டிவிட்டுச் சும்மா இருந்தால், அவனவன் உயிரைக் கொடுத்துத் தண்ணீர் பாய்ச்சி வேளாண்மை செஞ்சது எல்லாம் என்ன ஆவறது?' என்று கேட்டான்.

'நான் ஒன்றும் அந்த மாதிரி செய்யறவ இல்லே! நான் உன் வயலில் மாட்டை ஓட்டி விடவுமில்லே!'

'இல்லே, இல்லே! நானே உங்க வூட்டுக்கு வந்து மாட்டை அவுத்துக்கொண்டு வந்து இங்கே கட்டிப் போட்டிருக்கேன், இல்லே!'

அந்தச் சமயத்தில் வெளியே சென்றிருந்த வேலுவின் தாயார் வந்தாள். 'வேலு! இங்கே என்னடா ரகளை?...இது யாருடைய மாடு?' என்று கேட்டுக் கொண்டே கன்னியம்மாளை ஏற இறங்கப் பார்த்தாள்.

'நீங்களே நியாயத்தைச் சொல்லுங்க, அம்மா! இது எம் மாடு! கயிற்றை அறுத்துக் கொண்டு ஓடிவந்துவிட்டது. அதைக் கட்டிப் போட்டு அடியடின்னு அடிக்கிறாங்க!'

'கால்காணி கத்தரி நாத்தையும் தின்று தீர்த்து விட்டது அம்மா! இதை என்ன செய்தால்தான் என்ன?'

'வாயில்லாத சீவனைப் போட்டு அடித்தால் அது தின்னது வந்து விடுமா, அம்மா?'

'நீங்கதான் வாயிருக்கிற சீவனாச்சே, சண்டைக்கு வர!'

'சரி, சரி; போதும் சண்டை; வேலு, போனாப் போவுது. மாட்டை அவுத்து விட்டுடு!...இந்தா இனிமேல் மாடு சுடு இந்தத் தோட்டப் பக்கம் வரக் கூடாது!' என்றாள் வேலுவின் தாயார்.

'இனிமேல் நிச்சயமா வராது, அம்மா!' என்று கூறிவிட்டு மாட்டை ஓட்டிக்கொண்டு அவள் வந்து விட்டாள்.

## 4

இது நடந்து இரண்டு நாட்கள் கழித்துத் தரகன் கந்தன் கன்னியம்மாளைத் தேடிக் கொண்டு வந்து சேர்ந்தான்.

'கன்னியம்மா! பசு மாட்டை விற்றுவிடப் போகிறாயாமே?' என்று கேட்டான்.

'யார் சொன்னது?'

'நம்ம மாந்துறையான்-வேலுச்சாமி-தான் கேட்கச் சொன்னான்!' என்றான் பலமாகச் சிரித்துக்கொண்டே.

கன்னியம்மா திடீரென்று எழுந்து 'இந்த மாட்டை விற்க முடியாது! நீ வந்த வழியைப் பார்த்துக் கொண்டு போகலாம்!' என்று கண்டிப்பாகக் கூறி அவனை அனுப்பி விட்டாள். அத்தைக்கு மிகவும் ஏமாற்றமாகத்தான் இருந்தது.

அடுத்தவாரம் ஒரு நாள் மாலையில் கன்னியம்மா கொல்லையில் மாட்டுக்குத் தீனி வைத்துக்கொண்டிருந்தாள். கூடத்தில் அத்தை வேறு எவருடனோ உரக்கப் பேசுவது போலக் கேட்டது. கல்யாணத்தைப் பற்றியும், பரிசத்தைப் பற்றியும் பேச்சு அடிபட்டது. அந்தப் புதுக்குரலை அவள் அதற்குமுன் எங்கேயோ கேட்டிருந்தாள். கடைசியில் வந்திருப்பவள் வேலுச்சாமியின் தாயார் என்று நினைவுக்கு வந்ததும் கன்னியம்மாவுக்கு ஆத்திரம் பொங்கிக்கொண்டு வந்தது.

'என்னமோ அம்மா பரிசத்துக்காக இரு நூறு ரூபாய் கையிலே கொடுத்துடறோம்! இந்த ஆவணிக்குள்ளே...' என்று வேலுச்சாமியின் தாயார் சொன்னாள்.

அதைக் கேட்டுக்கொண்டே வந்த கன்னி, 'அத்தை! நீ நூறு பேச்சுப் பேசாதே! எங்க ஆயாரு புன்செய்க் காட்டின் மேலே வாங்கியிருக்கிற கடன் நானூறு ரூபாயையும் தீர்க்கிறவங்களைத்தான் நான் கட்டிப்பேன்! வேறு இரண்டாவது பேச்சு பேச வேண்டாம், அத்தை!' என்றாள்.

வேலுச்சாமியின் தாயாருக்கு முகம் செத்து விட்டது. 'இப்படி மனுசா தராதரம் தெரியாமல் ஆளைத் தூக்கிப் போட்டுப் பேசறவங்க வூட்டிலே யார் சம்பந்தம் கோருவாங்க? இந்தக் குணம் நம்ப பையனுக்குப் பிடிக்காது!' என்று சொல்லிக்கொண்டே எழுந்துபோய்விட்டாள்.

அத்தைக்குக் கன்னியம்மாவின் மீது கோபம் கோபமாக வந்தது.

'எதுக்குத்தான் இப்படி வெட்டு ஒன்னு; துண்டு ரெண்டுனு பேசுகிறாயோ? எல்லாம் உன் அப்பன் உனக்குக் கொடுத்த செல்லம்!' என்று கோபித்துக் கொண்டாள்.

'நீ ஒரு பக்கம், அத்தை! உனக்கு ஒன்னுமே தெரியாது! நீ சும்மா இரு!' என்று கூறிவிட்டுத் தன் வேலையைப் பார்க்கச் சென்றாள்.

இவ்வளவும் இருபது நாட்களுக்குள் நடந்திருப்பதால் கன்னியம்மாவுக்கு வேலுச்சாமியின் மீது சந்தேகம் ஏற்படாதா?

## 5

நாட்டாண்மைக்காரரும் கன்னியம்மாவும் மாந்துறையான் இடமே அடைந்ததும், 'வேலு, வேலு!' என்று குரல் கொடுத்தார் நாட்டாண்மைக்காரர்.

'யாரது?' என்று கண்ணைக் கசக்கிக் கொண்டே வந்த வேலு, 'என்னுங்க இந்த வேளையிலே...?' என்று கேட்டான்.

'கன்னியம்மாவின் பசுமாட்டைக் காணவில்லை. இந்தப் பக்கம் வந்திருக்கிறதா என்று பார்க்க வந்தோம்' என்று மென்று விழுங்கினார்.

'இப்பத்தான் பத்து நிமிசத்துக்கு முன்னாலே படுக்கப் போனேன். கண்ணை மூடுகிற சமயம்

# சிரிக்காதே!

### கூண்டு காலி!

மனைவி : எங்க பாபாவுக்கு மிருகக்காட்சி சாலைக்குப் போகணும்னு ரொம்பவும் ஆசையாய் இருக்குதாம்!...

கணவன் : (மிருகக்காட்சி சாலை பொறுப்பாளர்) ஓ! அதற்கென்ன? ஒரு கூண்டு காலியாக இருக்கிறது. பேஷாக அவனை வரச் சொல்லு...!!?

### சரியான பதில்!

கல்யாணத்துக்கு அலையும் ஒரு மாப்பிள்ளை : உனக்குப் பாடத் தெரியுமா?

பெண் : தெரியாது!

மாப்பிள்ளை : டான்ஸ் ஆடத் தெரியுமா?

பெண் : தெரியவே தெரியாது.

மாப்பிள்ளை : சபாஷ்! உன்னையேதான் மணப்பேன். எப்படி இதெல்லாம் கற்றுக் கொள்ளாமல் இருந்தாய்?

பெண் : என் வாழ்நாளில் நான் கலியாணம் பண்ணிக் கொள்வதாகவே இல்லை... நீங்கள் போய் வரலாம்!

### ஓஹோ, அப்படியா!

பெரியவர் : நான் இன்றைக்கு யாரையும் பார்க்க முடியாது. இதுவரையில் என்னைப் பார்க்கவந்த ஏழுபேரையும் நான் பார்க்க முடியாது என்று திருப்பி அனுப்பிவிட்டேன்!

விடாக்கண்டர் : அந்த ஏழு பேரும் நானேதான்!

### அலாரம்!

காதலன்: காதலித்துக் கொண்டிருப்பது சொப்பன உலகத்தில் இருப்பது போல் இருக்கிறது!

காதலி : ஆமாம்! பிறகுதான் கலியாணம் என்ற அலாரம் கடிகாரம் எழுப்பித் தொலைத்து விடுகிறதே!

### பரம ரகசியம்!

ஒரு பெரியவர் ஒரு பெரிய கூட்டத்துக்குத் தலைமை வகித்து ஒலிபெருக்கியில் 'நான் உங்களுக்கு ஒரு பரம ரகஸ்யத்தை இப்பொழுது சொல்லி விட்டேன்; இதை யாரிடமும் சொல்லவேண்டாம்' என்றார். கூட்டத்தில் உள்ள பத்தாயிரம் பேரும் அதற்குத் தலையசைத்தார்கள்!

### விடாக்கண்டர்!

கடன் கொடுத்தவர் : நீ என் கடனை எப்போ திருப்பித் தரப்போறே?

கடன் வாங்கியவர் : இப்போதைக்கு இல்லை!

கடன் கொடுத்தவர் : என்ன? இப்போதைக்கு இல்லையா? அப்படியானால் உனக்குக் கடன் கொடுத்தவர்களிடமெல்லாம் சென்று 'நீ என் கடனைத் திருப்பித்தந்துட்டே'ன்னு சொல்லிடுவேன், ஜாக்கிரதை!



'அம்மா....ய்...'னு சத்தம் கேட்டது. அதோடு ஆள் குரலும் கேட்கவே நான் கண்ணை மூடிவிட்டேன்....இருங்க... வரேன்' என்று பக்கத்தில் கிடந்த தடியை எடுத்துக்கொண்டு ஆற்றுப் படுகைப் பக்கமாக ஓடினான்.

திடீரென்று 'அம்மாவ்...' என்று சத்தம் வர, நாலுகால் பாய்ச்சலில் மாடு வேகமாக ஓடி வருவது கேட்டது!

மின்சார விசை தாக்கினது போல் கன்னியம்மா துள்ளிக் குதித்தாள்.

'அப்பாடி! எல்லையம்மன் என் வயிற்றில் பாலை வார்த்தாள்!...' என்று அதன் கழுத்தைக் கட்டிக்கொண்டாள்.

மறுநாள் காலையில் தெருவே அல்லோலகல்லோலப் பட்டுக் கொண்டிருந்தது. முதல் நாளிரவு லச்சுமியை ஓட்டிக் கொண்டு போனவர்களுக்கும் வேலுவுக்கும் படுகையில் அடிதடி ஏற்பட்டதாகவும், அதில் வேலுவுக்குத் தலையில் பலத்த காயம் ஏற்பட்டுப் பக்கத்து ஊர் ஆஸ்பத்திரியில் கொண்டுபோய்ப் போட்டிருக்கிறார்கள் என்றும் கன்னியம்மா கேள்விப்பட்டாள். உடனே அவள் மனம் மாறி விட்டது!

அன்று மாலை கன்னியம்மா ஆஸ்பத்திரியில் அவனைப் பார்க்கப் போனபோது, பசும் பாலையும் காய்ச்சிக்கொண்டு போய்க் கொடுத்து விட்டு, 'என்னால் உனக்கு எத்தனை கஷ்டம்!' என்று கண் கலங்கினாள்.

வேலு தன் வலியையும் மறந்து விட்டு ஒரு வறண்ட சிரிப்புடன் மெதுவான குரலில், 'என்னமோ, என் போதாத காலம்!' என்று கூறினான்.

'பாவி நான் உன்னையே சந்தேகித்தேனே, அதைச் சொல்லு!'

'போவுது, இப்பவாவது வேலு அப்படிப் பட்டவன் இல்லேனு புரிஞ்சுது இல்லே!'

'பெண்புத்தி பின்புத்திதானே, மச்சான்! மன்னிச்சுடு! ஆமாம், இன்னும் எத்தனை நாட்கள் இங்கேயே இருக்கணுமாம்?'

'ஒரு வாரமாவது ஆவும்...'

'சரி, நாளைக்கு அத்தையையும் அழைத்துக் கொண்டு வாரேன்!' என்று கூறி விட்டு, விடைபெற்றுக் கொண்டாள்.

வீட்டுக்கு வந்ததும் அத்தையிடம், 'அத்தே! மாத்துறை விட்டாருக்கே 'லச்சுமி'யைக் கொடுத்திடலாம்!' என்றாள்.

'ஏன்?...இப்ப என்ன வந்துவிட்டது?'

'அன்னிக்குப் பேச வந்தார்களே, அவங்களையே பரிசமும் போடச் சொல்லி விடு!' என்று கூறிவிட்டு லச்சுமியைத் தேடிக்கொண்டு பின்பக்கம் போனாள்.

'இந்தக் காலத்துப் பெண்களுக்கே பின் புத்தி!' என்று தனக்குள் சொல்லிக் கொண்டாள் அத்தை.

# 'டெட்'டினால் வெளுத்த ஆடைகள் எவ்வளவு வெண்மை, எவ்வளவு பிரகாசம்

டெட் - இந்தியாவின் அற்புதமான பரிசுத்தகரணி. எல்லா வற்றையும் சுத்தம் செய்ய உபயோகிக்கலாம். சோப்பை விட மேலானது.

அது சோப்பைக்காட்டிலும் வெகு சீக்கிரத்தில் சுத்தம் செய்கிறது. கடினமான தண்ணீரோ அல்லது மிருதுவான தண்ணீரோ எதுவாயிருந்தாலும் சுத்தம் செய்யக்கூடியது. எண்ணெய்ப் பசையை உடனே அகற்றுகிறது. அழுக்கை இல்லாமல் அபரிதமான நுரையை உண்டாக்குகிறது.

டெட், வெண்மையான ஆடைகளை பிரமிக்கும்படி வெள்ளை வெளேரென்று வெண்மையாக்குகிறது. கலர் ஆடைகளை பிரகாசமாக வெளுக்கிறது. அது உங்களுக்கு மிகவும் பிடித்த மென்மையான ஆடைகளுக்கு மிகவும் உகந்தது.

## எவ்வளவு அழகு !



அதிசக்திவாய்ந்த டெட் எல்லா ஆடைகளையும் சுத்தம் செய்வதற்கேற்றது.

பருத்தியோ, பட்டோ, உல்லனோ, நைலானோ ரேயானோ எதுவாயிருந்தாலும் டெட்டை உபயோகிக்கலாம். குளிர்ந்த ஜலத்தில் கரைத்து உபயோகிக்கும் டெட், துணிகளைப் பாதுகாத்து நீண்ட காலம் உழைக்கச் செய்கிறது.

விலை 70 பை



# வேங்கையின் மைந்தன்

## நான்காம் அத்தியாயம்

## அகந்தைக்கார அழகி

இராஜேந்திர சோழப் பெரிய உடையார் தமது பரிவாரங்கள் புடைசூழ நாகைப்பட்டினத்தை விட்டுப் புறப்பட்டு, அருகில் இருந்த ஆனைமங்கலம் சோழ மாளிகையில் அன்றிரவுப் பொழுதைக் கழித்தார்.

ஜனத்திரளின் பெரும் பகுதி ஆனைமங்கலத்துக்கு அவரைப் பின்பற்றி வந்தது. ஆனைமங்கலத்தின் வரவேற்பு நாகைப்பட்டினத்தின் வரவேற்பையும் மிஞ்சிவிட்டது. தெருக்கள்தோறும் குலை தள்ளிய வாழை மரங்களைக் கட்டியிருந்தார்கள். வீடுகள்தோறும் மாவிலைத் தோரணங்களும் தென்னங் குருத்துத் தோரணங்களுமாகத் தொங்கிக் கொண்டிருந்தன. வீட்டுக்கு வீடு நெல் குவித்து, அதன்மேல் முளைக்குடம் வைத்து, சுற்றிலும் தீபச் சுடரொளி பரப்பியிருந்தார்கள்.

பெண்டிரின் கைவண்ணம் அற்புதம் அற்புதமான மாக் கோலங்களாகத் தெருக்களில் மலர்ந்திருந்தன. மல்லிகை நிற மாவினால் புள்ளிக் கோலங்கள் தீட்டி, தாமரை நிறச் செம்மண்ணால் அவற்றுக்குக் கரை கட்டியிருந்தார்கள். கோலப் புள்ளிகளின் மேலே பறங்கிப் பூக்களும், செவ்வல்லிகளும் சிரித்துக் கொண்டிருந்தன.

ஆடுவோர், பாடுவோர், சிலம்பம் விளையாடுவோர், கும்மியடித்துக் குரல் எழுப்புவோர், இப்படியாக ஆனைமங்கலமே ஆனந்த மங்கலமாக விளங்கியது. வாண வேடிக்கைகளால் ஆகாயம் நந்தவனமாக மாறி, வானவில்லின் நிறத்தாலான நெருப்பு மலர்களைச் சொரிந்த வண்ணமாக இருந்தது.

மறுநாள் அதிகாலையில் அவர்கள் மறுபடியும் பிரயாணத்தைத் தொடங்கி, பிற்பகலில் திருவாரூரை நெருங்கிக் கொண்டிருந்தார்கள்.

மக்கள் கூட்டம் கட்டுக் கடங்காத அளவுக்குப் பெருகிக் கொண்டே வந்தது. களைத்துப் போய்ப் பின்தங்கியவர்கள் பலர் என்றால், புதிதாகக் கூட்டத்தில் சேர்ந்து கொண்டவர்கள் பலப்பலர்.

கூட்டத்தில் இருந்தவர்களுக்கு, பரிவாரங்களுக்குப் பின்னால்சென்று கொண்டிருந்த ரதத்தில் இருந்தவர்கள் யார் என்று தெரியவில்லை. ஒவ்வொருவரும் தங்கள்--தங்கள் மனப் போக்குப்படி நினைத்துக் கொண்டார்கள். ரதத்தை நெருங்கிச் சென்று அதற்குள்ளே இருந்தவர்களை யாராலும் பார்க்க முடியவில்லை. அதைச் சுற்றிலும் கடுமையான கட்டுக்காவல் இருந்தது.

குதிரை வீரர்களின் வேல் முனைகள் சக்கர வட்டம்போல் ரதத்தை வளைத்துக் கொண்டிருந்தன. காற்றில் எப்போதாவது பட்டுத் திரைத் துணி படபடத்த போது, கூட்டத்தினரின் விழிகள் அங்கே பாய்ந்து செல்லத் தவறவில்லை. பெண்களின் தலைகள் தெரிந்தன; பெரியவர் ஒருவரின் உடல் தெரிந்தது.

வீரமல்லன் மாத்திரமே ரதத்தின் அருகில் நெருங்கிச் சென்றான். அடிக்கடி அவன் உள்ளேயிருந்தவர்களிடம் ஏதோ பேசுவதுபோல் தோன்றியது. ஒரு சமயம், அவன் கூட்டத்தினர் கொண்டு வந்து கொடுத்த இளநீரை ரதத்தில் வந்தவர்களுக்குக் கொடுத்தான். அடுத்தாற்போல், அவர்களுடைய சின்னஞ் சிறு தேவைகளையும் கவனித்து உடனுக்குடன் பூர்த்தி செய்துகொண்டுவந்தான்.

ஒரு தேவையும் இல்லாத போது கூட, அவர்களை உபசரிக்கும் சாக்கில் அவர்களுக்கு அன்புத்தொல்லைகள்கொடுத்து வரத் தொடங்கினான் வீரமல்லன்.

வழியில் அந்த ரதம் சில விநாடிகள் நின்றபோது, அதை நெருங்கிச் சென்று அதன்



அகிலன்

திரையை விலக்கித் தலையை உள்ளே நீட்டிக் கொண்டு கூறினான்:

"தங்களுக்கு ஒரு குறையும் தோன்றாதவாறு கவனித்துக்கொள்ளும்படி சாமந்தநாயகர் எனக்குக் கட்டளையிட்டிருக்கிறார். விருந்தோம்பும் பணியில் அணுவளவு நான் என் கடமையில் தவறி விட்டாலும் அவருடைய கோபத்துக்கு ஆளாக நேரிடும். தங்களுடைய விருப்பத்தை



நிறைவேற்றநானும் என் ஆட்களும் எப்போதும் சித்தமாக இருக்கிறோம்! இப்போது உங்களுக்கு என்ன வேண்டும், சொல்லுங்கள்!"

அவனுடைய கண்கள் அப்போது தன் முகத்தை வட்டமிடுவதைக் கண்ட ரோகிணிக்கு எரிச்சல் உண்டாயிற்று.

"சாமந்தநாயகர் கூறியதை விடப் பன்மடங்கு நீ எங்களை அதிகமாக உபசரிக்கிறாய். உன்னுடைய உதவிகளுக்கு மிகவும் நன்றி" என்றாள் அவள். "ஆமாம்; நீ யார்? சோழ சாம்ராஜ்யத்தில் உனக்கு என்ன வேலை?"

" 'நீ' என்று ஒருமையில் ரோகிணி தன்னைக் குறிப்பிட்டது வீரமல்லனுக்குச் சிறிதும் பிடிக்கவில்லை. என்ன இருந்தாலும் வயதில் சிறியவள். தோற்றுப்போன வேற்று நாட்டு மன்னரின் மகள். அதற்காக வீரமல்லன் கவலைப்படவும் இல்லை. முதன் முறையாக அவள் தன்னைப் பொருட்

படுத்திச் சில வார்த்தைகள் பேசியதே அவன் தலையைச் சுற்ற வைத்தது.

" நான் ஆயிரவர் படைத் தலைவன்; என் பெயர் வீரமல்ல முத்தரையன் " என்றான் கர்வத்தோடு. " பொறுப்புள்ள கடமை யென்பதால் இதற்கென என்னைத் தனியாகப் பொறுக்கி எடுத்து அனுப்பியிருக்கிறார்கள். முன்பே நானும் ஈழ நாட்டுக்கு வந்திருக்க வேண்டியவன். வந்திருந்தால் அங்கேயே தங்களைச் சந்தித்து மகிழ்ந்திருப்பேன்."

"இந்த மகிழ்ச்சியே உனக்குப்போதும்! இனிமேல் தந்தையாரோ நானோ அழைத்தால் நீ எங்கள் உதவிக்கு வரலாம். இப்போதைக்குத் திரைத் துணியை மூடிவிட்டு, நீ சற்று உன் முகத்தை வெளியே இழுத்துக் கொள்ளுகிறாயா?" என்றாள் ரோகிணி.

'என்ன அகந்தை இவளுக்கு!' என்று நினைத்துக் கொண்டே, அவ்விடத்தை விட்டு விலகிக் கொண்டான் வீரமல்லன். குதிரையில் ஏறிக்கொண்டு கூட்டத்தினரைச் சுற்றிப் பார்த்தான். எல்லோருடைய கண்களும் அவன்மேல் பதிந்திருந்தன. அவனைச் சேர்ந்த வீரர்கள் கூட அவனைச் சற்றுப் பொறாமையோடு பார்த்தார்கள்.

மற்றவர்களுக்குக் கிடைக்காத பாக்கியம், அவர்களை நெருங்கி உரையாடும் பாக்கியம், தனக்கு மட்டும் கிடைத்தது பற்றி அவனுக்கு ஒரே பூரிப்பு. அந்தக் கர்வம் பிடித்த இளவரசி அவனிடம் என்ன பேசினாள் என்று மற்றவர்களுக்குத் தெரியவா போகிறது? வீரமல்லன் தன் தலையைத் தூக்கிக் கொண்டு, நெஞ்சை நிமிர்த்திக் கொண்டு, அலட்சியப் பார்வையால் கூட்டத்தினரின் மனப் புழுக்கத்துக்கு ஆளாகிக் கொண்டு, குதிரையின் கடிவாளத்தைச் சுண்டி விட்டான்.

கூட்டத்தில் சிலர் இடித்துப் புடைத்துக் கொண்டு அவனைத் தங்களிடம் கூப்பிட்டுப் பார்த்தார்கள். " ரதத்தில் வருபவர்கள் யார்? எங்கிருந்து வருகிறார்கள்?" என்று அவனிடம் வினாக்களை வீசினார்கள். வீரமல்லன் அவர்களைத் திரும்பிப் பார்க்கவுமில்லை, அவர்களுக்கு விடையளிக்கவும் இல்லை.

" யாரோ ஈழநாட்டு விருந்தினர்கள்; சக்கரவர்த்திகளுக்கு வேண்டியவர்கள்; எங்களுக்கே யார் என்று தெரியாது " என்று பதிலளித்தான் முன்னால் சென்ற குதிரைச் சேவகன்.

வீரமல்லனின் குதிரை அவனிடம் விரைந்து சென்றது. "பேசாமல் வாயை மூடிக் கொண்டுபோவதைவிட்டு, அவர்களிடம் என்ன சல்லாபம் வேண்டிக் கிடக்கிறது?" என்று சீறினான்.

" நீங்கள் ரதத்துக்குப் பக்கத்தில் வருகிறீர்கள்; நாங்கள் மக்களிடம் நெருக்கடி பட்டுக்கொண்டு திண்டாடுகிறோம். அவர்கள் கேள்விக்கு ஏதும் மறுமொழி சொல்லாவிட்டால், உற்சாக வெறியில் அவர்கள் ரதத்தையே கூண்டோடு தூக்கிச் சென்று விடுவார்கள் போலிருக்கிறது. நம்முடைய அதிகாரத்துக்கு இது நேரமல்ல - அதோ பாருங்கள்! யானை மீதிருந்து சக்கரவர்த்திகள் அடிக்கடி இந்தப் பக்கமே திரும்பிப் பார்த்துக் கொண்டு போகிறார்கள்."

வீரமல்லன் முன்னால் சென்று கொண்டிருந்த யானைகளை ஏறிட்டுப் பார்த்தான். முதல் யானையின்மேல் அம்பாரியில் ஈழத்திலிருந்து கொண்டுவந்த மணிமுடி, உடைவாள், இந்திரஹாரம் முதலிய அரசுரிமைப் பொருள்கள் இருந்தன. அடுத்தாற்போல் சென்ற யானையில் மாமன்னர் இராஜேந்திரரும் இளங்கோவும் அருகருகே அமர்ந்திருந்தனர்.

ஏற்கனவே வீரமல்லன் கண்டு ஆத்திரப்பட்ட காட்சிதான் அது. அந்த ஆத்திரம் இப்போது அவன் நெஞ்சில் நெருப்பாய்ப் பற்றியது. சோழ சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தியோடு சரிசமமாக அமர்ந்து செல்லும் அளவுக்கு இளங்கோவின் புகழ் உயர்ந்துவிட்டதா?

'போர்க்களத்தில் எத்தனை எத்தனையோ வீரர்கள் மாண்டு மடிந்திருக்கிறார்கள். எத்தனை எத்தனையோ பேர் அங்கஈனர்களாக மாறியிருக்கிறார்கள். கேவலம், ஒரு சிறு முடியைத் தேடிச் சென்று எடுத்து வந்து விட்டான் என்பதற்காகவா இத்தனை ஏற்றம் அவனுக்கு! என்னை ஈழத்துக்கு அனுப்பியிருந்தால் இதே காரியத்தை நான் செய்திருக்க மாட்டேனா, என்ன? இந்தப் பரந்த சாம்ராஜ்யத்தில் இவன் ஒருவன் மட்டும்தானா வீரன்?'

வீரமல்லன் ஒருவனைத் தவிர வேறு யாருமே இப்படி நினைக்கவில்லை. ஈழத்துப் போர்க்களத்திலிருந்து குற்றுயிரும் குலையுயிருமாய்த் திரும்பி வந்தவர்களும், தங்களது கைகால்களைப் பறிகொடுத்தவர்களும் இளங்கோவுக்குக் கிடைத்த பெருமையைத் தங்களுக்குக் கிடைத்ததாகவே நினைத்துக் கொண்டார்கள்.

நெருங்கிப் பழகிய ஒரே காரணத்தால் வீரமல்லனுக்கு இளங்கோவின் அருமை தெரியவில்லை. மலையின் அருகில் நிற்பவர்களால் அதன் அழகையும் கம்பீரத்தையும் காண முடியாது. தன்னைப் போன்ற ஒருவனைச் சக்கரவர்த்தி வேண்டுமென்றே உயர்த்தி விட்டதாக அருவைப் பட்டான் வீரமல்லன்.

உயரப் பறந்த பருந்தைக் கண்டு, அதை ஓட்டிப் பறந்த ஊர்க்குருவி பொறுமை கொள்ளத் தொடங்கியது.

வீரமல்லன் ரதத்தைத் திரும்பிப் பார்த்தான். அதன் பட்டுத் திரை சற்றே விலகியிருந்தது. அதற்குள்ளிருந்து எட்டிப் பார்த்த ரோகிணி, யானைமேல் சென்று கொண்டிருந்த இளங்கோவின் முதுகுப் புறமாகத் தன் விழிகளை மிதக்க விட்டுக் கொண்டிருந்தாள்.

ஐந்தாம் அத்தியாயம்

# தென்னாடு உடையாய் போற்றி!

மாட மாளிகைகளும், கூட கோபுரங்களும், பூம்பொழிற் சோலைகளும், நிழல் தரும் சாலைகளுமாக விளங்கியது அந்தக் காலத்துத் திருவாரூர். கமலாலயத் திருக்குளத்தில் கமலமலர்க் கூட்டத்தையும், தாமரை இலைகளான மரகதத் தட்டுக்களையும் காண முடியுமே தவிர, தண்ணீரைக் காண்பது அரிது. ஒரே மலர்க்காடு, இலைக் கூட்டம், கொடிப் பந்தல்.

திருக்குளத்தின் மையத்திலுள்ள தீவுக்குச் செல்ல வேண்டுமானால் பக்தர்கள் ஓடங்களில் செல்வார்கள். அந்த ஓடங்களும் மலர்களின் மீது மிதப்பவை போல் தோன்றுமே தவிர, நீரைக் கிழித்துக் கொண்டு செல்வதாகத் தோன்ற மாட்டா.

கமலாலயக் கரையிலிருந்த சோழ மாளிகையில் அனைவரும் வந்து இறங்கியிருந்தார்கள். படிக்கட்டுக்கு அருகே இருந்த ஒரு பெரிய கூடம் மகிந்தரின் குடும்பத்தாருக்காக ஒதுக்கப்பட் டிருந்தது. மாளிகையின் மத்தியில் தங்கி மாமன்னரது பரிவாரம் சிரம பரிகாரம் செய்யத் தொடங்கியது.

சக்கரவர்த்தியும் இளங்கோவும் மேன் மாடக் கூடத்தில் தனித்திருந்தனர். சோர்வும் களைப்பும் மிகுந்தவனாக இளங்கோ சுருண்டுபோய் ஒரு மூலையில் உட்கார்ந்திருந்தான். இராஜேந்திரருக்குக் காரணம் விளங்கவில்லை. கப்பலில் அவன் அவரது பார்வைக்குத் தட்டுப் படாமல் தப்பிக் கொண்டிருந்தான். கரைக்கு வந்த பிறகு அவனால் அவரிட மிருந்து விலகிச் செல்ல முடியவில்லை.

"ஏன், ஏதோ சோர்ந்து போய்க் காணப்படுகிறாய்?" என்று கேட்டார் சக்கரவர்த்தி. "என்னோடு இன்று பிரயாணம் செய்துகொண்டிருந்தபோதும் என்னவோ போல் இருந்தாய்; முகத்தில் உற்சாகமில்லை. இங்கு வந்த பிறகு, இன்னும் அதிகமாக முகம் வெளுத்திருக்கிறதே! காயம்பட்ட இடம் அதிர்ச்சியுற்றிருக்கிறதா?"

"அப்படியொன்றுமில்லை" என்று கூறிச் சிரிக்க முயன்றான் இளங்கோ. பரிதாபமாக இருந்தது அவன் சிரிப்பு.

"நேற்று மாலை மக்கள் கூட்டத் திடையே அகப்பட்டுக்கொண்டு விட்டாயல்லவா? பாவம்! உடல் நலமில்லாதவனைப் படாதபாடு படுத்தியிருக்கிறார்கள். அதனால் பாதகமில்லை. ஆலயத்துக்குச் சென்று இறைவனை வணங்கி வந்த பிறகு, நன்றாக ஓய்வெடுத்துக் கொள்; படுத்து உறங்கு."

சக்கரவர்த்தி குளித்து முழுகிவிட்டுச் சித்தமாவதற்குள் வல்லவரையர், மதுராந்தகர் முதலிய பெரியவர்களும் அங்கு வந்து விட்டார்கள். இளங்கோவும் அவர்களுடன் சேர்ந்து புறப்படலானான்.

'ஆலயத்துக்குச் சென்று வந்தாலாவது அமைதி கிடைக்குமா?' என்று ஏங்கியது அவன் மனம். உடல் நிலை பயங்கரமான அளவுக்குச் சீரழிந்திருந்த போதுகூட அவன் இவ்வளவு சஞ்சலப் படவில்லை. உடலில் ஏற்பட்ட புண்ணை உதாசீனம் செய்துவிட்டான். உள்ளத்தில் ஏற்பட்ட புண்ணை அவனால் ஆற்றிக் கொள்ள முடியவில்லை.

'நான் உங்களை வெறுக்கிறேன்!' என்று அவனுடைய முகத்துக்கெதிரே ரோகிணி சொன்ன சொல்லுக்கு, மருந்தைத் தேடி அவன் எங்கு போவான்? கூரம்போ, வேல் முனையோ நெஞ்சைத் துளைத்திருந்தால் கூட, அவற்றை நெஞ்சை விட்டு அகற்றி விடலாம். அவள் சொன்ன சொல்லை எப்படி அகற்றுவது? எப்படிப் பிடுங்கி எறிவது?

மனத்தின் மருத்துவச் சாலையாகிய ஆண்டவனின் ஆலயத்துக்கு அவன் மாமன்னருடன் போய்ச் சேர்ந்தான். மூடிய விழி மலர்களைத் திறவாமல் சிறிது பொழுது தனக்குள் கசிந்துருகினான்.

அகிலத்தையே ஆளும் வல்லமை பெற்ற சோழ சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தி, திருவாரூரில் எழுந்தருளிய தியாகேசன் முன்பாக நெடுஞ்சாண் கிடையாக விழுந்து தெண்டனிட்டார். அவர் பூண்டிருந்த பொன்னாபரணங்கள் தரையில் விழுந்து புரண்டன. அவர் உடுத்தியிருந்த கலிங்கத்துப் பட்டாடை அடியார்களது காலடி தோய்ந்த மண்ணிலே தோய்ந்தது.

மாமன்னரின் மலை போன்ற மேனி மண்ணைத் தழுவி நிற்பதைக் கண்ணுற்றான் இளங்கோ. வெறும் மண்ணா அது? பெற்று வளர்த்த மண்; பீடுற வாழச் செய்த மண்; பிறவியை மறைக்கப் போகும் மண்.

"தென்னாடுடைய சிவனே போற்றி!
என்னாட்டவர்க்கும் இறைவா போற்றி!"

உள்ளங் குழைந்துருக உத்தமனைத் துதித்துப் போற்றினார் சக்கரவர்த்தி. மளமள வென்று அவர் கண்களில் குளிர் அருவி பெருக்கெடுத்தது. இறைவனது திருப்பணிக்கென்று அவர் எவ்வளவோ பொன்னும் பொருளும் காணிக்கையாகக் கொடுத்திருக்கிறார். அவர் வழங்கிய தேவ தானங்களும், பள்ளிச் சந்தங்களும் கணக்கில் அடங்காதவை.

எனினும் அவையெல்லாம் கண்ணீராகிய விலை மதிப்பற்றகாணிக்கைக்கு முன்பு எம்மாத்திரம்? அகத்தின் ஆணவத்தை, மனத்தின் மாசை, சிற்றறிவின் செருக்கை அலம்பிக் கழுவும் ஆனந்தப் பொன்னீரல்லவா அது?

மாமன்னரின் மனம் தியாகத்தின் இரு உருவிடம் முறையிட்டது:



"தியாகப்பெருமானே! போர்த் தொழில் புரிவது நாடாள்பவனின் கடமை என்பதால் அதை முடித்துக் கொண்டு வந்திருக்கிறேன். கொலை, புலை, கொடுமை, வெறித்தனமாகிய குரூரங்கள் நிறைந்த மறத்தொழில் தான் அது. ஆனால் அறம் என்று நம்பிச் செய்திருக்கிறேன். அதன் புண்ணிய பாவங்கள் அனைத்தையும் நீயே ஏற்றுக் கொள். போரில் நான் வெற்றி பெற்றேன்; நட்பு முயற்சியில் தோல்வியுற்றேன். இந்த வெற்றி தோல்வி இரண்டையும் நீயே ஏற்றுக் கொள்!

"பண்பற்ற பகைவர்கள் நாட்டின் வடக்கு எல்லையில் எக்காளமிட்டுக் கொண்டிருக்கிறார்கள். உட் பகைவர்களோ உணர்ச்சி வெறி கொண்டிருக்கிறார்கள். இவர்களது தீமைகளிலிருந்து நாட்டைக் காக்கும் சக்தியைக் கொடு!

"என் தங்கத் தமிழ் நாட்டில் வங்கத்தின் கங்கை பாய வேண்டும். நாட்டு மக்கள் வளம் பெற்ற வாழ்வு வாழ வேண்டும். தென்னாடுடையவனே! இந் நாட்டைப் பொன்னாடாக்கிவிடு!"

பூசனையை முடித்துக் கொண்டு மன நிம்மதியுடன் மௌனமாகத் திரும்பி நடந்தார் மாமன்னர்.

இளங்கோவும், 'தியாகேசா! அந்த அற்பச் சிறுமியின் சுடுசொல்லால் என் மனம் வேதனையுறுகிறது. அந்தச் சொல்லை மறந்திருப்பதற்கு ஓர் உபாயம் கற்றுக் கொடு!' என்று வேண்டிக் கொண்டு வந்தான்.

இரவு உணவு முடிந்தவுடன் படுக்கைக்குச் செல்வது போல் பெரியவர்களிடம் போக்குக் காட்டிவிட்டு, கமலாலயக் குளக் கரை ஓரமாக நடந்து சென்றான் இளங்கோ. திருவாரூர் தனது உல்லாசக் களியாட்டங்களை முடித்துக் கொண்டு, களைத்துப் போய் உறங்க முற்பட்டது. குளக்கரையைச் சுற்றிலும் ஆங்காங்கே தீப்பந்தங்கள் எரிந்தன. குளத்தின் மையத்தில் அமைந்திருந்த நடுவனார் ஆலயத்திலிருந்தும் விளக்கொளி பரவியது.

மகிந்தர் தங்கியிருந்த கூடத்துக்கு எதிரே, குளத்தின் படிக்கட்டில் யாரோ ஒரு பெண்பிள்ளை தனிமையில் அமர்ந்திருந்தாள். மங்கலான ஒளிக் கலவையில் முதலில் அவள் யாரென்று இளங்கோவுக்குத் தெரியவில்லை. யாரென்று தெரிந்துகொண்டவுடன், மேலே நடக்காமல், படிக்கட்டின் சுவருக்குப் பின்னால் தயங்கி நின்றான். கன்னத்தில் கை வைத்துக் கொண்டு நீரின் பக்கம் திரும்பி யிருந்தாள் ரோகிணி.

மற்றொரு உருவம் படிக்கட்டில் மெல்ல இறங்கி வந்தது. மெதுவாக அவளுக்குப் பின்னால் போய் நின்றுகொண்டு, "இளவரசி! இந்த அகால வேளையில் நீங்கள் இங்கே இப்படித் தனியாக வரலாமோ?" என்று கேட்டது.

அந்தக் குரலையும் உருவத்தையும் கொண்டு, வந்திருப்பவன் வீரமல்லன் என்பதை அறிந்தான் இளங்கோ. ஒரு கணம் அவன் மனம் துணுக்குற்றது.

பிறகு, இளங்கோ தன் வியப்பைக் குறைத்துக் கொண்டான். மகிந்தரின் குடும்பப் பாதுகாப்பு வீரமல்லன் பொறுப்பிலிருந்தது அவன் நினைவுக்கு அச்சமயம் வந்தது.

வீரமல்லனின் கேள்விக்கு மறுமொழி கூறாமல் அவனைத் திரும்பிப் பார்த்தாள் ரோகிணி. இளங்கோ மறைவில் இருந்ததால் அவளுக்கோ, வீரமல்லனுக்கோ அவன் அருகில் நின்றது தெரியவில்லை.

"உங்களைத்தான் இளவரசி! — தனியாக இங்கு எங்கே வந்தீர்கள்?" என்று கேட்டான் வீரமல்லன்.

"ஏன், வரக்கூடாதோ?" என்று திருப்பிக் கேட்டாள் ரோகிணி.

"உங்கள் சித்தப்படி நீங்கள் எங்கும் போகலாம்; வரலாம். ஆனால், நீங்கள் இங்கிருந்தால் நானும் உங்கள் காவலுக்கு நிற்கவேண்டியிருக்கும்."

'எனக்கொன்றும் அச்சமும் இல்லை; எனக்குக் காவலும் வேண்டாம்' என்று கூற நினைத்த ரோகிணி, அப்படிக் கூறாமல், சிறு பொழுது எதையோ யோசனை செய்தாள். பிறகு, "வீரமல்லா! இப்படிச் சற்று அருகில் வா" என்று அவனை அழைத்தாள்.

மிகவும் நெருங்கிச் சென்றவனை, "போதும், அப்படியே நில்" என்று கூறிவிட்டு, "உனக்குக் கொடும்பாளூர் இளவரசர் இளங்கோவைத் தெரியுமா?" என்று மென் குரலில் கேட்டாள்.

இளங்கோவின் செவிகள் அவள் குரலைக் கிரகித்துக் கொண்டன.

வீரமல்லன் கணப்பொழுது மௌனமாக நின்றான். அதிர்ச்சியுற்றவன் போல் காணப்பட்டான்.

"என்ன யோசிக்கிறாய்? உனக்கு அவரைத் தெரியுமா?"

"ஏன் கேட்கிறீர்கள்?"

"காரணத்தோடுதான் கேட்கிறேன்; உன்னால் எனக்கு அவரிடம் ஒரு காரியம் ஆக வேண்டும்."

"அவனை எனக்குத் தெரியும்" என்றான் வீரமல்லன். அவன் குரல் என்னவோ போல் இருந்தது.

"'அவனா!'—உங்கள் நாட்டுப் பழக்கம் விசித்திரமாயிருக்கிறதே? ஓர் இளவரசரைப் பற்றி நீ இவ்வளவு அலட்சியமாய்ப் பேசுகிறாயே!"

"அவன் என்னுடைய நண்பன் இளவரசி! இளவரசனாக இருக்கலாம். ஆனால் அவனும் என்னைப் போல் ஒரு மனிதன் தானே?"

"போகட்டும்; அது உன் சொந்த விஷயம்" என்று சொல்லி விட்டு, "எனக்கு நீ ஒரு சிறு உதவி செய்ய முடியுமா?" என்று கேட்டாள்.

"நீங்கள் இட்ட பணியைச் செய்வதில் எனக்கு மகிழ்ச்சிதான். சிறு உதவி என்ன? பெரிய உதவியும் செய்வேன்."

"என் தந்தையார் என்னிடம் ஒரு முக்கியமான செய்தி சொல்லியிருக்கிறார். அதை நான் கொடும்பாளூர் இளவரசரிடம் நேரில் சொல்ல வேண்டும். எனக்காக அவரிடம் சென்று, நான் அவரை உடனே காண விரும்புவதாய்ச் சொல்லுகிறாயா? நான் இந்த இடத்தில் காத்திருப்பதாய்ச் சொல்."

வீரமல்லன் அங்கேயே நின்றான். திரும்பிப் போகவில்லை.

"போய் வருகிறாயா?" என்று கெஞ்சும் மொழியில் கேட்டாள் ரோகிணி.



"உங்களுக்கு அவனை நன்றாகத் தெரியுமா?" என்று திருப்பிக் கேட்டான் வீரமல்லன்.

"தெரியாமலா வரச் சொல்வேன்?"

"உங்கள் தந்தையாருக்கும் இளங்கோவைத் தெரியுமல்லவா?"

"தெரியும்."

"அவரே அவனிடம் அதை நேரில் கூறிவிட்டால் என்ன? தங்களுக்கு ஏன் இந்த வீண் சிரமம்?"

"வீரமல்லா! உன்னிடமிருந்து நான் எந்தவிதமான யோசனையையும் எதிர்பார்க்கவில்லை. நீ போய்ச் சொல்ல முடியுமா? முடியாதா?"

"முடியாது, இளவரசி! என்னை மன்னித்துக் கொள்ளுங்கள்."



பங்களூர் ரோட் டிரான்ஸ்போர்ட் கார்ப்பரேஷன் கம்பெனிக் காரியதரிசி திரு எம். கே. வரதராஜுலுநாயுடு சௌ. சாவித்திரி தேவியை மணந்தார்.



சென்னை வருமான வரி இலாகாவைச் சேர்ந்த திரு எஸ். குருநாத கிருஷ்ணன் சௌ. ருக்மிணியை மணந்தார்.



பம்பாய் பி.எஸ்.எஸ். மணியின் புதல்வி சௌ. விஜயலக்ஷ்மிக்கும் திரு எம். நாராயணசாமிக்கும் விவாகம் நடந்தது.

"சற்று முன்பு உதவி செய்வதாகச் சொன்ன நீயா அதற்குள்ளாக இப்படி மறுத்துப் பேசுகிறாய்?"

"வேறு எதை வேண்டுமானாலும் செய்யக் காத்திருக்கிறேன். இந்தக் காரியத்தை என்னால் செய்ய முடியாது."

"ஏன்?"

"அவனைச் சுற்றிப் பலரும் பேசிக் கொண்டிருப்பார்கள்!"

"இருந்தால்....?"

"இது இரவு நேரம்; நீங்கள் இங்கு தனித்திருக்கிறீர்கள். இந்தச் சமயத்தில் அவனை இங்கு வரும்படி கூறினால், மற்றவர்கள் ஏதும் தவறாக நினைத்துக் கொள்ளக் கூடும்."

"நீ அவரைத் தனியே அழைத்துச் சொல்ல முடியாதா?"

"முடியாது!"

"அப்படியானால் உனக்கு விருப்பமில்லை என்று சொல்."

"அப்படியே வைத்துக் கொள்ளுங்கள். நான் தூதுவனல்ல; காவற் படைத் தலைவன்."

"தெரிந்து கொண்டேன்! சரி, நீ இங்கிருந்து போகலாம். நான் தனித்திருக்கும் வேளையில் நீயும் இங்கு நிற்பது தவறுதான்."

"கோபித்துக் கொள்ளாதீர்கள், இளவரசி!" திரும்பிப் போகாமல் அங்கேயே நின்றான் வீரமல்லன்.

"நீ போகிறாயா, இல்லையா? இல்லை, உன்னைப் போக வைக்கட்டுமா?"

வீரமல்லன் திரும்ப மனமில்லாதவன் போல் திரும்பிச் சென்றான். மாளிகை கூடத்துக்குள்ளே அவன் நுழையும் வரையில் காத்திருந்து விட்டு, "யாரது அங்கே?" என்று ஏதுமறியாதவன் போல் கேட்டுக் கொண்டே, இளங்கோ படிக்கட்டுக் கரைக்கு வந்தான்.

திடுக்கிட்டு எழுந்து நின்று திரும்பிப் பார்த்தாள் ரோகிணி.

"யாரது?"

ரோகிணி பதிலளிக்க வில்லை. பதிலளித்தால் எங்கே தன் குரலைக் கேட்டு விட்டு இளங்கோ திரும்பிப் போய் விடுவானோ என்ற அச்சத்தில், பதறிக் கொண்டு அவனிடம் ஓடி வந்தாள்.

"இளவரசே! நிச்சயம் உங்களுக்கு நூறு வயது!"

மன வருத்தத்துடன் நகைத்தான் இளங்கோ. "பெண்களின் கடுசொல்லுக்கு நூறு வயதுக்காரனையும் ஒரே நொடியில் கொன்றுவிடும் சக்தி இருக்கிறதே, உனக்குத் தெரியுமா?"

"என்னை மன்னிக்க மாட்டீர்களா? என்னை மன்னிக்க மாட்டீர்களா?" என்று தேம்பினாள் ரோகிணி. **(தொடரும்)**

# கவர்ச்சியாக இருக்க கற்றுக்கொள்கிறான்...

இன்னமும் சிறுவன்தான். இருந்தாலும், அவனுக்கும் கவர்ச்சியாக இருக்க ஆசைதான். அவனுடைய அடர்த்தியான முடியை அழகாகப் படிய வைக்கும் 'குட்டு'தான் அவனுக்கு விளங்கவில்லை. டாடாவின் பரிமள கோகனட் கூந்தல் தைலத்தின் மேன்மையை அவனுக்கு விளக்குங்கள். இந்த சுத்தமான தேங்காய் எண்ணெயின் பரிமளம் மனதிற்கு உல்லாச மூட்டும். அடர்த்தியான முடியை கண்கவர் கருமையுடன் படியச் செய்ய இருபத்தைந்து வருஷங்களாக உபயோகத்தில் இருந்துவரும் கூந்தல் தைலம் இது.




## டாடாவின்
## பரிமள
## கோகனட்
## கூந்தல் தைலம்

தி டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி லிமிடெட்

# மருந்தும்

பூதத்தான் முக்கிலிருந்து கிளம்பி, வடக்கே சென்று கிழக்கே திரும்பிய பிறகு, வடமேற்காகச் சென்றால் நேராக வேலாயுதம் பிள்ளை மருந்துக் கடையில் போய் முட்டலாம். கடை சிறியதாக இருந்தாலும், கடைப் பெயரைத் தாங்கும் பலகை மிகப் பெரிது. சிலருக்குத் தலை மட்டும் பனம்பழம் அளவு இருக்கும்; உடல் குச்சியாக இருக்குமே, அது மாதிரிதான். 'சர்வ ரோக நிவாரணி ஸ்டோர்' என்பது தான் கடையின் நாமதேயம். அவ்வளவு நீண்ட பெயரை நீட்டி முழக்கச் சோம்போறித்தனப் படுபவர்கள், சர்வ ரோகத்தில், 'ச'வையும், நிவாரணியில், 'நி'யையும் சேர்த்து 'சநி ஸ்டோர்' என்று அன்போடு அழைப்பார்கள்.

உண்மையில் அந்தக் கடையில் மருந்து வாங்கினால் சனி பிடித்த மாதிரிதான். இதை வேலாயுதம் பிள்ளையிடம் கூற முடியுமா? புலி போல் பாய்ந்து விடுவார். அவர் கடைக் குமாஸ்தா இருக்கிறானே ஆழ்வார், பார்க்கவும் கருடாழ்வார் உருவத்தில் இருப்பான். காது நல்ல மந்தம். வாய் கொஞ்சம் கொன்னல். ஆகையால் அதிகம் பேச மாட்டான். பிறர் பேசுவதும் அவன் காதில் விழாது. பச்சைக் கற்பூரச் செந்தூரம் கேட்டால் ரச பாஷாண பஸ்பத்தை மடக்கிக் கொடுத்து விடுவான். பச்சைக் கற்பூரச் செந்தூரம் என்று நினைத்துத் தேனில் குழப்பி ரச பாஷாணத்தை விழுங்கினால், ஆளுக்குச் சனி பிடிக்காமல் சுக்கிரனா பிடிப்பான்?

இப்படித்தான் ஒரு சமயம் ஓர் அம்மாள் காதுக் குத்துக்கு மருந்து கேட்டு வந்தாள். வேலாயுதம் பிள்ளை ஒரு தன்வந்திரி. அதாவது அவருடைய தாத்தா காலத்திலிருந்து பரம்பரையாக வந்த வைத்தியத்தைத் தாமும் கற்றுத் தேர்ந்திருப்பதாக ஒரு ஐதிகம். காதுக் குத்து என்றதும் வேலாயுதம் பிள்ளை, "எலே, ஆழ்வாரு! செவித் தண்டு திராவகத்தைக் குப்பியிலே ஊற்றிக் கொடு" என்றார்.

ஆழ்வாரும் தெரிந்தது போல் தலையை ஆட்டி விட்டு உள்ளே சென்றான். அவன் காதுக்குக் கிராம்புத் தண்டு திராவகம் என்று விழுந்தது. குப்பியில் கிராம்புத் தண்டு திராவகத்தை ஊற்றி அந்த அம்மாளிடம் கொடுத்தான். "திராவகத்தை மூணு சொட்டு காதில் ஊற்றிப் பஞ்சை அடையுங்கள்" என்றார் வேலாயுதம்பிள்ளை. அதற்குப் பிறகு அந்த அம்மாளுக்கு இரண்டு காதுகளுமே ஆழ்வாரைப் போல் மாறி விட்டதாம். பின்னே



# மாப்பிள்ளையும்

ர.சு.நல்லபெருமாள்

வேயன்று காளு, பேட்டை மேயன்று ஆகிய பெரும் புள்ளிகளுக்கெல்லாம் பிள்ளைதான் குடும்ப வைத்தியர். முக்கியமாக இவருடைய வேலை, அவர்களுக்குத் தங்கபஸ்பம் செய்து கொடுக்க வேண்டியது. கேட்கும்போதெல்லாம் சிங்காரத் தாதுபுஷ்டி லேகியம் செய்து தர வேண்டியது. வேலாயுதம் பிள்ளைக்கு ஏட்டு வேலை பார்த்துத்தான் ஆக வேண்டியதில்லை என்றாலும், ஊர் மதிப்புக்காக வேலையை விடாமல் பார்த்து வந்தார். ஊரில் நாலு பேர்கள் அவரைக் கண்டு பயப்படுவார்கள் அல்லவா?

ஒருநாள் மாலை. வெற்றிலையைக் குதப்பிக் கொண்டு அவர் கடையின் முன் பக்கத்தில் கிடந்த பெஞ்சியில் வந்து உட்கார்ந்தார் சுந்தரம் பிள்ளை.

"அண்ணாச்சி! ஒரு புது லேகியம் தயாராயிருக்கு. கொஞ்சம் ருசி பார்க்கேளா?" என்று கூறிக்கொண்டே பக்கத்திலிருந்த ஜாடியைத் திறந்து, களிம்பு போன்ற ஒரு கறுப்பு வஸ்துவை உருட்டி ஓர் இலையில் வைத்துச் சுந்தரம் பிள்ளையிடம் நீட்டினார், வேலாயுதம் பிள்ளை. சுந்தரம் பிள்ளை கொஞ்சம் பயந்த பேர்வழி. ஏதோ லேகியம் என்று சொல்லி வேறு எதையாவது விழுங்கி விட்

மாறுதா? 'சநி ஸ்டோர்' மருந்து செய்த அபூர்வ வேலையாயிற்றே!

வேலாயுதம் பிள்ளைக்கு இந்தச் சர்வரோக நிவாரண ஸ்டோர்தான் பிழைப்பு என்று நினைத்து விடாதீர்கள். அவர் தொழில் போலீஸ் உத்தியோகம். அவருக்கு அந்த ஊரில் அறுபத்தேழு என்ற பெயரும் உண்டு. அறுபத்தேழு என்பது உத்தியோகப் பெயர். ஏட்டுப் பிள்ளை என்ற பெயரும் உண்டு. உத்தியோகத்தில் இருப்பதால், கடையைத் தமது மனைவி மீனாட்சியம்மாள் பெயரில் நடத்திவந்தார். பெரிய இடங்களில் பிள்ளைக்கு நல்ல மதிப்பு உண்டு. கீழத் தெரு கோபியா பிள்ளை, புதுத்தெரு ஆவுடையப்ப பிள்ளை, ஜவுளிக் கடை



டால்? இந்த ஆழ்வார் ஒருமுறை சுந்தரம் பிள்ளைக்குச் சுக்கு லேகியத்துக்குப் பதிலாகச் சுகபேதி லேகியத்தைக் கொடுத்து விட்டான். அதை விழுங்கி விட்டு நாள்முழுதும் அவர் பட்டபாடு அவருக்கு அல்லவா தெரியும்!

"இதென்னத்துக்கு ஐயா நல்லது?"

"என்னத்துக்கா? சகலத்துக்குந்தான். இது தான் அகஸ்தியர் தவமிருந்து கண்டு பிடித்த கைகண்ட மருந்து. இதனுடைய பெயர் நித்தியகண்ட குளிகை. செய்யவே ஒரு மண்டலம் ஆயிட்டுது. இதெல்லாம் நம்ம மருந்தா? ராஜாக்களும் ஜமீன்களும் சாப்பிடக் கூடியது. இது யாருக்குப் போகுது, தெரியுமா? நம்ம கோபியாபிள்ளைக்குத்தான். ஒரு மண்டலம் சாப்பிட்டால் போதும், அறுபது வயது கோபியாபிள்ளை, இருபது வயதுக் குமரனாகி விடுவார்" என்றார் மிகுந்த உற்சாகத்துடன் வேலாயுதம் பிள்ளை.

இந்தச்சமயத்தில் "உங்களை இன்ஸ்பெக்டர் எஜமான் கூட்டியாரச் சொன்னாங்க" என்று கூறிக்கொண்டே ஒருவன் ஓடி வந்து நின்றான்.

"என்னத்துக்கு?" என்றார் ஏட்டுப் பிள்ளை.

"என்னமோ தெரியலீங்க. கோபமா யிருக்காங்க" என்றான் வந்தவன்.

"இந்த மனுஷன் வந்த நாளிலிருந்து இஞ்சி தின்ன மாதிரிதான் இருக்காரு. அண்ணாச்சி, இன்ஸ்பெக்டருக்கு என்மேல் கொஞ்ச நாளாக் கோபம். ஆசாமிக்கு வயது ஐம்பதுக்கு மேலே ஆச்சு. தங்கபஸ்பம் கேட்டார். நான் கொடுக்கலே. பஸ்பம், என்ன இலேசான விஷயமா? குறைந்தது அரை மண்டலத்துக்குச் செய்ய வேண்டும் என்றால் நாற்பது ரூபாயாவது ஆகும். இந்த மனுஷன், ஓசியிலேயே தட்டி விடலாமென்று நினைக்கிறார். ஏய், நீ போ. இதோ வந்துட்டேன்" என்றார், பிள்ளை. வந்தவன் போய்விட்டான்.

"அட, என்ன ஐயா பிரமாதம்! எதையாவது ஒரு பஸ்பத்தைத் தங்கபஸ்பம் என்று சொல்லிக் கொடுத்து விடும். சோதித்துப் பார்க்கப் போகிறாரா, என்ன?" என்றார், சுந்தரம் பிள்ளை.

"அதென்ன, அப்படிச் சொல்லிட்டீங்க. இந்த வேலாயுதத்தை அப்படி நினைக்காதீங்க! வைத்தியத்தில் நாணயம் இல்லாவிட்டால், நாங்கள் தலை நிமிர்ந்து நடக்க முடியுமா? இரண்டு நாட்களில் தெற்குத் தெருப் பண்ணையார் ராமச்சந்திரம் பிள்ளைக்குத் தங்கபஸ்பம் செய்யப் போகிறேன். அதிலே ஒரு பத்து வேளை மருந்தை இன்ஸ்பெக்டருக்குக் கொடுத்தால் போகுது" என்றார்.

"வே, பஸ்பம் செய்யும்போது சொல்லும். இந்த மோதிரத்தைக் கொடுக்கிறேன். அரை மண்டலத்துக்கு எனக்கும் சேர்த்துத் தயார் பண்ணும்" என்றார் சுந்தரம் பிள்ளை; கிழடு தட்டிச் சுருங்கிப் போன உடலை ஒரு முறை பார்த்துக் கொண்டு பெருமூச்சு விட்டபடியே.

போலீஸ் ஸ்டேஷனுக்குள் நுழையும் போதே வேலாயுதம் பிள்ளைக்கு நடுக்கந்தான். இன்ஸ்பெக்டர் ரங்கசாமி, கொஞ்சம் கடுமையான பேர்வழி. சத்தம் தடபுடலாக இருந்தது. வேலாயுதம் பிள்ளை உள்ளே நுழைந்ததும், இன்ஸ்பெக்டருக்கு ஒரு சலாம் அடித்து விட்டு விறைப்பாக வந்து நின்றார்.

"வாரும், ஐயா வைத்தியரே!" என்றார் ரங்கசாமி. குரலில் கேலி தொனித்தது. வேலாயுதம் பிள்ளைக்கு உள்ளூற நடுக்கம்.

"எஜமான் கூப்பிட்டீங்களாமே" என்றார் வேலாயுதம் பிள்ளை.

"வே, அறுபத்தேழு, உமக்கு இந்த உத்தியோகம் பிடிக்கலேன்னு விட்டு விட்டுப் போம், ஐயா. ஏன் கழுத்தை அறுக்கிறீர்?" ரங்கசாமி கூப்பாடு போட்டார்.

"பிடிக்காமல் என்ன?" என்று தலையைச் சொறிந்தார் பிள்ளை.

"பின்னே என்ன? நீர் சதா உம்ம லேகியத்தை உருட்டிக் கொண்டிரும், ஊரிலுள்ள திருட்டு பயங்களெல்லாம் வீடு புகுந்து, பணப் பெட்டிகளை உருட்டட்டும்" என்றார் ரங்கசாமி. குரல் உச்சஸ்தாயியை விட்டுச் சிறிதும் இறங்கவில்லை.

"என்ன, திருட்டு போச்சுங்களா?" என்றார் பிள்ளை வியப்புடன்.

"இன்னும் போகணுமா? சங்கிலியை அறுத்து ஓடினவன் போய் ஒரு மாசமாச்சே, பிடித்தீரா? பத்தே நாட்களில் பிடித்துவிடுவேன் என்றீரே? நான் இந்த ஸ்டேஷனுக்கு வந்தபிறகு, ஒரு நல்ல கேஸ் வந்திருக்கா காணும்? எதையாவது உருப்படாத, உப்புப் பெறாததை இழுத்துக்கிட்டு வருவீர். இந்த மாசம் முடிய இன்னும் பத்து நாட்கள்தான் இருக்கு. அதுக்குள்ள ஒரு நல்ல கேஸ் வந்து ஆகணும், தெரியுமா?"

"கேஸ், கிடைச்சாத்தானே, எசமான்?"

"கிடைக்கலேன்னு, கேஸை உண்டாக்கும். ஊரிலே எல்லாருமா நல்லவனாயிட்டாங்க? எவனையாவது வசமா பிடிச்சுக் கொண்டாரும். இன்னும் பத்து நாட்களிலே ஒண்ணும் சாதிக்கலேன்னு, உம்மைப் பத்தி மேலே எழுதிச் சீட்டைக் கிழிச்சுப் போடுவேன், பிறகு, என் மேலே ஆவலாதி சொல்லாதேயும்" என்றார் இன்ஸ்பெக்டர். இன்னும் தங்க பஸ்பம் தனக்கு வந்து சேரவில்லையென்ற கோபம், இன்ஸ்பெக்டருக்கு.

"சரிங்க!" என்று கூறிவிட்டு, அதே விறைப்பில் ஒரு சலாமையும் கொடுத்து வெளியேறினார் வேலாயுதம் பிள்ளை. பிள்ளைக்கு மனத்தில் ஒரே எரிச்சல்.

மூர்த்தி, திருநெல்வேலிக்குப் புதிது. ஒரு மருந்துக் கம்பெனியின் விற்பனை ஏஜண்டாக இருந்தான். மருந்து விற்பனை விஷயமாகத் திருநெல்வேலிக்கு வந்திருந்தான். தெற்கு மாடத் தெருவில், அவனுடைய ஒன்றுவிட்ட அக்காள் இருந்தாள். அங்குதான் தங்கியிருந்தான். அடுத்த வீடு, ஒரு நல்ல வீடு. வீடு, பழைய காலத்ததுதான். ஆனால் அந்த வீட்டினுள்ளிருந்து தினமும் காலையிலும், மாலையிலும் தண்ணீர் எடுக்க வாய்க்காலுக்குப் போகிறதே ஒரு கிளி — ஆமாம், புடவை கட்டிய கிளிதான் — அதனுடைய நடையிலேயே மயங்கி விட்டான் மூர்த்தி. மருந்து விற்க வந்தவனுக்கு இப்போது, அந்தக் கிளி, மருந்து கொடுக்க வேண்டிய நிலை வந்து விட்டது. பாவம், அவன்தான் என்ன செய்வான்? சன்னல் வழியாக அந்த வீட்டைப் பார்த்தான். அந்தக் கிளியின் கண்களைச் சந்தித்து விட்டன, அவனுடைய கழுகுக்





இருமலின்
மூலகாரணத்தை
அகற்றுங்கள்
SIROLIN
"ROCHE"
ஸிரோலின்
சாப்பிடுங்கள்
குடும்பத்தினர்
யாவருக்கும்
ஏற்ற
ஔஷதம்
ஸிரோலின் இருமலை நிறுத்து
வதோடு இருமலுக்குக் காரண
மான நீர்க்கொழுக்கும் கிருமி
களைக் கொல்லவும் செய்கிறது.
ஸோல் டிஸ்ட்ரிப்யூட்டர்கள்: வால்டாஸ் லிமிடெட்

கண்கள். கழுகு பார்த்த பிறகு, கிளி தப்பிக்க முடியுமா? கண்கள் வழியாக வியாதி புகுந்து மூர்த்தியை வாட்டியது. எப்படியோ, தமக்கையிடம் விசாரித்து அந்தக் கிளியின் பெயர் வசந்தா என்பதைத் தெரிந்து கொண்டான்.

மூர்த்தி வந்து, பத்து நாட்களுக்கு மேலாகி விட்டன. வசந்தா, போலீஸ் இன்ஸ்பெக்டர், ரங்கசாமியின் மூத்த பெண் என்று தெரிந்த போது, மூர்த்திக்கு அதிர்ச்சியாக இருந்தது. போலீஸ் விஷயமாயிற்றே. கொல்லன் உலையில் ஊசியை விற்க முடியுமா? மூர்த்திக்கு உள்ளூற நடுக்கம். இருந்தாலும், ஆசை ஆளை விட்டுத் தொலைக்கிறதா?

ஒருநாள் மாலை, இருட்டிய பிறகு, வசந்தா குடத்தைத் தூக்கிக்கொண்டு வாய்க்காலை நோக்கி நடந்தாள். மூர்த்தியும் தைரியமாகப் பின்தொடர்ந்து விட்டான். தெருவில், நகரசபை விளக்குகள்தானே? ஆகையால், ஆட்களை அடையாளம் கண்டு கொள்ள முடியாதபடி தெருவெல்லாம் கொஞ்சம் இருட்டுத்தான். அரசமரத்தடிப் பாலத்துக்குப் பக்கத்தில் மட்டும் நல்ல இருட்டு. அரசமரத்தடிப் பிள்ளையார் பக்கத்திலிருந்த அரசமரம், இருட்டைத் தன்னைச் சுற்றிப் பரப்பியிருந்தது. அது கொஞ்சம் மோசமான இடந்தான். இருட்டி விட்டால், அந்த இடத்தில் ஜன நடமாட்டம் அதிகம் இராது. ஒரு மாதத்துக்கு முன், அந்த இடத்தில்தான் தண்ணீருக்கு வந்த ஒரு பெண்ணின் கழுத்துச் சங்கிலியை ஒருவன் அறுத்துக்கொண்டு ஓடி விட்டான். அவனைத்தான் இன்னும் தேடுகிறார் ஏட்டு வேலாயுதம் பிள்ளை.

அரசமரத்தடிப் பாலத்துக்குப் பக்கத்தில் வந்ததும் வசந்தா நின்று திரும்பிப் பார்த்தாள். அந்த நேரத்தில் அவளுக்கு அந்த இடத்துக்கு வரப் பயந்தான். இனி கவலை இல்லை. அவள் வருகைக்குப் 'பாரா' கொடுப்பதுபோல் மூர்த்தி, துணை வந்திருக்கிறானே. போலீஸ் உதவிகூட வேண்டாமே. படித்துறையில் இறங்கி அவள் தண்ணீர் எடுத்துத் திரும்பும் வரை மூர்த்தி அரசமரத்தடி இருளிலேயே நின்றான். வசந்தா நெருங்கியதும், "தனியாக வருகிறாயே, பயமாயில்லையா?" என்று கேட்டான்.

அதைப் பேசுவதற்குள் பயத்தால் அவள் குரல் நடுங்கியது; உடல் நடுங்கியது. "நீங்கள் துணை இருக்கும்போது, என்ன பயம்?" என்றாள். அந்தக் குரலின் கொஞ்சலில் அசந்து நின்றான் மூர்த்தி.

"தினம், இதே நேரத்துக்கு வருவாயா?" என்றான் ஆவலோடு. அவள் பேசவில்லை. ஆனால், சம்மதம் தெரிவிக்கத் தலையை மட்டும் அழகாக அசைத்தாள். அந்த அசைப்பில், மூர்த்தியின் உள்ளமும் அசைந்து விட்டது. பிறகு சென்று விட்டாள். அன்றிலிருந்து தினமும் மாலை இருட்டிய பிறகு, அந்த அரசமரத்தடி இருளில் தவமிருந்தான் மூர்த்தி, தேவியின் தரிசனத்துக்காக. தேவியும் தவறாமல் பக்தனுக்குக் காட்சி தந்தாள்.

அன்று, அமாவாசை. வழக்கம்போல் நகரசபை விளக்குகள் இருளைப் பரப்பிக் கொண்டிருந்தன. வேலாயுதம் பிள்ளை, சந்துப் பிள்ளையார் கோவிலுக்குச் சென்று, மூன்று



அகில இந்திய கர்னாடக இசைப் போட்டியில் முதல் பரிசும், கர்நாடக லலித இசையில் இரண்டாவது பரிசும் பெற்ற குமாரி ஜயமணி பி. சாரி இந்திய ஜனாதிபதியிடமிருந்து பரிசு பெறுவதைப் படத்தில் காணலாம்.

தோப்புக் கரணத்தைச் செலுத்திவிட்டு அரசமரத்தடிப் பாலத்துப் பக்கமாக வந்தார். அந்த இடத்தில், நடந்த வழிப்பறியை நினைத்துக் கொண்டே நடந்தார். மணி எட்டிருக்கும். அவர் பார்வை அரசமரத்தடியில் விழுந்தது. மரத்தடி இருட்டில் யாரோ நிற்கிறானே.........! வேலாயுதம் பிள்ளை கூர்ந்து பார்த்தார். 'அடே, ஆசாமி மரத்துக்குப் பின்னால் ஒளிகிறானே! போலீஸைக் கண்டதும் பயல் பம்முவானேன்?'

மரத்தை நோக்கி விரைந்தார், வேலாயுதம் பிள்ளை. அந்த ஆசாமி, இன்னும் நன்றாக மரத்துக்குப் பின்னால் ஒளிந்தான். ஒரே பாய்ச்சலில் பாய்ந்து, அவன் கழுத்தைப் பிடித்தார்.

"சார்! நான் ஊருக்குப் புதிசு. சும்மா இங்கே வந்தேன்"—குழறினான், மூர்த்தி.

"பொம்பளைங்க வர இடத்திலே, இந்த நேரத்தில் சும்மா உனக்கு என்ன வேலை?"

மூர்த்தியினால் பதில் சொல்ல முடியவில்லை. சொல்லக் கூடிய விஷயமா, அவன் அங்கு வந்த விஷயம்?

"என்ன ஐயா திருட்டு முழி முழிக்கிறே? படித்துறையை ஏன் பார்க்கிறே? யாராவது வந்தால் சங்கிலியை அபேஸ் செய்யவா?"

"நான் திருடன் இல்லே."

"அதுதான் தெரியுதே உன் மூஞ்சியிலே. நீ முழிக்கிற முழிதான் உன்னைக் காட்டுதே. நட தம்பி ஸ்டேஷனுக்கு. வெள்ளை வேஷ்டி, வெள்ளைச் சட்டை போட்டால் நம்பிடுவேன்னு நினைச்சியா? நட....நட...."

மூர்த்தி பதில் பேசாமல் அவர் பின்னால் நடந்தான்.

ஸ்டேஷனில் ஓர் அறையைத் திறந்து மூர்த்தியை உள்ளே போகும்படி சைகை காட்டினார், பிள்ளை. மூர்த்திக்கு அழுகை வந்து விடும் போலிருந்தது.

"நான் குற்றவாளி இல்லே. ஜெயிலில் என்னை அடைக்கிறது நியாயமில்லே" என்று கெஞ்சினான் மூர்த்தி.

"பின்னே, உனக்கு அரண்மனையா கொடுப்பாங்க? உன் மேலே சந்தேகம் இருக்கு. கேட்டால் சரியாகப் பதில் சொல்லலே,

இன்ஸ்பெக்டர் எஜமான் வரும் வரையில் உள்ளேயே இரு'' என்றார் பிள்ளை.

அந்தச் சமயத்தில், இன்ஸ்பெக்டர், ரங்க சாமி வந்து சேர்ந்தார்.

''என்ன கேஸ்?'' என்றார், ரங்கசாமி.

''அரசமரத்தடிப் பாலத்துக்குப் பக்கத்திலே இருட்டில் மறைந்திருந்தான். என்னைக் கண்டதும் மரத்துக்குப் பின்னால் பம்மினான். கேட்டால் அவனிடமிருந்து சரியான பதில் இல்லை'' என்றார் பிள்ளை.

''இருட்டு நேரத்திலே அங்கே என்னப்பா வேலை? ஆளைப் பார்த்தா வெள்ளை வேட்டியும் சட்டையுமா இருக்கு?'' என்றார் ரங்கசாமி.

''இப்ப உள்ள திருட்டுப் பயலுக வெள்ளை வேட்டிதான் உடுத்தறாங்க'' என்றார் பிள்ளை.

''சும்மா அந்தப் பக்கம் போனேன், சார்!'' என்றான் மூர்த்தி.

''சும்மா இருட்டிலே என்னப்பா அந்தப் பக்கம் வேலை? சரியான பதில் சொன்னால், விட்டுடறேன்'' என்றார், இன்ஸ்பெக்டர்.

''சும்மாதான் சார் போனேன்.'' மூர்த்தியின் குரல் நடுங்கியது.

''திரும்பத் திரும்ப அதே பதில்தானே, வசமாகக் கிடைத்தால் வழிப்பறி செய்ய உத்தேசம். இல்லையா?''—இன்ஸ்பெக்டர் கோபமாகக் கேட்டார்.

''ஐயோ, தப்பாக நினைக்காதீங்க சார். நான் அப்படிப் பட்டவனில்லை.''

பாவம், மூர்த்தி திணறினான். அழுகையே வந்து விட்டது. உண்மையை எப்படிக் கூறுவது? அதுவும், அந்த இன்ஸ்பெக்டருடைய பெண்ணையே சந்திக்க நின்ற குற்ற மாச்சே. விஷயம் தெரிந்தால், இன்ஸ்பெக்டர் தோலையே உரித்து விடுவார். மூர்த்திக்கு வாய் குழறியது. கண்கள் இருண்டன.

நல்ல வேளையாக வந்து சேர்ந்தார், சர்மா. அவர், மூர்த்தி தங்கியிருக்கும் வீட்டுக்கு அடுத்த வீட்டுக்காரர். இன்ஸ்பெக்டருக்கு நெருங்கிய நண்பர். மூர்த்தியைப் பலமுறை பார்த்திருக்கிறார். சர்மாவைக் கண்டதும் மூர்த்திக்கு உயிர் வந்தது.

''என்ன மூர்த்தி! இங்கே என்ன செய்கிறாய்? ரங்கசாமியைத் தெரியுமா?'' என்று கேட்டுக் கொண்டே, நாற்காலியில் வந்து அமர்ந்தார் சர்மா.

மூர்த்திக்கு அசடு வழிந்தது.

''ரங்கசாமி, நேத்துச் சொன்னேனே, ஒரு வரன் இருக்கிறான் நல்ல பையனென்று, இவன்தான். நீயாகவே பழக்கம் பிடித்து விட்டாய் போலிருக்கே'' என்றார் சர்மா.

ரங்கசாமி பதறிப்போய் மூர்த்தியைப் பார்த்தார். அவருக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. ''தம்பி! நாற்காலியில் உட்காரு'' என்று உபசரித்தார்.

இப்போது, இன்ஸ்பெக்டருக்கு உடல் நடுங்கியது. உள்ளமும் நடுக்கம் எடுத்தது. திரும்பி, வேலாயுதம் பிள்ளையைப் பார்த்து முறைத்தார். சக்தி இருந்திருந்தால், பார்வையிலேயே வேலாயுதம் பிள்ளையைச் சாம்பலாக்கி யிருப்பார். வேலாயுதம் பிள்ளைக்கு ஒன்றும் புரியவில்லை. கைகால்கள் உதறல் எடுத்தன.

''ரங்கசாமி, நாளைக்கு இவனைக் கூட்டிக் கொண்டு வசந்தாவைப் பார்க்க வருகிறேன். நாளைக்கு நல்ல நாள்தான்'' என்றார் சர்மா.

ரங்கசாமி தலையை அசைத்தார். சர்மா, மூர்த்தியைத் தம்முடன் அழைத்துக்கொண்டு வெளியேறினார்.

''சார், நல்ல கேஸ் வந்தது! விட்டுட்டேளே'' என்றார் வேலாயுதம் பிள்ளை, பரிதாபமாக.

''மகா பெரிய கேஸ். உமக்கு மூளையே கிடையாதுவே. நாளை, உம்மீது அந்தப் பையன் மான நஷ்ட வழக்குக் கொடுத்தால் நான் கையை விரித்து விடுவேன்'' என்றார் இன்ஸ்பெக்டர் ஆத்திரத்துடன்.

''சார்! நான் பிள்ளை குட்டிக்காரன். கேஸ் கில் போட்டா என்னால் தாங்காது''—குழைந்தார், பிள்ளை.

''பின்னே என்ன? ஒரு நல்ல பையனைப் போய் இழுத்தாந்திரே? அவன் எனக்கு மாப் பிள்ளையா வரப்போகிறவன், அப்பா! உமக்கு ஒன்றும் தெரியாது. கேஸ்தான் பிடிக்கத் தெரியாது, தங்க பஸ்பமாவது செய்யத் தெரியுதா? என் முன்னாலே நிற்காதேயும். எங்கேயாவது போய்த் தொலையும்'' என்று எரிந்து விழுந்தார், ரங்கசாமி. வேலாயுதம் பிள்ளை, தலையைத் தொங்க விட்டுக்கொண்டு, சர்வரோக நிவாரணி ஸ்டோரை நோக்கி நடந்தார்.

மறுநாள் காலையில் மூர்த்தி சர்மாவுடன் குதூகலமாக இன்ஸ்பெக்டர் ரங்கசாமியின் வீட்டுக்குச் சென்றான். முன் வாசல் வழியாகத்தான் சென்றான். இனி இருட்டான இடங்களில் பயந்து, ஒளிந்து நிற்க வேண்டிய அவசியமில்லை யல்லவா? ரங்கசாமி, மனம் நிறைந்த மகிழ்வுடன் பேசிக் கொண்டிருந் தார். சர்வ ரோக நிவாரணி ஸ்டோரிலிருந்து ஆழ்வார் அங்கு வந்து சேர்ந்தான். ரங்க சாமியிடம் ஒரு பொட்டலத்தைக் கொடுத்து, ''த...த...த....இங்க பஸ்பம்....கொ....கொ....'' என்று இழுத்தான் ஆழ்வார்.

''கொடுத்தாரா? சரி போ'' என்று கூறி ரங்கசாமி அவசரமாக அதை வாங்கிப் பையில் போட்டுக்கொண்டு, ஆழ்வாரை அனுப்பினார். ஆழ்வார் சொன்னது சர்மாவுக்குப் புரிய வில்லை. பஸ்பம் என்ற வார்த்தை மட்டும் புரிந்தது.

''என்ன பஸ்பம்?'' என்றார் சர்மா.

''ஹி......ஹி......ஒன்றுமில்லை. கொஞ்ச நாட்களாக வாதம் மாதிரி இருக்கது. நம்ம வேலாயுதம் பிள்ளையிடம் மருந்து கேட்டிருந் தேன். கொடுத்து அனுப்பிச்சிருக்கார்!'' என்றார் ரங்கசாமி.

எப்படியோ, ரங்கசாமிக்குத் தங்க பஸ்பம் கிடைத்து விட்டது. அதுமட்டுமா? மகளுக்கு ஒரு வரனும் அகப்பட்டு விட்டானே! வேலா யுதம் பிள்ளைக்கும் பொறுப்பு தீர்ந்தது. தங்க பஸ்பத்தால் நஷ்டம் ஏற்பட்டாலும், இனி இன்ஸ்பெக்டர் சீறி விழமாட்டார் அல்லவா? ஆனால் வேலாயுதம் பிள்ளைக்கு ஒரே ஒரு வருத்தம். தான் பிடித்த ஒரே கேஸும் கை நழுவிவிட்டதே என்பதுதான். இருந்தாலும் ரங்கசாமியின் ஒரே மருமகனையே ஸ்டேஷ னுக்கு இழுத்துக்கொண்டு வர அவருக்கு எவ்வளவு தைரியம் இருக்க வேண்டும்? ஏதோ நல்லகாலம், தங்க பஸ்பம், ரங்கசாமியின் கோபத்தைத் தணித்து விட்டது.

# தேன் கூடு

ஆர்வி

அத்தியாயம் 15

## சொரணை!

சொர்ணம்பாள் என்ன செய்ய வேண்டும் என்று நினைக்கிறாள்? பரமசிவத்துக்கு! இது புரியவில்லை. ஆனால் அவள் என்ன எதிர்பார்ப்பாள் என்று அவருக்கு அடியோடு புரியாமலும் இல்லை. அவள் நினைக்கிறபடி விஷயம் அவ்வளவு அற்பமானதாகத் தோன்றவில்லை. அவர் பாரிஸ்டர். குறுக்கு விசாரணையில் எந்த அளவு வரையில் போகலாமோ அவ்வளவுதான் போகலாம். அந்த எல்லைக்கு அப்பால் ஓர் அடி எடுத்து வைத்தாலும் அதுவே விபரீதமாகி விடும். ஆகவே அவர் மௌனமாக மோவாயைத் தேய்த்துக் கொண்டு, ஜன்னலுக்கு வெளியே தெரிந்த மரக் கிளையைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

அங்கே இரண்டு கிளிகள் அருகருகே அமர்ந்து மௌன இன்பத்தில் லயித்திருந்தன. ஒன்று ஆண்; மற்றது பெண். பெண் கிளிக்கு என்ன தோன்றிற்றோ என்னவோ, இருந்தாற்போல் இருந்து பறந்து போய் அது வேறு கிளையில் உட்கார்ந்து கொண்டது. ஆண் கிளிக்கு அது பொறுக்கவில்லை. அதுவும் பறந்துபோய், தன் பேடைக்கு அருகிலே போய் உட்கார்ந்து கொண்டது. ஒரு நிமிஷம்கூட இருக்காது. மறுபடியும் ஊடல் கொண்ட மங்கையைப் போல் அந்தப் பேடை வேறு ஒரு கிளைக்குச் சென்றது. ஆணும் தொடர்ந்தது. பாரிஸ்டர் ஐந்து நிமிஷங்களாக இந்தக் காட்சியைப் பார்த்துக் கொண்டே நின்றார். அவருக்கு அந்த ஆண் கிளியிடம் கோபம் கோபமாக வந்தது: "வெட்கம் கெட்ட கிளி!"

பெண்களின் சுபாவமே இப்படித்தான் போலிருக்கிறது. ஆண்கள் தங்களைச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருக்க வேண்டும் என்று அவர்கள் நினைக்கிறார்கள். தாங்கள் நினைத்தபடி யெல்லாம் சாதித்துக் கொண்டுவிட வேண்டும் என்று முரண்டு பிடிக்கிறார்கள். 'ஆனால் அதுதானே இந்தப் பரமசிவத்திடம் நடக்காது!"-- மோவாயை வருடிக் கொண்டிருந்த விரல்களில் அவருடைய மீசை தட்டுப்பட்டது.

அவர் தமக்குச் சாதகமாக, தீவிரமாக ஏதோ சிந்தித்துக்கொண்டிருக்கிறார் என்று அவரையே பார்த்தவாறு காத்திருந்தாள் சொர்ணம்பாள். 'எனக்கு எது, எப்படி, எப்போது நடக்க வேண்டும் என்பது தெரியும். நான் பிறருக்கு யோசனை சொல்லப் பிறந்தவனே தவிர, பிறர் யோசனைப்படியோ, விருப்பப்படியோ நடந்து கொள்ளப் பிறந்தவனல்ல! இது இவளுக்கு ஒரு நாளும் புரியாது; புரியப்போவதுமில்லை!" என்று அந்த அறையில் குறுக்கும் நெடுக்குமாக நடந்தார்.

கால்கள் தாமாகத் தயங்கி நின்றபோது, கண்கள் இரண்டும் மரக் கிளையிலிருந்த கிளிகளைப் பார்க்க விரைந்தன. என்ன ஆச்சரியம்! காற்று வேறு திசையாகத் திரும்பியிருந்தது. இப்போது ஆண் கிளி போன இடத்துக்கெல்லாம் பெண் கிளி போய்க்கொண்டிருந்தது. அது விளையாட்டோ, வினையேதானோ? பேடைக்கு அது துளியும் சோடை போகவில்லை. பரமசிவத்தின் கண்கள் குளிர்ந்தன. உதடுகள், "அதுதான் சரி!" என்று முணுமுணுத்தன.

"எது?" என்றாள் சொர்ணம்பாள்.

"ம்... எதுவா?"-- பார்வையைத் திருப்பாமலே கேட்டார் பரமசிவம். கிளைக்குக் கிளை தாவிக்கொண்டிருந்த ஆண்கிளி இந்த இடத்தை விட்டே பறந்

தோடி விட்டது. பெண் கிளி அப்படியும் இப்படியும் திரும்பித் திரும்பி உட்கார்ந்து பார்த்தது. பிறகு அதுவும் பறந்து போய்விட்டது.

பரமசிவம் தலையை உலுக்கிக்கொண்டு திரும்பினார். ஆவலுடன் நிற்கும் மனைவியைப் பார்த்தார். அவளுக்கு அந்த நாட்களில் எவ்வளவோ விட்டுக் கொடுத்தாகி விட்டது. அப்படியும் அவள் குறை தீர்ந்தபாடில்லை. இப்போது அவருடைய முறை வந்து விட்டது. அவர் விரும்பியதைப் பெறுவதில் அவளுக்கு என்ன கஷ்டம் இருக்கிறது? அதைப் பெறமுடியாமல் செய்வதில் அவளுக்கு என்ன லாபம்? தாம் விரும்புவது எதுவோ அதுதான் அவளுக்கும் நல்லது என்பதை அவள் ஏன் புரிந்துகொள்ளவில்லை? நல்லது ஏன் இவளுக்குக் கசப்பாக இருக்கிறது? அவளுடைய குறுகிய பார்வையைக் கண்டு அவருக்குக் கோபமும் எரிச்சலும்தான் உண்டாயின. அறியாமையே உருவெடுத்து வந்தது போல் அவள் எதிரே நின்றுகொண்டிருந்தாள்.

வந்த கோபத்தை மருந்தை விழுங்குவதுபோல் விழுங்கிவிட்டு, கட்சிக்காரனுக்குத் தைரியம் கூறுகிற பாணியில், 'சரி! எல்லாவற்றையும் சொல்லி விட்டாய்! அவ்வளவுதானே? தகாத இடங்களுக்கெல்லாம் அவள் போகிறாள்; தகாதவர்கள் எல்லாரும் வருகிறார்கள்; நாலு நாட்களுக்கு முன்பு கூட யாரோ வந்து ஏதோ வாங்கிக் கொண்டு போனார்கள். வரவர எதிர்த்துப் பேசுகிறாள்; வாயாடுகிறாள்; பொய்கூடச் சொல்கிறாள். இவ்வளவுதானா, இன்னும் இருக்கிறதா?" என்று கேட்டு நிறுத்தினார்.

சொர்ணம்பாள் இதற்கு ஏதோ சொல்ல வந்தாள். ஆனால் அவர் அதை உடனே தடுத்து, "இரு... இதெல்லாம் எனக்குத் தெரியும். இதற்கு என்ன செய்ய வேண்டுமோ, அதுவும் தெரியும். எதுவும் என்னை மீறிப் போகாது. இனி மேல் எதையும் மாற்ற முடியாது. உனக்குப் பிடிக்கிறதோ, பிடிக்கவில்லையோ நீ பொறுத்துக் கொண்டுதான் ஆகவேண்டும். நான் முடிவு செய்து விட்டேன். இந்த முடிவுதான் சரி என்பது உனக்கு இப்போது தெரியாது; போகப் போகத் தெரிந்து கொள்வாயோ என்னவோ, அதைப் பற்றி இப்போது கவலையில்லை. நீதான் தணிந்து போக வேண்டும். நீதான் பொறுத்துப் போக வேண்டும். சுந்தரி எனக்கு எப்படியோ அப்படித்தான் அவளும் உனக்கு. சுந்தரிக்கு எத்தனை சலுகையும், அதிகாரமும், உரிமையும் உபசாரமும் உண்டோ, அத்தனையும் அவளுக்கும் உண்டு. பார்க்கப்



போனால் பெரியவன் என்கிற முறையில் கொஞ்சம் அதிகமாகக் கூட உண்டு. எதில் எல்லாம் நீ தலையிடலாமோ அந்த அளவுதான் தலையிடலாம். அதற்குமேல் போக உனக்கு ஓர் அதிகாரமும் இல்லை. தெரிகிறதா? இது தெரியாவிட்டால் இப்போதாவது தெரிந்துகொள்! இதில் ஒரு துளி பிசகினாலும் நான் உன்னைத்தான்சொல்வேன்! புத்தி தடுமாறி, தாறுமாறாக நடந்து கொண்டாயோ, அப்புறம் நான் எங்கே இருப்பேன், எங்கே போவேன், என்ன செய்வேன் என்று சொல்ல முடியாது. நன்றாக முடிபோட்டு வைத்துக்கொள்! நான் வருகிறேன்! எனக்குக் கிளப்புக்குப் போக நாழியாகி விட்டது!'' என்று வெளியில் புறப்படக் கிளம்பினார்.

அவர் புறப்பட்ட வேகத்தில் எதிரே வந்த பொன்னிமீது முட்டி மோதித் தள்ளாமல் போனாரே, அது ஆச்சரியம்தான். அவள் தான் ஆகட்டும்; மொட்டுப் போலவா கையில் ஆகாரத் தட்டை எடுத்துக்கொண்டு வருவாள்?

சொர்ணம்பாளுக்கு முகம் சிறுத்து விட்டது. பரமசிவம் பேசின வார்த்தைகளால் உண்டான கோபமெல்லாம் அம்புபோல் பொன்னியின் மீது பாய்ந்தது.



"ஏண்டி! பேசுவதையெல்லாம் ஒட்டுக் கேட்டுக் கொண்டா நிற்கிறாய்? எத்தனை நேரமாகவடி நின்று கேட்டுக் கொண்டிருக்கிறாய்? எத்தனை நாட்களாக இந்தப் பழக்கம் உனக்கு? இதற்குத்தான் உன்னை வேலையை விட்டுத்தள்ளக் கூடாது என்று குதிக்கிறதோ அந்தக் கழுதை? அந்தக் கழுதைக்கு உடந்தையாக இருப்பதற்காகத்தான் உனக்குச் சோறு போட்டு, சம்பளம் கொடுத்து வேலைக்கு வைத்திருக்கிறதாடி? ஏண்டி? சொல்லேன்; ஏன் நரிக் குறத்தி மாதிரி,

பூனைபோலக் கூனிக் குறுகிக்கொள்கிறாயே, சொல்லடி! கள்ளி!''

பரமசிவம் மட்டும் விழித்துப் பார்க்காமல் இருந்திருந்தால் சொர்ணம்பாள் அவள் கன்னத்திலேயே இடித்திருப்பாள். பொன்னியின் நல்ல காலந்தான், பரமசிவம் குறுக்கே நின்றிருந்தார். பொன்னி அத்தனை பேச்சையும் கேட்டுக்கொண்டு தலையைத் தூக்காமல்தான் நின்றாள். பரமசிவம் வாசற்படிக்கு வந்தபோது அவள் வந்துகொண் டிருந்தாளா, வருவதுபோல் வெகு நேரமாக நின்றுகொண் டிருந்தாளா?

"சொல்லடி!'' என்று முடுக்கினாள் சொர்ணம்பாள்.

பொன்னி பரிதாபமாக அவளைப் பார்த்து விழித்தாள்.

"பேசினதை யெல்லாம் கேட்டுக் கொண்டுதானே இருந்தாய்?''

"இல்லே!''

"அவள் சொல்கிற பொய்யெல்லாம் உனக்கும் படிந்து விட்டதோ? இல்லே, உன் பொய்தான் அவளுக்குப் படிந்திருக்கிறதோ?''

பொன்னி தவியாகத் தவித்தாள். கையிலிருந்த தட்டு நழுவி விழுந்துவிடும் போல் இருந்தது. அந்த அறையே தலை கீழாகச் சுற்றுவது போல் தோன்றியது.

பரமசிவம் மனைவியின் போக்கைத் தடுப்பதைப்போல் ஒரு கனைப்புக் கனைத்தார். "தட்டை வைத்துவிட்டு நீ போ!'' என்று பொன்னியைப் பார்த்துக் கூறினார். பிறகு மனைவியைப் பார்த்து, "நீ எல்லாவற்றையும் கெடுத்துக் குட்டிச்சுவராக அடிக்கத்தான் போகிறாயா? அப்படியானால் சொல்லி விடு!'' என்று அதற்கு ஒரு முடிவுகட்ட விரும்புகிறவரைப் போல், சோபாவில் போய் உட்கார்ந்து கொண்டார்.

"நான்தான் குட்டிச்சுவராக அடிக்கிறேனா? மற்றவர்கள் அடிக்கவில்லையா? அவள் ஒட்டுக் கேட்டது தப்பு இல்லையா? நான் கேட்டதுதான் உங்களுக்குத் தப்பாகப் போய்விட்டதா? அதைச் சொல்லி விடுங்கள்; நான் போகிறேன். இனிமேல் இந்த வீட்டில் வாயைத் திறந்தால் கேளுங்கள்! யாருக்கு இந்த வீட்டில் அதிகாரமோ அவர்கள் கேட்கட்டும்! எந்தக் கதியற்ற அநாதைக்கு அந்த அதிருஷ்டமோ, அவளே எல்லாவற்றையும் செய்து கொள்ளட்டும்! அதைச் சொல்லி விடுங்கள்--நான் போகிறேன்!''

"சொர்ணம்!''

"சொர்ணம்! என்ன சொரணையற்றவளே என்று கூப்பிடுங்கள்! அதுதான் எனக்குப் பொருந்தும். சொரணை கெட்டுப் போனால்தான் இனிமேல் இந்த வீட்டில் இருக்கலாம். இனிமேல் எனக்கு இங்கே என்ன இருக்கிறது? வேலைக்காரிக்கு இருக்கிற சலுகையும் பவிஷும் எனக்கு இருந்தால்தானே!''

"சொர்ணம்...!''

"தப்பு எல்லாம் என்மேல்தான்! நான் செய்தது எல்லாம் தப்புத்தான்! ஒன்றா, இரண்டா? இன்றைக்கா, நேற்றைக்கா? எப்போதோ செய்ததெல்லாம் கூட என் தப்புத்தான். இந்தத் தப்புக்கான தண்டனையைத்தான் இன்று அநுபவிக்கிறேன்! இந்தத் தப்புக்கு இன்னும் எப்படிக் கன்னத்தில் போட்டுக் கொள்வது? தப்பு, தப்பு, தப்பு என்று ஆயிரம் தடவைகள் போட்டுக் கொள்ளட்டுமா?''

சொர்ணம்பாள் என்ன பேசுகிறோம் என்கிற நிதானம் தவறி, பளிச்சுப் பளிச் சென்று தன் கன்னத்தில் போட்டுக் கொண்டாள். கண்களும் கன்னங்களும் ரத்தமாகச் சிவந்து விட்டன. கண்களை மூடிக்கொண்டு கன்னத்தில் அடித்துக் கொண்டதை எப்போது நிறுத்தப் போகிறாள் என்பதைப் பார்க்க, பரமசிவம் அங்கே காத்திருந்தால்தானே!

நான் எப்பொழுதும்

# ஹமாம்

சோப்பையே வாங்குகிறேன்

புதுமுறையான மிருதுத்துவம் அளிக்கும்
இதன் தன்மையினால் மிருது வான நுரை அளிக்கிறது.

இதை உபயோகித்து குளிக் கும்போது சுத்திகரித்து புத்துணர்ச்சி அளிக்கிறது
ஹமாம் சோப் மிகவும் நேர்த்தி யானது நறுமணமுள்ளது.

நீண்ட நாட்கள் நீடித்து நிற்கிறது.
மிகவும் சிக்கனமானது.

## ஹமாம்

சோப்பை உபயோகித்து புத்துணர்ச்சி யுடனும் நறுமணத்துடனும் விளங்குங்கள்




THY-2 TAM.

ஓர் டாடா தயாரிப்பு—எனவே
அது நல்லதென்று உங்களுக்கே தெரியும்.

எங்கள் குடும்பத்தில் யாவரும்
**ஹமாம்** சோப்பையே விரும்புகிறார்கள்



வீரச்செயல்கள் நிறைந்த மகத்தான
வனப்படம். காடுகள் அடர்ந்த மலைப்
பிரதேசத்தில் தயாரிக்கப்பட்டது..
நீலாவின்
யானை
வளர்த்த
வானம்பாடி
(தமிழ் & தெலுங்கு)
டைரக்ஷன் :
ஸ்டூடியோ :
சுப்ரமணியம் · மெர்ரிலாண்ட்
நவம்பர் 27உ முதல்
தென்னாடெங்கும்

அவள் கண்களைத் திறந்து பார்த்தபோது, அவர் எழுந்து போயிருந்தார்!

சொர்ணம்பாள் அப்படியே விக்கித்துப் போய் நின்றாள். கையும் காலும் வெடவெடக்க அவளால் வெகு நேரம் நிற்க முடியவில்லை. பரமசிவத்துக்காக வைத்திருந்த பலகாரத் தட்டு அவளைப் பார்த்துப் பரிகாசமாய்ச் சிரிப்பதுபோல் இருந்தது. பரமசிவம் அதைத் தொட்டுக் கூடப் பார்க்கவில்லை. அவளுடைய முகம் சிவந்தா போயிருந்தது? இல்லை, இல்லை! முகத்தில் அப்படியே கரியைக் குழைத்துப் பூசியதுபோ விருந்தது! யாராவது அப்படிப் பூசினார்களா அல்லது அவளாகவே பூசிக்கொண்டாளா? குளிர் சாதன அறையில் அவளுக்கு வேர்த்துப் புழுங்கியது. இரண்டு நெற்றிப் பொட்டுக்களும் இடிஇடியென்று இடித்தன. அவள் சோபாவில் அடியற்ற மரம்போல் விழுந்து சாய்ந்தாள். காரணம் விளங்காத கலவரமும் திகிலும் அவள் உள்ளத்தில் புகுந்து கொண்டன. அவளுடைய நெஞ்சம் பதைபதைத்தது; வயிறு கொதித்தது; பொங்கிய குருதி கண்ணீராகப் பெருகி வடிந்தது; மூச்சு வெளிவரத் தெரியாமல் திணறியது.

அந்தக் கொதிப்பு அடங்கவேயில்லை; நெஞ்சத்துச் சுமை நீங்கவேயில்லை. நேரம் மட்டும் போய்க்கொண்டிருந்தது.

"அம்மா!"

சொர்ணம்பாள் மரக்கட்டையைப் போல் சொரணையின்றிக் கிடந்தாள். அது சுந்தரியின் குரல்தான் என்று தெரிந்தது. அவள் தன்னைத் தேடிக் கொண்டு அங்கே வருகிறாள் என்றும் தெரிந்தது. தெரிந்ததனால் துக்கம்தான் அதிகமாயிற்றே தவிர, எழுந்திருக்க மட்டும் முடியவில்லை.

"அம்மா!"

கன்றின் குரலைக் கேட்டுத் தாயின் துக்கம் வெடித்தது.

"உன் அம்மாவுக்கு இன்னும் சாவு வரவில்லையடி, சுந்தரி, வரவில்லை! இன்னும் என்னவெல்லாம் நடக்குமோ, இன்னும் எவ்வளவெல்லாம் அநுபவிக்க வேண்டுமோ, தெரியவில்லையடி, சுந்தரி, தெரியவில்லை. அப்புறம்தானடி உன் அம்மாவுக்குச் சாவு!" என்று வெடித்த துக்கம், அழுகையாக மாறியது.

"என்னம்மா, இது!" என்று கேட்டுச் சுந்தரி, துயரம் பொறுக்காமல் அவளை உலுக்கினாள்.

"அம்மா! நானா அம்மா?" என்று சொல்லிக் கொண்டே வந்த சொர்ணம்பாள் தன் மகளை இறுகத் தழுவி அணைத்துக் கொண்டு, "என் செல்வமே! இந்தப் பாவியின் வயிற்றில் ஏன்தான் பிறந்தாயோ?" என்று குமுறினாள்.

தாயின் துயரம் பொறுக்காமல் மகளும் அழத் தொடங்கினாள். விளக்கைக் கூடப் போடாமல் இருளில் அவர்கள் இருவரும் அந்த அணைப்பிலேயே தோய்ந்து கிடந்தார்கள்.

வெகு நேரம் கழித்து, "எழுந்திரு அம்மா, எனக்குப் பசிக்கிறது!" என்று கூறினாள் சுந்தரி.

சொர்ணம்பாளுக்கு அழுகை தெளிந்து, அகங்காரம் வந்து கொண்டிருந்தது.

"பசித்தால் போய்ச் சாப்பிடு! என்னை இழுக்காதே!" என்றாள்.

தன்னை விட்டு விட்டுச் சுந்தரி தனியே போகமாட்டாள் என்றுதான் சொர்ணம்பாள் எண்ணினாள். இப்படிப் போவதை அவள் விரும்பவும் இல்லை. ஆனால் சுந்தரிக்குத் தன் தாயைவிடப் பசிதான் பெரிதாகி விட்டதே?

## அத்தியாயம் 16

# எதிர்பார்த்தது!

உஷா என்ன எதிர்பார்த்தாளோ, அதுவேதான் கிட்டத்தட்ட நடந்திருந்தது. ஆனால் அதில் ஒரு சிறு மாறுதல்.

அவள் சேகரிடம் கொடுத்த நூறு ரூபாயும் பாபுவுக்குப் போய்ச் சேராது என்று அவள் எண்ணினாள். எதனாலோ அவளுக்கு அப்படி ஒரு சந்தேகம் உண்டாயிற்று. அது பாதி உண்மையாகிவிட்டது. அதாவது, சேகர் நூறு ரூபாயையும் பாபுவிடம் கொண்டு போய்க் கொடுக்கவில்லை. அவனுக்காகவும் செலவிடவில்லை. அதில் பாதியைத்தான் பாபுவிடம் கொண்டு போய்க் கொடுத்திருந்தான்.

அப்படியே பணத்தைக் கொண்டு போய்க் கொடுத்தாலும் ஒரு பாதியைப் பாபுவின் கண்ணிலேயே அந்தச் சேகர் காட்ட மாட்டான் என்று அவளுக்குப் பட்டது. இதிலும் பாதிதான் உண்மையாயிற்று. அதாவது சேகர் ஒரு பாதியைப் பாபுவிடம் கொடுத்து விட்டு மறு பாதியைத் தான் எடுத்துக்கொண்டது உண்மைதான். ஆனால் கண்ணில் காட்டாமல் கொண்டுபோய்விடவில்லை.

"இதோ பாத்தியாடா, பாபு! இது எவ்வளவு தெரியுமா? சரியாக ஐம்பது! அந்த உஷா உனக்கு ஐம்பதுதான் கொடுக்க இருந்தாள். ஆனால் நான்தான் முழுசாகத் தட்டிக்கொண்டு வந்து விட்டேன்! ஆகையினாலே இப்போதைக்கு இது எனக்கு! சரிதானா?" என்று அந்த நோட்டுக்களைப் பாபுவின் கண்களில் காட்டிவிட்டுத்தான், தன் கால் சராயின் பின்புறத்தில் இருந்த பையில் திணித்துக் கொண்டான் சேகர்.

பாபுவுக்கு உண்டான மனக் கிளர்ச்சியில் அவன் வாயையே திறக்கவில்லை. உணர்ச்சிப் பெருக்கினால் மூடிக்கொண்ட கண்களையும் திறக்கவில்லை. அவளுடைய அன்பை எண்ணி எண்ணி அவன் உள்ளம் நன்றியினால் பொங்கியது; நாத் தழுதழுத்தது. மூடிய கண்களுக்குள்ளே உஷாவின் இனிய முகம் உணர்விலிருந்து விடுபட அவன் விரும்பவில்லை. உஷாவின் பணத்தைக் கையில் வாங்கிக் கொண்டதுமே அவனுடைய நோயெல்லாம் சிட்டாகப் பறந்து விட்டது.

அன்று மாலையில் அவன் இருந்த வார்டையும் படுக்கை எண்ணையும் கண்டு பிடித்துக்கொண்டு உஷா எப்படியோ வந்துவிட்டாள். அவள் தன்னை நோக்கி வருவதைத் தூரத்திலிருந்தே கண்டுவிட்ட பாபு, படுக்கையில் துள்ளி யெழுந்து உட்கார்ந்து விட்டான்.

உஷா புன்னகை பூத்த முகத்துடன் அவனையே சிறிதுநேரம் பார்த்துக்கொண்டிருந்தாள். ஒன்றும் பேசவில்லை. பாபுவுக்கு நெற்றியெல்லாம் நன்றாக வேர்த்து விட்டிருந்தது.

அந்த 'வார்டு ஸிஸ்டர்' வந்து உஷாவுக்கு எதிரில் பாபுவைப் பார்த்து, "கொஞ்சம் வாயைத் திற!" என்று ஒரு தெர்மாமீட்டரை உதறிவிட்டு நாக்குக்கு அடியில் செருகினாள்.

சிறிது நேரம் கழித்துத் தெர்மாமீட்டரைக் கையில் எடுத்துக்கொண்டு, உற்றுப் பார்த்தாள். பிறகு அவன் கட்டிலில் தொங்கிய பலகையை எடுத்து, கோணமாக இழுத்திருந்த கோட்டைக் கீழே இழுத்தாள். உஷாவின் காதுபட, "நார்மல்!" என இசைத்தாள்.

பாபு மெதுவாகத் தலையணையைத் தூக்கினான். உஷா அனுப்பியிருந்த பணத்தில் சரிபாதி அங்கே தூங்கிக் கொண்டிருந்தது. உஷா தலையைத் திருப்பிக் கொண்டாள்.

"கோபமா?" என்று கேட்டான் பாபு.

"உம்....எதுக்கு?" என்றாள் உஷா.

"கடிதம் எழுதினேனே....புத்தி கெட்டுப் போய். அதற்குத்தான்! அதனால் தான் இந்த ஜுரம்!" என்றான் பாபு.

உஷா நேர்டையாகப் பதில் கூறாமல், "இப்போது தேவலையா?" என்றாள்.

"நீதான் பார்க்கிறாயே! உன் பணத்தைக் கையில் வாங்கியதுமே ஜுரம் எங்கேயோ பறந்து விட்டது!"

"எனக்கு என்னவோ சந்தேகம். அதனால்தான் நானே வந்துவிட்டேன்!"

"அவரிடம் அவருடைய அப்பா அம்மாவுக்கே நம்பிக்கையில்லை. ஆனால்...."

"உனக்கு நம்பிக்கை தானிருக்கும். எங்கே, அதில் எவ்வளவு இருக்கிறது?"

"ஐம்பது,...பாக்கி ஐம்பது அவரிடமே இருக்கிறது?" என்றாள் பாபு.

"நினைத்தேன்!"

பாபு சிரித்து விட்டு, "அது எங்கேயும் போய்விடாது. இன்று கிண்டிக்குப் போகும். ஆனால் சாயங்காலமே வந்தாலும் வந்துவிடும். வராவிட்டாலும் கவலையில்லை. என்றைக்கோ ஒரு நாள் அது கட்டாயமாக வந்துவிடும். சேகரைக் கண்டால் யாருக்குமே பிடிப்பதில்லை; நம்பிக்கையும் உண்டாவதில்லை. ஆனால் அவர் விரோதியாலும் வெறுக்கத் தகுந்தவர் அல்ல. எனக்குத் தெரியும். மனித இதயம் படைத்தவர், எல்லாருக்குமே நல்லவர்கள் போலத் தென்படுகிறவர்களை விட!" என்றான்.




டி. வி. எஸ். ஸ்தாபனத்தார் செகந்திராபாத்தில் சுந்தரம் மோட்டார்ஸின் புதிய கிளையைத் துவக்கி ஆந்திரப் பிரதேசத்தில் மாஸேபெர்குஸன் டிராக்டர்கள் விநியோகத்தை விஸ்தரிக்கிறார்கள். இவ்வைபவத்துக்கு ஆந்திர ராஜ்ய விவசாய மந்திரி திரு பி. திம்மா ரெட்டி தலைமை வகித்தார். மேலேயுள்ள படத்தில் சுந்தரம் மோட்டார்ஸின் டைரக்டர் ஸ்ரீ ஆர். ரத்தினம் அவர்களையும் மாஸேபெர்குஸன் ஸ்தாபனத்தைச் சேர்ந்த ஸ்ரீ மில்ஸ் அவர்களையும் காணலாம்.

---

"உம்!" என்று குரலைச் சுழற்றினான்.

"என்னைவிடக் கூட!"

"உம்!"

"சிரிக்காமல் 'பிருகா' கொடுக்கிறாயே! பரிகாசமா யிருக்கிறதா உனக்கு?"

"இல்லை. அப்படியெல்லாம் நான் நினைக்கவில்லை. ஆனால் அடுத்தபடி என்னைவிடக் கூட என்று சொல்லப் போகிறாய்! அதுதானே?"

"போக்கிரி!" என்று சிரித்தான் பாபு.

"வெறும் ரொட்டியையும் பாலையும் குடித்து விட்டும் இவ்வளவு பேச முடிகிறதே உன்னால், சாதாரண உடம்பாக இருந்தால் உன்னை யாரால்தான் பேச்சில் ஜயிக்க முடியும்?"

"பேசாமல் ஜயிக்கிறவர்கள் உண்டு!"

உஷா சட்டென்று எழுந்து நின்றவள் கைக் கெடிகாரத்தைப் பார்த்தாள்.

"போகலாம்; உட்கார்!"

"அது நாலு நாட்களுக்கு முன்பு வரையில். இனிமேல் அப்படியில்லை."

பாபுவின் முகம் சுண்டியது. கண்கள் இரண்டும் எதையோ கேட்க முயன்றன.

"சொன்னபடி வந்து பார்க்காமல் இருந்ததற்கா!" என்றாள் உஷா.

"என்னைப் பற்றிய வரையில் அது நல்லதாயிற்று. அந்தக் கடிதத்தையும் எழுதி விட்டு, உன் முகத்தையும் பார்க்கவா? ஆனால் உன்னைப் பற்றிய வரையில் நீதான் அதற்கு நூறு ரூபாய் அபராதம் செலுத்திவிட்டாயே!"

"இனிமேல் ஜுரம் ஒன்றும் வராதே!"

"வராது....நிச்சயமாக வராது."

"அதுதான் கேட்டேன்!" என்று கிளம்பினாள் உஷா.

"மறுபடியும்...."

"ஊஹூம்; வர மாட்டேன்!" என்று உஷா திரும்பிப் பார்க்காமலே அவன் பார்வையிலிருந்து மறைந்துவிட்டாள்.

நாலு நாட்களுக்கெல்லாம் பாபு ஆஸ்பத்திரியை விட்டு நல்லபடியாக வெள்ளையன் தோட்டத்துக்கு வந்துவிட்டான் என்று கேள்விப்பட்டாள். அது அவள் எதிர்பார்த்ததுதான். தான் போகாததால் அநேகமாகத் தன்னை வந்துபார்க்கக் கூடும் என்றும் அவள் எதிர்பார்த்தாள். வரவேண்டிய அவசியமில்லை என்று கூடக் குப்பனிடம் சொல்லியனுப்பினாள்.

அவனும் வராமல் இருந்திருப்பான். ஆனால் சேகர் வந்து திருப்பிக் கொடுத்திருந்த நூறு ரூபாயை என்ன செய்வது? அதைக் கொடுக்கிற சாக்காகத்தான் வந்தான். ஆனால் பரமசிவம் பார்த்துக் கொண்டிருக்கும் போதுதானா அவன் வர வேண்டும்? உஷாவுக்குத் தலை சுற்றியது.

பாரிஸ்டர் அவன் வருவதையும் பார்த்தார். அவள் நிற்பதையும் பார்த்தார். இருவரும் விழிப்பதையும் பார்த்தார்.

பாபு ஏதோ காரியமாக வந்தவனைப் போல் அவரைப் பார்த்ததும் ஒரு கும்பிடு போட்டு வைத்தான். பரமசிவம் அதைக் கவனிக்காதவர் போல் வண்டியில் போய் ஏறிக் கொண்டு விட்டார். சொர்ணம் கன்னத்தில் போட்டுக் கொண்டிருந்த போது கோபமாக வெளியில் வந்த சமயம் அது. இருந்தாலும் அவர் பாபு கும்பிடு போடுவதையும், கும்பிடு போட்ட கையிலே நோட்டுக்கள் இருப்பதையும் கவனிக்கத் தவறவில்லை. அவருக்குக் கண்தான் மூளை! அவருடைய அபார ஞாபகசக்திக்கு அதுதான் சாவித்துவாரம்!

(தொடரும்)

# அவள் யார்?

சுதர்சனம் பிக்சர்ஸாரின் 'அவள் யார்?' என்ற படம் சற்றுப் புதுமையாக ஆரம்பமாகிறது.

கணவனால் பழி சுமத்தப்பட்டு, வீட்டை விட்டு வெளியேற்றப்பட்ட மகாலட்சுமி ரயில் பிரயாணத்தில் தன் அருமைக் குழந்தை கண்ணனையும் விட்டுப் பிரிந்து அதே ஏக்கத்தில் சித்தசுவாதீனத்தை இழந்து, ஒரு பெரிய மனிதரின் பெண்ணுக்கு வளர்ப்புத் தாயாக வேலை பார்க்கிறாள். ஒரு மஞ்சள் பத்திரிகை பீனல் பாரமாக இருந்த அப் பெண்ணின் வாழ்வைக் காப்பாற்றிக் கொலைக் குற்றத்துக்கு ஆளாகிறாள்.

தனக்குப் பழக்கப்பட்ட பாத்திரத்தில் பண்டரிபாய் பண்பு துலங்க நடித்திருக்கிறார்.

மகாலட்சுமியின் கணவன் வக்கீல் சதாசிவமாக வரும் சிவாஜி கணேசன் நீதிபதியாகி, படத்தையும் முடித்து வைக்கிறார்; இரண்டொரு கட்டங்களில் மிக உருக்கமாக நடிக்கிறார்.

வில்லன் பகதூராக வரும் டி. கே. ராமச்சந்திரனும் பூபதியாகவரும் டி. ஆர். ராமச்சந்திரனும் தங்கள் நடிப்பினால் படத்துக்கே உயிர் கொடுக்கிறார்கள்.

கதையின் ஓட்டத்தைத் தடுத்து, விறுவிறுப்பைக் குறைக்க, மாலினி (ஆஷா) என்னென்னவோ அசட்டு நடனங்கள் ஆடுகிறார். பரிதாபம்!

பி. லீலா பாடும் "கண்ணே என் கண்மணியே, கண்ணனே கண் வளராய்" என்ற பாபநாசம் சிவன் அவர்களின் பாட்டு அருமையாக இருக்கிறது.

எஸ். வி. ரங்காராவ் சிறிது நேரமே ரயில் பிரயாணத்தில் வந்தாலும், ரயில் சிநேகிதர்களைப் போல் அவரை மறந்துவிட முடியவில்லை.

வித்துவான் வே. இலட்சுமணன் எழுதியிருக்கும் வசனம் நன்று யிருக்கிறது.

இப் படத்தைத் தயாரித்து டைரக்ட் செய்திருக்கும் கே. ஜே. மகாதேவன், ஒரே பாதையில் போய்க் கொண்டிருந்த தமிழ்ப் படங்களுக்குத் துணிந்து புது வழி காட்ட முயன்றிருக்கிறார். முழு வெற்றி கிடைக்கவில்லை. ஆனால் முயற்சி பாராட்டுக்குரியது.









அன்று நடந்ததை நினைக்க நினைக்க, காமினிக்கு வேதனையை விட வியப்புத்தான் அதிகரித்தது. தன்னிடம் உயிரையே வைத்திருக்கும் கணவன் அவ்வளவு கீழ்த்தரமாக நடந்துகொண்டு தன்னை அப்படி அவமானப்படுத்துவார் என்று அவள் கொஞ்சமும் எதிர்பார்க்கவில்லை. காமினிக்கு ஏதாவது ஒரு பொருள் தேவையென்றால் அவள் வாய்விட்டு அதைக் கேட்கும்படியாகக் கணபதி வைத்ததில்லை. காமினி நினைப்பாள்; கணபதி அதை அப்பொழுதே காரியத்தில் காட்டுவான்.

''காமினி, உனக்கு ஒன்றுமே வேண்டாமா? என்னை ஒன்றும் கேட்க மாட்டேன் என்கிறாயே!'' என்பான் கணபதி.

''என்னைக் கேட்கவிட்டால்தானே! நீங்களாகவே அதை வாங்கிவந்து விடுகிறீர்களே. எனக்குக் கூட ஒரு குறை...''

''...என்ன! குறையா? அது என்ன காமினி! உடனே சொல். நிவர்த்தி செய்துவிடுகிறேன்.''

''...அது தீராத குறையாகிவிட்டது...!''

''தீராத குறையா? காமினி, விளையாடுகிறாயா, என்ன...?''

''இல்லை. உண்மையாகத்தான் சொல்லுகிறேன். நான் ஒன்று கேட்டு அதை நீங்கள் வாங்கித் தரவேண்டும் என்று எனக்கு ரொம்ப நாட்களாக ஆசை....அது தீராத குறைதானே!'' என்று கொஞ்சலாகக் கேட்டுக் காமினி தன் கரிய பெரிய விழிகளால் அவனை விழுங்கிவிடுவது போலப் பார்த்தாள்.

அவளது பார்வையில் கணபதி சொக்கிப் போனான்.

முன்பெல்லாம் காமினி இந்தச் சம்பவத்தை நினைவுகூர்ந்து புளகமெய்திப் பூரித்துப் போவாள். ஆனால் இப்பொழுதோ, அந்த நினைப்பே அவள் உள்ளத்தில் கசந்தது. உடம்பை உலுக்கியது.

'முடியாது' என்று கணபதி ஒரே வார்த்தையில் மறுத்திருந்தால் கூடக் காமினி இவ்வளவு வருத்தப்பட்டிருக்க மாட்டாள். ஆசை காட்டி மோசம் செய்த கணபதியின் அற்ப குணம் அவள் மனத்தை அரம் போல் அறுத்தது. 'இவ்வளவு கயமைக் குணமுடையவரையா கணவனாக அடைந்தேன்!' என்று நினைக்க நினைக்க விசனத்தை விட வியப்பே அதிகமாயிற்று. கல்யாணமாகி நான்கு வருஷங்களாக இந்த அற்ப குணத்தை எங்கே அவர் மறைத்து வைத்திருந்தார் என்று எண்ணி அவள் அடைந்த மன வேதனைக்கு அளவே இல்லை.

''காமினி! நீ ஒரு மலர். உன்னை வாடா மலராக வைத்துக்கொள்ள வேண்டியது என் பொறுப்பு!'' என்று அடிக்கடி கூறுவானே கணபதி! அது கூடத் திரைக் கதை வசனம் மாதிரி அர்த்த மற்றதுதானா? பழைய நினைவுகளெல்லாம் காமினியின் உள்ளத்தில் விசுவரூபம் எடுத்து வாட்டின.

கல்யாணமே செய்துகொள்ளப் போவதில்லை என்று பீஷ்மப் பிரதிக்ஞை செய்துகொண்டிருந்த கணபதியை மனமாற்றம் கொள்ளச் செய்த காமினியைக் கண்டவர்கள் வியப்பே அடைவார்கள்.

கண்டவர் மயக்கம் கொள்ளும் கட்டழகி அல்ல காமினி. அவள் தோற்றத்தில் பிரமாதமான கவர்ச்சி இல்லாவிட்டாலும், புறக்கண்களுக்கு மட்டும் புலனாகாத ஒரு தனி எழில் அவளிடம் இருக்கிறது என்பதைக் கணபதி எப்படியோ முதன் முதலில் அவளைப் பார்த்த வுடனேயே தெரிந்து கொண்டு விட்டான்.

காமினியைப் 'பெண் பார்க்கப்' போன அன்று, எத்தனையோ அழகிகளைப் 'பெண் பார்த்து'ப் பழகிய கணபதியின் கண்களுக்கு அவளது அசாதாரண எழில் உட்புலனில் தெறித்துவிட்டது. எத்தனையோ வீடுகளில் சொஜ்ஜியும் பஜ்ஜியும் ருசி பார்த்து அநுபவம் பெற்ற அவன் நாக்கு அன்று காமினியின் இல்லத்தில் அவற்றில் தனிச் சுவையைக் கண்டது.

''அரச மரத்தடி கணபதிக்கும், நம் சாம்பசிவத்தின் மகன் கணபதிக்கும் ஒரே தினத்தில் கல்யாணம் நடக்கும்'' என்று ஊரார் பரிகாசம் செய்வதைக் கணபதி பொருட்படுத்துவதேயில்லை. வெளிப்படையாகச் சொல்வதற்கு அவனுக்கு ஒரு காரணமும் புலனாகாவிட்டாலும், தான் கல்யாணம் செய்துகொள்ளப் போவதில்லை என்று கணபதி அசட்டுத்தனமாகப் பிடிவாதம் செய்துகொண்டிருந்தான். எந்தப் பெண்ணைப் பார்த்தாலும் தனக்குப் பிடிக்கவில்லையென்று சொல்லித் தட்டிக் கழித்து விடுவான். ஆனால் காமினியிடம் என்னத்தைக் கண்டானோ தெரியவில்லை, அவளை மணந்துகொள்ள அப்பொழுதே சம்மதம் தெரிவித்துவிட்டான்.

சின்ன வயசிலேயே தாய் தந்தையர்களை இழந்துவிட்டான் கணபதி. அவன் மாமா

# நீலாந்

தான் அவனைப் படிக்க வைத்து முன்னுக்குக் கொண்டு வந்தார். படிப்பில் அக்கறையுள்ளவனாகையினால் ஒரு வகுப்பில் கூடத் தவறாமல் பரீட்சைகளில் தேறி, பி. ஏ. பட்டதாரியாகி, மத்திய சர்க்கார் இலாகாவில் ஒரு உத்தியோகமும் பெற்றுவிட்டான். அப்புறம் பெண்ணைப் பெற்றவர்கள் அவனை விட்டு வைப்பார்களா? மாமாவின் பேச்சைத் தட்டாதவன் என்றாலும் கணபதியினால் தான் பார்த்த எந்தப் பெண்ணையும் வாழ்க்கைத் துணைவியாக ஏற்க முடியவில்லை.

நான் அவன் வேலை பார்த்த இலாக்காவில் தலைமைக் குமாஸ்தாவாக வேலை பார்த்து வந்தபடியினால் அவனை எனக்கு நன்றாய்த் தெரியும். என்னிடம் எந்த விஷயத்தையும் அவன் மறைக்க மாட்டான்.

கணபதி தனக்கு விவாகம் நிச்சயமாகிவிட்டது என்று கூறியதும் எனக்கு அதிர்ச்சிதான் ஏற்பட்டது.

''என்ன கணபதி, உனக்கா...? நிச்சயமாகிவிட்டதா? பெண் எந்த ஊர்?'' என்று அதிசயத்துடன் கேள்வி மேல் கேள்விகளாக அடுக்கினேன்.

''என்ன ஸார் இது! இப்படிக் கேட்கிறீர்கள்? எனக்குக் கல்யாணமே ஆகாதென்று

தீர்மானித்து விட்டீர்களா ?'' என்று கணபதி சற்றுச் சோர்வோடு கேட்டான்.

''இல்லை, கணபதி ! எத்தனையோ பெண்களால் அசைக்க முடியாத உன் உறுதியை உடைத்தெறிந்த அந்த உத்தமி யார் என்று அறியவே அப்படிக் கேட்டேன் !'' என்றேன்.

உடனே கணபதி ஒரு பெண்ணின் புகைப் படத்தை என்னிடம் கொடுத்தான். அவள் மூக்கும் விழியுமாகப் பார்ப்பதற்கு நன்றாக இருந்தாள். ஆனால் கணபதி இதுவரை பார்த்த பெண்களிடம் காணாத என்ன அழகை இவளிடம் கண்டு விட்டான் என்பது தான் எனக்கு விளங்கவில்லை.

காமினி உள்ளூர்ப் பள்ளி உபாத்தியாயரின் ஒரே மகள். நல்ல புத்திசாலி. பள்ளி உபாத்தியாயர்களின் குழந்தைகளுக்கு அளிக்கப்படும் கல்விச் சலுகையின் உதவியால் உயர்நிலைப் பள்ளிப் படிப்பை முடித்துவிட்டுக் கல்யாணத்துக்குத் தயாரா யிருந்தாள். உருக்கி வார்த்த தங்கப் பதுமை, செதுக்கி யெடுத்த சிற்பியின் சிலை, கடைந்தெடுத்த தந்தப் பதுமை என்றெல்லாம் காமினியை வர்ணிக்க முடியாதுதான். ஆனால் காமினியின் முகத்தில் முத்துப் போல் நின்று எரியும் குத்து விளக்கின் அடக்கமான ஒளியும், பகட்டில்லாத அழகும் படிந்திருந்தன.

''என்னவோ ஸார் ! அவள் உள்ளே விருந்து வந்து என்னை நமஸ்காரம் பண்ணின மாதிரியைப் பார்த்ததுமே என் மனம் நெகிழ்ந்து விட்டது. உங்கள் ஆச்சரியத்துக்குக் காரணம் புரிகிறது. எத்தனையோ அழகான பெண்களை யெல்லாம் வேண்டாமென்று உதறிய நான் காமினியைக் கண்டதும் கலங்கித்தான் போனேன். நமஸ்காரம் பண்ணி விட்டு எழுந்த அவளை ஒரு முறை, ஒருகணம் நிமிர்ந்து பார்த்தேன். அவளது வேல் விழிகளில் தேங்கி நின்ற நீரும், பார்வையில் காணப்பட்ட இனந் தெரியாத ஏக்கமும் என்னை என்னவோ செய்தன. 'என்னைக் கைவிட்டு விடாதீர்கள்' என்று அவள் விழிகள் கெஞ்சின. 'அவ்விழிகளில் நான் கண்டது, பகவானைக் காண விழையும் பக்தனின் ஏக்கமா, தண்டனையை எதிர்பார்த்து நிற்கும் குற்றவாளியின் விரக்திப் பார்வையா என்று என்னால் நிச்சயிக்க முடியவில்லை. உடனே என் மாமாவிடம் என் சம்மதத்தைத் தெரிவித்து விட்டேன். அவரும் அயர்ந்துதான் போனார். என் சம்மதம் தெரிவித்த மறுகணம் காமினியின் முகத்தைப் பார்த்தேன். அடடா ! அவள் முகத்தில் என்ன குதூகலம்! அந்த மலர் முகத்தில் பொங்கிய மகிழ்ச்சியைப் பார்க்க எத்தனை ஜன்மம் வேண்டுமானாலும் எடுத்துப் பெண் பார்க்கப் போய் அவளை மணக்கச் சம்மதம் தெரிவிக்கலாம் என்று தோன்றியது !'' என்றான் கணபதி.

''கணபதி, இவ்வளவு கவிநயம் உனக்கு எங்கிருந்து வந்தது ? அந்தப் பெண்ணைக் கண்டதுமே இவ்வளவு பேச்சு வன்மை வந்து விட்டதே உனக்கு ?'' என்று கூறின என்னைப் பார்த்துத் தலைகுனிந்து கொண்டான்.



அதற்குப்பிறகு கணபதிக்கும் காமினிக்கும் கல்யாணம் விமரிசையாக நடந்தது. விவாகம் ஆகிறதற்கு முன்பு இருந்த கணபதிக்கும் இப்பொழுதிருக்கும் கணபதிக்கும்எவ்வளவோ வித்தியாசம் இருந்தது. காரியாலயம் ஐந்து மணிக்கு மூடப்படுவது வழக்கம். நாலரை மணிக்கெல்லாம் கணபதியின் உடல் முழுதும் ஒரு வேகம் பரவும். வேலையைப் பரபரவென முடித்து விட்டு முள்ளின் மேல் இருப்பது போல் தவித்துக் கொண்டிருப்பான். நான் அவனைக் கவனித்தும் கவனிக்காதவனைப் போல் இருப்பேன். வீட்டுக்குப் போகும் ஆர்வத்தோடு துடிக்கும் அவனை விரைவில் அனுப்பி வைப்பதில் ஒரு ஆவல் எனக்கு. அதற்காகவே மாலை வேளைகளில் அவனுக்கு வேலை அதிகமாகக் கொடுக்க மாட்டேன்.

* * *

தீபாவளிக்கு இன்னும் ஒரு வாரம் இருந்தது. கணபதியின் புதுமண வாழ்வில் இது நான்காவது தீபாவளி. அவனுக்கு ரொம்ப நாட்களாகவே ஒரு ஆசை. காமினியைக் கடைக்கு அழைத்துப் போய் அவள் மனத்துக்குப் பிடித்த புடவையாகப் பார்த்து வாங்கித் தந்துவிட வேண்டும் என்பதுதான் அது. இரண்டு மூன்று வருஷங்களாக அவன் மாமா தான் தீபாவளி ஜவுளிகளை வாங்கிவந்தார். இந்த வருஷம் அவர் உத்தியோக நிமித்தம் வெளியூர் போக நேர்ந்தது. ஆகவே, கணபதியின் விருப்பம் பூர்த்தியாகும் தருணமும் வந்து விட்டது.

காமினியை அழைத்துக்கொண்டு ஜவுளிக் கடையை நோக்கித் திக்விஜயம் செய்யப் புறப்பட்டான்.

இருவரும் பல கடைகளில் ஏறி இறங்கினர். காமினியின் மனசுக்குப் பிடித்த புடவையாக எங்கும் கிடைக்கவில்லை. எதுவானாலும் காமினியின் மனசுக்குப் பிடித்த பொருளைத்தான் வாங்கவேண்டும் என்று கணபதி தீர்மானமாயிருந்ததற்குத் தகுந்த காரணம் இருந்தது.

ஒரு சமயம், அதாவது கல்யாணமான மறு வருஷம், கணபதிக்குச் சம்பள உயர்வும், பதவி உயர்வும் கிடைத்தன. அந்த மகிழ்ச்சியில் காமினியின் எழிற் கரங்களுக்கு இரண்டு ஜோடி தங்க வளையல்கள் வாங்கி வந்தான் கணபதி. ஆசையோடு தானே அவளது தளிர்க் கரங்களில் அணிவித்தான்.

''காமினி வளை உனக்குப் பிடிக்கிறதா?'' என்று கணபதி மகிழ்ச்சியின் பூரிப்பில் கேட்டான்.

காமினி நாணத்தினால் முகம் சிவந்து ''பிடிக்கிறது!'' என்றாள்.

மறு நாள் காலை கணபதி ஆபீஸுக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தபோது காமினி எதிரே வந்து நின்று அவனிடம் எதையோ சொல்லத் தயங்கினாள்.

''என்ன காமினி, என்ன வேண்டும்?'' என்று கணபதி மிகவும் கனிவோடு கேட்டான்.

''இந்த வளையல் ரொம்பப் பிடிக்கிறது..... ஆகையினால்...''என்று காமினி மேலே சொல்லுவதற்குள் கணபதி குறுக்கிட்டு, ''...ஆகையினாலே இன்னும் ஒரு ஜோடி வளையல் வேணுமாக்கும்!'' என்றான் கண்களைச் சிமிட்டியபடியே.

காமினி சிறிது தயக்கத்துடன், ''...இல்லை. இதை அந்தக் கடையிலேயே திருப்பிக் கொடுத்துவிட்டு வேறு வளையல்...'' என்று காமினி தயங்கினாள்.

''ஏன் காமினி! பிடிக்கிற வளையலைத் திருப்பிக் கொடுப்பானேன்?'' என்று கேட்டுக் கணபதி விஷயம் புரியாமல் விழித்தான்.

''வளையல் பிடிக்கிறது என்று சொன்னது வாஸ்தவம்தான். ஆனால் அது கையைப் பிடிக்கிறது என்றல்லவா சொன்னேன்!'' என்றாள் காமினி சிரித்துக் கொண்டே.

அந்த நிகழ்ச்சிக்குப் பிறகு கணபதி மிகவும் சமர்த்தாகிவிட்டான். ஆகவேதான், புடவை தேர்ந்தெடுக்கும் விஷயத்தில் காமினிக்குப் பூரண உரிமை கொடுத்துவிட்டான். கடைசியில் ஒரு பெரிய ஜவுளிக் கடையில் காமினியின் கருத்தையும் கண்ணையும் கவர்ந்த ஒரு புது 'மோஸ்தர்' புடவை இருந்தது. காமினி அதைக் கண்டதும் பரவசமானாள். காமினியின் நிலை கண்டு கணபதி பரவசமானான். அந்தப் புடவையின் விலை இரு நூறு ரூபாய் என்று போட்டிருந்தது.

''உங்களுக்கு இந்தப் புடவை ரொம்ப நன்றாயிருக்கும், எடுத்துக் கொள்ளுங்கள்!'' என்று கடைக்காரப் பையன் சொன்னதும் காமினியின் பெருமை பிடிபடவில்லை. கணபதியின் பக்கம் திரும்பினாள். அவன் அங்கு இல்லை. கடை முழுதும் சுற்றிச் சுற்றிப் பார்த்தாள். கணபதி அவள் கண்ணில் படவேயில்லை. பத்து, பதினைந்து நிமிஷங்கள் அங்கேயே நின்றுகொண்டிருந்தாள். கணபதி அங்கு வருகிற வழியாயில்லை. அவளுக்கு ஆத்திரமும் அவமானமும் பிடுங்கித் தின்றன. என்ன செய்வதென்றே தோன்றவில்லை. சுமார் அரை மணி நேரம் கடையிலேயே ஒரு ஓரமாகக் காத்துக் கொண்டிருந்தாள். துணி வாங்க வருவோர், போவோர் கூட்டம் அதிகமாகிக்கொண்டே யிருந்தது. கையில் புதுப் புடவைப் பார்சலும், முகத்தில் குதூகலமும் பொங்க, காமினியைப் போன்ற இளம் பெண்கள் கடையிலிருந்து போய்க் கொண்டிருந்தனர். போகும் போது சும்மா போகிறார்களா? ஜவுளிக் கடை வாசலில் சோக முகத்துடன் காத்துக் கிடக்கும் காமினியை ஏளனமாகப் பார்த்துக் கொண்டே போனார்கள். காமினி இதைக் கண்டு மனம் வெதும்பினாள். மேலும் அங்கே நிற்க அவளுக்குப் பிடிக்கவில்லை. தாங்க முடியாத அவமானமும், கோபமும், துக்கமும் அவள் மனத்தில் கொந்தளித்தன. வீட்டுக்குப் போக அவளிடம் பஸ் சார்ஜ்கூட இல்லை. இருந்தாலும் அதற்காக அவள் அங்கே இனிமேலும் காத்துக்கொண்டிருக்கத் தயாராயில்லை. நல்ல வேளையாக ஒரு ஆட்டோ ரிக்ஷா அந்தப் பக்கமாக வந்தது. காமினி ஆத்திரத்துடன் அதில் பாய்ந்து ஏறித் தன் பிறந்த வீட்டுக்குச் சென்றுவிட்டாள்.

தன் கணவரின் அற்ப குணத்தைப் பற்றித் தன் பெற்றோரிடம் சொல்லவே அவளுக்குக் கூசியது. சொல்லி முடித்ததும் கண்ணீர் பெருக விம்மி விட்டாள்.

'''இந்தப் புடவை விலை அதிகம். என்னால் வாங்க முடியாது!' என்று சொன்னால் நான் அவரை என்ன செய்துவிடுவேன்? கடையிலிருந்து சொல்லாமல் கொள்ளாமல் ஓடிவிட்



ராபின்ஹூட்
உலகமெங்கும்
விரும்பப்படுவது
SEN RALEIGH Product
SRC 52 TM

டாரே! என்ன அற்பத்தனம்!'' என்று சொல்லிச் சொல்லி வருந்தினாள் காமினி.

இரவு மணி ஒன்பதாகியும் கணபதி வீட்டுக்கு வரவில்லை. கடையில் புடவை பார்த்துக் கொண்டிருந்த போது திடீரென்று அவன் மறைந்ததிலேயே காமினிக்குப் பிரமாதமான கோபம் வந்து விட்டது. அது போதாக் குறைக்கு, இப்பொழுது இத்தனை நேரத்துக்குப் பிறகும் வீட்டுக்கு வராமற் போகவே காமினிக்கு இன்னது செய்வதென்றே தோன்றவில்லை. வேதனையில் வெந்து கொண்டிருந்தாள். பெற்றோர்கள் என்ன சமாதானம் சொல்லியும் அவள் சமாதானம் அடையவில்லை.

சுவர்க் கடிகாரம் மணி பத்தடித்தது. ஆனால் காமினியின் நெஞ்சு அடித்துக் கொண்டதை எவ்வளவென்று யாராலும் எண்ண முடியாது.

வாசற் கதவு தட்டும் சத்தம் கேட்டது. ஏனோ காமினிக்கு எழுந்து போய்க் கதவைத் திறக்க வேண்டும் என்று தோன்றவேயில்லை. கதவைத் தட்டுவது கணபதியாயிருந்தால், தான் போய்க் கதவைத் திறந்து தனது சுயமரியாதைக்குப் பங்கம் தேடிக்கொள்ளுவதா என்ற எண்ணம் தோன்றி அவளைத் தடுத்தது.

மீண்டும் கதவு தட்டும் சத்தம் கேட்டது. காமினியின் தந்தை எழுந்து போய்க் கதவைத் திறந்தார்.

வெறுப்பும், ஆத்திரமும் உந்தித் தள்ள, காமினி எழுந்து, வருவது யாரென்று பார்த்தாள்.

சாக்ஷாத் கணபதிதான்! காமினியைக் கண்டதும் கணபதிக்கு உடல் நடுக்கம் கண்டது. மதுரையம்பதியைத் தீக்கிரையாக்கிய கண்ணகியைப் போன்றிருந்தது காமினியின் தோற்றம்.

"என்ன காமினி, ஜவுளிக்கடையிலிருந்து என்னிடம் சொல்லிக் கொள்ளாமல் இங்கு வந்து விட்டாய்?'' என்று கேட்டான் கணபதி.

''......அந்தக் கேள்வியை நானல்லவா உங்களைக் கேட்க வேண்டும்?'' என்று கண்ணீருக்கும் விம்மல்களுக்குமிடையே கேட்டாள்.

"சரி, காமினி! முதலில் உன் கண்களைத் துடைத்துக்கொள். அப்பப்பா! அழுதழுது அவைகள் எவ்வளவு வெந்துவிட்டன! இந்தா இதை வாங்கிக்கொள்'' என்று கூறிக் கணபதி அவள் கையில் ஒரு சிறு பார்ஸலைக் கொடுத்தான். அதை வாங்கிப் பரபரப்புடன் பிரித்துப் பார்த்த காமினியின் முகம் கதிரவனைக் கண்ட கமல மலரைப் போல் மலர்ந்தது.

சற்று முன் அவள் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட பட்டுப் புடவைதான் அது!

நாணத்தோடு கணபதியை நிமிர்ந்து பார்த்தாள் காமினி.

"என்னை மன்னித்து விடுங்கள். திடீரென்று நீங்கள் என் அருகில் இல்லாமற் போகவே நான் என்னென்னவோ நினைத்து மனங்குழம்பி விட்டேன். புடவையை விலை பேச நீங்கள் உள்ளே போனதை நான் கவனிக்கவில்லை...!''

" தப்பு என் மேல்தான், காமினி. புடவையைப் பார்க்க நாலைந்து பெண்கள் உன்னைச் சூழ்ந்து கொள்ளவே, உன்னிடம் சொல்லாமல் கடைக்குள்ளே போய் விட்டேன். உள்ளே ஏகக் கூட்டம். நூற்று எழுபத்தைந்து ரூபாய்க்கு விலை தீர்த்து வாங்கிக் கொண்டு வருவதற்குள் போதும் போதுமென்றாகி விட்டது. புடவையை வாங்கிக் கொண்டு வெளியே வந்து பார்த்தால் உன்னைக் காணவில்லை. அப்பொழுது என் நண்பன் சீனு வந்தான். நீ ஆட்டோ ரிக்ஷாவில் ஏறிக் கொண்டு போனதைப் பார்த்ததாகச் சொன்னான். அவனுக்கும் ஜவுளி தினுசுகள் வாங்க வேண்டியிருந்தது. நீ வீட்டுக்குத்தான் போயிருப்பாய் என்ற எண்ணத்தில் அவனுடன் கொஞ்சம் சுற்றி விட்டு வீட்டுக்குப் போய்ப் பார்த்தால் உன்னைக் காணோம். இங்கே வந்தேன்! இன்னும் என் மீது கோபமா, காமினி!'' என்று கணபதி குழைந்தான்.

"அதெல்லாம் ஒன்றும் இல்லை. ஆத்திரத்தில் நான் உங்களைப் புரிந்து கொள்ளவில்லை. வாருங்கள், நம் வீட்டுக்குப் போகலாம். மாமி காத்துக் கொண்டிருப்பார்கள்! உம்... ஒரு முக்கியமான விஷயம். அங்கே வந்து உங்கள் மாமியின் எதிரில் இதை யெல்லாம் சொல்லாதீர்கள். சொன்னால் எனக்கு நிஜமாகவே கோபம் வந்து விடும்....'' என்றாள்.

கணபதி ஆசையோடு அவளைப் பார்த்துக் கொண்டே தலையை அசைத்தான், இல்லை என்பதற்கு அறிகுறியாக. பிறகு இருவரும் வீட்டுக்குப் புறப்பட்டனர்.

காமினியின் பெற்றோர்கள் இந்தக் காட்சியைத் தூர இருந்து பார்த்துக் களித்தனர்.

அந்த வருஷம் தீபாவளியைக் கணபதியும் காமினியும் சாதாரணத் தீபாவளியாகக் கொண்டாடவில்லை. தலைத் தீபாவளியாகத்தான் கொண்டாடினர். இந்த நிகழ்ச்சியைத் தீபாவளியன்றே கணபதி என்னிடம் கூறினான். உண்மையிலேயே மிகவும் சுவாரஸ்யமான நிகழ்ச்சிதானே!

# வான்மியூர்ப் பால்வண்ணர்

தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

உலக மகா கவிஞர் வரிசையிலே, ஆதி கவி என்னும் புகழுக்கு உரியவர் **வான்மீகர்.** அவர் எழுதிய ராமகாதை ராமனது காலத்திலேயே பாடப்பட்டிருக்கிறது. வான்மீகரது கவித்வம் ஒப்புயர்வற்றது என்பர் வடமொழி தெரிந்தவர்கள். அந்தக் கவித்வத்தைவிட உயர்ந்தது அவர் சொல்கிற கதை. சக்கரவர்த்தித் திருமகனான ராமனது சரிதம், எவ்வளவோ நல்ல பல நீதிகளைத் தன்னுள் கொண்டது. அவைகளை மக்கள் கற்று அதன் மூலமாக, நல்லொழுக்க முடையவர்களாக வாழ உதவுவது. அதிலும் இன்று அதிகம் பேசப்படும் உலக சகோதரத்துவத்துக்கே அடிகோலுவதாகவும் இருக்கிறது. இந்தக் கதை **கவிச் சக்கரவர்த்தி கம்பனையும்** பரம பக்தனான **துளசிதாசனையும்** கவர்ந்ததில் வியப்பில்லை. ; அதனால்தானே, ஒரு ராம சரித மானஸம், இந்திய மக்களுக்குக் கிடைத்திருக்கிறது. ஸரயு நதிக்கரையில் பிறந்து கங்கை நதிக்கரையிலே வளர்ந்த ராமனை, காவேரி தீரத்துக்கே கொண்டு வந்து அவனை ஒரு நல்ல காவேரிதீர ரஸிகனாக ஆக்கியிருக்கிறான் கம்பன். உண்மையிலே ராமன் வடநாட்டை விட்டுத் தென் தமிழ் நாட்டுக்கே குடிவந்து விட்டான் என்றே தோன்றும், இங்கு அவனுக்கு ஏற்பட்டுள்ள கோயில்களைக் கணக்கிட்டால். ராமன் வந்து விட்டால், ராமனை உருவாக்கிய வான்மீகருக்கு வடநாட்டில் என்ன வேலை? ராமனைத் தேடிக் கொண்டே, அவன் வழியைப் பற்றிக் கொண்டே வான்மீகரும் இங்கு வந்துவிடுகிறார். (பல கோயில்களில் இருக்கும் வன்மீக நாதரை—அதாவது புற்றிடம் கொண்ட பெருமானாக எழுந்தருளியிருக்கும் மூர்த்தங்களைக் குறிப்பிடவில்லை நான்) பலதலங்களில்—ராமன் இல்லாத தலங்களில் கூடத் தங்கி விடுகிறார் வான்மீக முனிவர் தமிழ் நாட்டில். அப்படி அவர் தங்கிய இடங்களில் சிறந்தவை இரண்டு. ஒன்று சிதம்பரத்துக்குப் பக்கத்தில் உள்ள **திருக்கழிப்பாலை.** இன்று அங்கு கோயில் இல்லை. கொள்ளிடநதி கொண்டுபோய் விட்டதாம். ஆனால் மற்றொரு கோயில் நன்கு நிலை பெற்றிருக்கிறது. அது தான் **திருவான்மியூரில்** உள்ள பால்வண்ண நாதர் கோயிலில் உள்ள மூர்த்தியை **மருந்தீசர், அமிர்தேசுவரர்** என்று அழைத்தாலும், ஊர் மட்டும் வான்மீகர் பேராலேயே-வான்மியூர் என்று நிலைத்திருக்கிறது.

வான்மீகர் இத்தலத்துக்கு வந்ததே ஒரு ரஸமான வரலாறு. வான்மீகருக்குத் தான் ஆயிர வருஷ காலம் தவம் பண்ணினோம் என்றும் அது காரணமாகவே ராமாயணம் பாட முடிந்தது என்றும், ராமாயணம் பாடியதினாலேயே அமரத்துவம் பெற்று விட்டோம் என்றும் ஒரு கர்வம். இந்த எண்ணத்தோடு வாழும் முனிவரை என்றும் சிரஞ்சீவியாக இருக்கும் **மார்க்கண்டேயர்** வந்து காண்கிறார் ஒரு நாள். அவரோ அமிர்தகடேசுவரராம் சிவனை வணங்கி, என்றும் அமரனாக இருக்க வரம் பெற்றவர். இவர் வான்மீகரைப் பார்த்து, 'அமரத்வம் பெற, ஆயிரம் வருஷம் தவம் செய்ய வேண்டுமா? ஒரு பெரிய காவியமே பாட வேண்டுமா? சிவனை ஒரு நாள் ஒரு பொழுது நினைந்து வணங்கினால் அமரத்வம் சித்தியாகி விடாதா?' என்று மிரட்டுகிறார். வான்மீகர் உள்ளத்திலும் சிவனை வணங்கி முக்தி பெறும் விருப்பம் எழுகிறது. மார்க்கண்டேயரும் 'சரி! நீர் உலகத்தைச் சுற்றி வாரும். எந்த இடத்திலே ''நான் இங்கே இருக்கிறேன்'' என்று அசரீரி எழுகிறதோ அங்கே தங்கித் தவமியற்றும்; சிவபிரான் காட்சிகொடுப்பார்'' என்கிறார். அப்படியே செய்கிறார் வான்மீகி. கடற்கரையை அடுத்த ஒரு சிறிய ஊரிலே, சிவபிரான் வான்மீகருக்குத் தரிசனம் கொடுக்கிறார். வான்மீகர் விரும்பிய மூன்று வரங்களையுமே தருகிறார். வரங்கள், அந்த ஊர் அவர் பெயராலேயே நிலைக்க வேண்டும் என்பது ஒன்று. இறைவர் சடாமகுடத்திலே உள்ள கங்கையின் ஒரு பகுதி அங்கு தங்க வேண்டும்



உள்கோயில் - தியாகராஜர் சந்நிதி

என்பது ஒன்று. மேலும் இறைவன் தன் தாண்டவக் கோலங்களை யெல்லாம் காட்டி அருள வேண்டும் என்பது ஒன்று. அதனால் ஊர் வான்மியூர் என்று நிலைக்கிறது. இறைவன் மருடத்தில் இருந்து இழிந்த கங்கை, ஜன்மநாசனி, பாபநாசனி, காமநாசனி, ஞானதயாநி, மோக்ஷதயாநி என்று ஐந்து திருக்குளங்களில் பொங்கிப் பெருகிநிறைகிறது. வான்மீகருக்குத் தாண்டவ தரிசனமும் கிடைக்கிறது. இத்தகைய புகழ் பெற்று விளங்கும் ஊரே திருவான்மியூர்.



ராயகோபுரம் - அடித்தளம்

திருவான்மியூர், சென்னை அடையாற்றுக்குக் கிழக்கே மூன்று மைல் தூரத்தில் கடற்கரையில் உள்ள சிறிய ஊர். ஊர் சென்று சேரும் வரை நல்ல ரோடு உண்டு. கோயில் கிழக்கே பார்க்க இருக்கிறது. ராஜகோபுரம் இல்லை. ஆனால் ராயகோபுரம் உண்டு. (ராயகோபுரம் என்றால் கட்டமுனைந்து முற்றிலும் கட்டப்படாமல் விட்ட கோபுரத்தின் அடித்தளம் என்று அறிவோம் நாம்—மதுரையிலும் ஸ்ரீரங்கத்திலும் இந்த ராயகோபுரங்கள் உண்டல்லவா!) அந்த ராயகோபுரத்தின் அடித்தளம் வாயில் மேல்தளம் வரை வளர்ந்து அப்படியே நின்று கொண்டிருக்கிறது. கோயில் வாசலுக்குக் கொஞ்சம் எட்டியே. இந்தக் கோபுரத்துக்கு வட பக்கத்திலே மிகப் பெரிய தெப்பக்குளம் இருக்கிறது. அதுவே வான்மீகருக்காக எழுந்த பாபநாசனி. ஆனால் நமது பாபங்களை அங்கே கழுவித் துடைக்கப் போதிய தண்ணீர் இருப்பதில்லை அதில். ஆதலால் பாபத்தைக் கழுவக் குளிக்கப் போய்ச் சேற்றைப் பூசிக் கொள்ளாமலேயே கோயிலுள் நுழையலாம்.

கோயிலுள் நுழைந்ததும் நாம் முதலில் காண்பது அம்மை திரிபுரசுந்தரியின் சந்நிதியே. இந்தத் திரிபுரசுந்தரி நல்ல கம்பீரமான தோற்றம் உடையவள். அவளை வலம் வந்து வணங்கிவிட்டுப் பிரதான கோயிலுள் செல்லலாம். மேற்கு நோக்கிப் போகும் நம்மை வரவேற்க, கிழக்கு நோக்கியே இருக்கிறார் தியாகராஜர் நடன மண்டபத்தில். இந்தத் தியாகராஜரே பதினெண் நடனங்கள் ஆடிக் காட்டியவர் வான்மீகருக்கு. வைகாசி மாதத்தில் நடக்கும் உற்சவத்தில் இந்த நடனக் கோலங்களை யெல்லாம் காணலாம் என்கிறார்கள். இந்தத் தியாகராஜரை வணங்கிய பின் வடக்கே திரும்பி நடந்தால் மகாமண்டபம் வந்து சேருவோம். அங்கு மேற்கு நோக்கிய சந்நிதியில் இருக்கிறார் மருந்தீசர். வேதங்கள் எல்லாம் வழிபட்டதால் வேதபுரி ஈசுவரர் என்றும், காமதேனுவே பால் சொரிந்து அபிஷேகம் ஆட்டியதால் பால்வண்ண நாதர் என்றும் பெயர் பெற்றிருக்கிறார். லிங்கத் திருவுருவில் இருக்கும் இவர் கொஞ்சம் வடபால் சாய்ந்திருக்கிறார். ஆம் வடநாடிருந்து தென்னாடு வந்து தங்கியவர் அல்லவா வான்மீகர். ஆதலால் அவருக்காகக் கொஞ்சம் வடபால் தலை சாய்த்து அழைத்திருக்கிறார் போலும். காமதேனு பால் சொரிந்து அபிஷேகம் செய்தபொழுது அதன் குளம்பு வேறே பட்டிருக்கிறது. அதனால் ஒரு பக்கமாகச் சாய்ந்தாரோ என்னவோ? அந்தக் குளம்பு பட்ட வடு வேறே லிங்கத் திருவுருவில் இருக்கிறது. பால் அபிஷேகம் பண்ணும்பொழுது அந்த வடு தெரிகிறதாம். இந்த லிங்கத் திருவுரு தேவர்கள் பாற்கடலைக் கடைந்தெடுத்த அமுதத்தாலேயே ஆனவராம். அதனால் தான் அவரை அமுதீசர் என்றும் மருந்தீசர் என்றும் குறிக்கிறார்கள். தேவர் துயர் தீர்க்க எழுந்த மருந்துதானே அமுது. அமுதீசரை வணங்கினால் நமது துயரும் துடைக்கப்படும் தானே. இதைத் தெரிந்தே பாடுகிறார்கள் சம்பந்தரும் அப்பரும்.

பொன்போலும் சடைமேல்
புனல்தாங்கிய புண்ணியனே!
மின்போலும் புரிநூல்,
விடைஏறிய வேதியனே!
தென்பால் வையமெலாம்
திகழும் திருவான்மிதன்னில்
அன்பா! உன்னையல்லால்
அடையாது எனதுஆதரவே

என்று சம்பந்தர் பாடினார்.

படங்கொள் பாம்புஅரைப்
பால்மதி சூடியை
வடங்கொள் மென்முலை
மாதுஒரு கூறனைத்
தொடங்க நின்று
தொழுது எழுவார்வினை
மடங்க நின்றிடும்
வான்மியூர் ஈசனே

என்று அப்பர் பாடுகிறார். தன்னுயிர்க்கு உற்ற ஆதரவாக இறைவனைச் சம்பந்தர் நினைந்தால், வினைமடங்க அவனையே சரண் புகுகிறார் அப்பர். நாமும் நமது வினை மடங்க இந்த மருந்தீசனும் பால் வண்ணனைத் தொழுது திரும்பலாம்.

இக்கோயிலில் செப்புச் சிலை வடிவங்கள் நிறைய இருக்கின்றன. அவைகளில் எல்லாம் நல்ல சிறப்புடையது—சோழர் காலத்தே உருவாகியதென்று கருதப்படுவது — ஆனந்தத் தாண்டவ நடராஜர்தான். அறுபத்துமூவர் எல்லோருமே இங்கில்லை. ஒருசிலரே செப்புச் சிலை வடிவில் இங்கிருக்கிறார்கள். எல்லோருமே நல்ல இரும்புக் கிராதிகளுக்குள்ளே அடைபட்டிருக்கும் கைதிகளைப்போல, மலங்க மலங்க விழித்துக் கொண்டிருக்கிறார்கள். ஆதலால் அவர்களையெல்லாம் கொஞ்சம் எட்டி இருந்து பார்த்தே திருப்தி அடைய வேண்டியதுதான்.

இக்கோயில் நல்ல சோழர் காலத்துக் கோயில். பின்னர் பல பகுதிகள் புதுப்பிக்கப்பட்டிருக்கின்றன. பல்லவ மன்னர்கள் காலத்திலேயே இந்தக் கோயில் கட்டப்பட்டிருக்க வேண்டும் என்றாலும்—கோயிலின் பெரும் பகுதி சோழர் காலத்தில்தான் கட்டப்பெற்றிருக்கின்றன என்றும் தெரிகிறது. அம்மன் கோயில் பழைய நிலையிலேயே இருப்பதால் அங்குள்ள கல்வெட்டுக்கள் எல்லாம் அப்படி அப்படியே இருக்கின்றன. அந்தக் கல்வெட்டுக்களிலிருந்து, இக் கோயிலுக்குச் சோழ மன்னர்கள் நிபந்தங்கள் பல ஏற்படுத்தி இருக்கிறார்கள் என்று தெரிகிறது.

கங்கை கொண்ட சோழன் என்னும் ராஜேந்திர **சோழனுக்கு** இக் கோயிலிடத்து அதிக சிரத்தை என்று தெரிகிறது. அவன் இத்தலத்துக்குப் பலதடவை வந்திருக்கிறான், நிபந்தங்கள் பல ஏற்படுத்தி இருக்கிறான். திரிபுர சுந்தரிக்குத் திருவிளக்கு ஏற்றவும், பால்வண்ணருக்கு மாலை அணிவிக்கவும் அவன் பொன், நெல், ஆடுகளை யெல்லாம் தானம் வழங்கி இருக்கிறான். அந்திம காலத்தில் அவன் தன் நோய் நீக்கம் விரும்பி இங்கு வந்து மருந்தீசரை வணங்கியிருக்கிறான். இவன் தன் கால்வழியினரான **முதல் ராஜாதிராஜனும், இரண்டாம் ராஜேந்திரனும்** ராஜேந்திரனைப் பின்பற்றிப் பல நிபந்தங்கள் ஏற்படுத்தியிருப்பதாகக் கல்வெட்டுக்கள் கூறுகின்றன.

சோழ மன்னர்களுக்குப் பின் விஜயநகர மன்னர்களும் இக் கோயிலை நன்கு பரிபாலித்திருக்கின்றனர். **இரண்டாம் தேவ ராயன்** காலத்தே **அருணகிரிநாதர்** இங்கு வந்து இத்தலத்தில் உள்ள முருகனைத் திருப்புகழ் பாடிப் பரவியிருக்கிறார். பதினாறும் நூற்றாண்டில் நாயக்க மன்னர்களின் மதி மந்திரியாக இருந்த **அப்பைய தீக்ஷிதரும்** இத் தலத்துக்கு வந்திருக்கிறார். இவரது சிலைகூடக் கோயிலில் இருக்கிறது.

இவ்வளவு சொல்கிறீரே—இந்த வான்மியூரில் வான்மீகருக்கு ஒரு கோயில் இல்லையா என்று நீங்கள் கேட்பீர்கள். இருக்கிறது ஐயா இருக்கிறது. ஆனால் அந்த வான்மீகர் ஆலயம் ஊருக்கு வடமேற்கே ஓர் ஒதுக்குப் புறத்தில் இருக்கிறது. ஆனால் அவரது உற்சவ விக்கிரஹம் மருந்தீசர் கோயிலிலேயே இருக்கிறது. வான்மீகியை வணங்கித் திரும்பும் போது அவர் அளித்த காவியம் நினைவுக்கு வரும். அக்காவியத்தின் சாரத்தையெல்லாம் வாரி வழங்கிய கவிச்சக்கரவர்த்தி கம்பனுமே ஞாபகத்துக்கு வருவான் அல்லவா?

# கண்கள் உறங்காவோ?

## அத்தியாயம் 3

## அடுத்த எதிரொலி

சச்சிதானந்தம் வெலவெலத்துப் போய்விட்டார். தமது பேச்சின் முற்பகுதியைப் புஷ்பவனம் கேட்டிருப்பாரோ? கேட்டிருந்தால், தம்மைப் பற்றி உயர்ந்த கருத்துக் கொண்டிருக்கும் அவர் என்ன நினைத்திருப்பார்?

அவருடைய உள்ளத்தில் ஓடிய இந்த எண்ணங்களைப் படித்து விட்டவர்போல் பேசிக் கொண்டே புஷ்பவனம் உள்ளே வந்தார். "உங்க பேச்சு முழுவதையும் கேட்டுக்கிட்டுத்தான் இருந்தேன், அத்தான்! ஆனாலும் நீங்ககூட இப்படி மாறுவீங்கன்னு நான் நினைக்கலே!"

தைலம்மாளுக்குச் சரியான பக்கபலம் கிடைத்து விட்டது. "என் தம்பிக்குப் புத்தி கெட்டுப் போச்சுது, தம்பி! சீரும் சிறப்புமா வாழ வேண்டிய உங்க மகனை அந்த அறுதலிப் பொண்ணு மயக்கி இழுத்துப் போட்டுக்கிட்டு இருக்குது. அதுக்கு நான் என்ன அக்கா செய்யறதுனில்லா கேட்கிறேன்! அவன் செய்யாட்டிப் போறான், தம்பி. நீங்களாவது இந்தக் குடும்பத்தை ஊர் வாயிலேயிருந்து காப்பாத்துங்க. உங்க மகனை- அந்தக் கிறுக்குப் புடிச்ச புள்ளையை..."

அவள் இவ்வாறு பேசி வந்தபோது, "நிறுத்து, அக்கா!" என்று அவள்மீது சீறினார் சச்சிதானந்தம். இவ்வளவு தூரம் முற்றி வந்துவிட்டபிறகு, தாம் தமது மகனுக்குச் சாதகமாகவே இருப்பது என்று அவர் துணிந்து விட்டார். 'சுந்தரம் வீணாவுக்கா, மாலாவுக்கா?' என்ற கேள்விக்கு, 'வீணாவுக்குத்தான்' என்று முடிவுறுத்திக்கொண்டு விட்டார்.

ஆனால் அவருக்குச் சவுக்கடி புஷ்பவனத்திடமிருந்து உடனே வந்தது. "என்னத்தை நிறுத்துகிறது, அத்தான்? இது நிறுத்துகிற சங்கதியில்லே. ஓடற சங்கதி. உங்க மானம், எங்க மானம், ஊர் மானம் எல்லாத்தையும் கப்பலிலே ஏற்றி ஓட்டிப் போடுற சங்கதி. அதை நினைப்பிலே வைச்சிக்கிடுங்க" என்று கூறினார் அவர்.

சச்சிதானந்தம் பழைய வக்கீல் தொழிலின் தோரணையில் குறுக்குவாதம் புரிந்தார். "தம்பி! நீங்களா இப்படிப் பேசுறீங்க? வீணாவைப்போல் வாழ்வு கெட்டுப் போன பெண்களுக்கு, நம்ம சமூகம் செய்துக்கிட்டிருக்கிற கொடுமையெல்லாம் அநியாயமின்னு பேசிக்கிட்டிருந்த உங்க வாயிலேயிருந்தா இந்த வார்த்தை வருது!"

புஷ்பவனம் வக்கீல் இல்லைதான். சாதுரியமாக எதிர்வாதம் புரியவும் அவருக்குவராது. ஆனால் இப்பொழுது அவர் சரியானபடி போதிக்கப்பட்டு, சரியானபடி ஆத்திரமூட்டப்பட்டு, இம்மாதிரி முரட்டு வாதம் எழுந்தால் என்ன பதிலளிக்க வேண்டும் என்பது உருவேற்றப்பட்டுப் பின்னர் அங்கே அனுப்பப்பட்டிருந்தார்.

அந்தச் சம்பவம் அரை மணி நேரத்துக்கு முன் அவர் வீட்டில் நிகழ்ந்தது. என்ன நடந்தாலும் மகனைத் தாம் போய் அழைத்து வர முடியாது; அவனாக வந்தாலும், வீணாவை மறந்துவிட்டதாக உறுதி அளித்தால்தான் வீட்டுக்குள் அனுமதிப்பேன் என்று மனைவியிடம் திர்மானமாகக் கூறிவிட்ட பிறகு, இப்படி ஒரு கேவலமான நிலை தமக்கு ஏற்பட்டு விட்டதே என்று மனம் இடிந்துபோய்க் கட்டிலில் படுத்துக் கிடந்தார் புஷ்பவனம். மரகதத்தம்மாளும் இச்சமயத்தில் இவரிடம் வாதாடிப் பயனில்லை என்றுஉள்ளே சென்று விட்டாள். காலையில் ஒன்றுமே சாப்பிடாமல் பசியுடன் இருந்த கணவருக்கு வயிற்றுக்குச் சிறிது ஈந்துவிட்டுப் பிறகு மீண்டும் கெஞ்சிப் பார்க்கலாமென்று அவள் அடுக்களைக்குச் சென்று அணைந்து கிடந்த அடுப்பை மீண்டும் பற்ற விட்டுக் காப்பி-பலகாரம் தயாரிக்க ஆரம்பித்தாள். அச்சமயத்தில் தானுவதி அங்கே வந்து சேர்ந்தான்.

ஆம், தாணுவதியைப் பற்றி இப்பொழுது நாம் அறிந்துகொள்ள வேண்டிய கட்டம் வந்து விட்டது. வீணா-சுந்தரம் கூட்டுறவால் பாதிக்கப்பட்டவர்களில் அவனும் ஒருவன் இல்லையா? விகாஸின் கொலை விஷயம் போலீஸ் விசாரணைக்கு வந்தபோது, அவனுடைய கையாட்களான செந்திவேலு போன்றோரையும் போலீசார் கைதுசெய்து உள்ளே தள்ளியிருந்தனர். அவர்கள் கைதான விஷயத்தை அறிந்தது தொட்டுத் தாணுவதி வீட்டை விட்டே வெளியே வரவில்லை. வீட்டு வாசலில் ஒரு தலையாரியைக் காவல் வைத்துப் போலீசார் வந்து விசாரித்தால் தான் ஊரில் இல்லையென்று கூறிவிட ஏற்பாடு செய்திருந்தான், அவன். இம்மாதிரிப் போலீசார் கைக்குப் போகும் கொலை போன்ற பெரிய விவகாரங்களாக இருந்தால், முதியவரும், அநுபவம் நிறைந்தவரும், தாணுவதியின் தொடை நடுக்கத்தை



நன்கு உணர்ந்தவருமான கர்ணமே உத்தியோக முறையில் அவன் செய்தாக வேண்டிய நடைமுறை வேலைகளைக் கவனித்துக் கொள்ளுவார். ஆதலால் தானாவதிக்கு அந்தக் கவலை கிடையாது. ஆனால் இப்பொழுது அவனைச் சூழ்ந்திருந்த கவலைக்கும் பீதிக்கும் காரணம் வேறு. செந்திவேலுவும் அவன் சகாக்களும், தானே அவர்களைத் தூண்டிவிட்டதாகப் போலீசாருக்கு அறிவித்து விடுவார்களோ ; அதன் காரணமாகத் தானும் சிறை செல்ல நேரிடுமோ என்றுதான் அவன் பயந்தான்.

ஆனால் அப்படி எதுவும் நேரவில்லை. சிறைவாசத்துக்குப் பழக்கப்பட்ட செந்திவேலுவும் அவன் தோழர்களும், விகாஸைத் தாங்களே கொன்றிருந்தால் கூடத் தானாவதியின் தூண்டுகோலால் தான் அப்படிச் செய்தோம் என்று போலீசாரிடம் கூறியிருக்கமாட்டார்கள். ஏனென்றால் அவர்கள் சிறைவாசம் செய்யும்போதெல்லாம் தானாவதிதான் அவர்கள் குடும்பத்தினருக்குப் படி அளந்து வந்தவன். ஆதலால் அவனைக் காட்டிக் கொடுத்துத் தங்கள் குடும்பத்தினரைத் திண்டாடவிட அவர்கள் எப்படி மனம் கொள்ளுவார்கள்? அதிலும் இப்பொழுது இந்தக் கொலையைச் செய்தவர்கள் மற்றொரு கோஷ்டியினர் என்பது தெள்ளத் தெளிவாக இருந்த போது, இந்தச் சிறைவாசம் தாற்காலிகமானது ; தாங்கள் விரைவில் விடுதலை பெற்று வெளியே வருவது நிச்சயம் என்ற நிலை இருந்தபோது, தங்களுக்குப் படி அளந்து வருபவனை அவர்கள் காட்டிக் கொடுப்பார்களா?

ஆதலால் தானாவதி பயந்தவாறு எதுவும் நிகழவில்லை. தனது கையாட்கள் குற்றமற்றவர்களென விடுதலை செய்யப்பட்ட பின்பு அவன் மீண்டும் தெம்படைந்து விட்டான். மறுபடியும் வீணாவைக் கிளப்பும் முயற்சியில் ஈடுபடுமாறு அவர்களுக்கு அவன் போட்ட தூண்டுகோல்தான் ஒரு புகார் மனுவாக உருவெடுத்து அரசாங்கத்தை அடைந்து, வீணாவை டிஸ்பென்சரியை மூடிவிட்டுக் கிளம்பச் செய்தது. இந்தச் செய்தி அன்று மாலையே தானாவதியை வந்தடைந்துவிட்டது. அதைக் கேட்டதும் அவன் தனது முயற்சியில் ஒரு பாதி வெற்றியடைந்து விட்டதாகக் களிப்படைந்தான். மறு பாதியின் வெற்றிக்கு, அதாவது தன் ஊரில், தனது தெருவிலேயே அவள் நடத்தி வந்த ஆஸ்பத்திரியை மூடச்செய்ய என்ன செய்யலாம் என்று அவன் சிந்தித்துக் கொண்டிருந்த போது அன்றிரவு சுந்தரம் வேலையை



விட்டுவிட்ட செய்தியை அறியநேர்ந்தது. இது அவனை ஏமாற்றத்தில் ஆழ்த்தியிருந்த நேரத்தில், சுந்தரம் வீணுவுக்காக வேலையை விட்டதோடல்லாமல், வீட்டையும் துறந்துவிட்டு அவளுடைய ஆஸ்பத்திரிக்கே குடி வந்துவிட்டான் என்ற செய்தியையும் செவிமடுக்க நேர்ந்தால், தாஞவதி எத்தனை இடிந்து போயிருப்பான் என்பதை நீங்களே ஊகித்துக் கொள்ளுங்கள்.

ஆயினும் எத்தகைய இடியும், வீணுவை அடையும் விஷயத்தில் தாஞவதியைத் தளர்வடையச் செய்ய முடியாது. அவன் உடனே இந்தப் பிரச்னையைச் சமாளிக்க என்ன செய்யலாம் என்று ஆலோசித்தான். வழி மிகவும் எளிதாகவே அகப்பட்டது. நேரே புஷ்பவனத்திடம் போய், இந்த அநியாயத்தைத் தன் கிராமத்தில் அவர் மகன் செய்வதைத் தான் பொறுக்க முடியாதென்றும், உடனடியாக அவனை ஒழுங்காக வீட்டுக்குத் திரும்பி வரச் செய்யவில்லையென்றால், தானே ஊரைக் கூட்டி அதைச் செய்யப் போவதாகவும் பயமுறுத்தினால் வீணுவும் சுந்தரமும் பிரிக்கப்பட்டு விடுவார்கள் என்பதுதான் அவன் கண்ட வழி. அதை நிறைவேற்றிக் கொள்ளவே, அவன் அப்பொழுது அங்கே வந்திருந்தான்.

தன் திட்டப்படியே அவன் புஷ்பவனத்தைப் பயமுறுத்தியதும் அவர் கவலை அடைந்தார். தாஞவதி இந்த விஷயத்தில் தலையிட இருக்கிறான் என்று அறிந்ததும் அவருடைய வீம்பெல்லாம் பறந்து விட்டது. போதாததற்கு மரகதத்தம்மாள் வேறு அவரைத் தனியே அழைத்துச்சென்று கடுக்காய் கொடுத்தாள்.

"ஐயோ! இந்த முரடனுக்கு அன்றைக்கு முதலே நம்ம சுந்தரத்தைக் கண்டால் ஆகாது. இப்போ இதைச் சாக்காக வைச்சுக்கிட்டு அவனைக் கொன்னாலும் கொன்னு போட்டுடுவானே!" என்று அவளும் அழ ஆரம்பித்ததும், அவர் அணை போட்டு வைத்திருந்த பெற்ற பாசம் உடைப்பெடுத்துக் கொண்டு பெருக ஆரம்பித்து விட்டது.

ஆயினும் கௌரவம் குறுக்கிட்டது. "என்னை ஒரு பொருட்டாக மதியாமல் எடுத்தெறிஞ்சு பேசிட்டுப் போன பயலை நான் அந்தத் திமிரு புடிச்ச பெண்ணின் ஆஸ்பத்திரிக்குப் போய், சமாதானப் படுத்திக் கூட்டிக்கிட்டு வரதா? அது என்னுல் ஆகாது" என்றார் அவர்.

"நீங்க எங்கிட்டுப் போவீங்களோ, என்ன செய்வீங்களோ, ரெண்டு நாள் பொழுது கொடுத்திருக்கேன். அதுக்குள்ளே அவனையும் அவளையும் ஒழுங்கு படுத்தலேன்னு அப்புறம் இந்தத் தாஞவதி பொல்லாதவனுயிருப்பான்" என்று எச்சரித்து விட்டு வேகமாக வெளியேறிப் போய் விட்டான் அவன்.

தாஞவதி போன பின்னர் மரகதத்தம்மாள் கணவரைக் கரைகரையென்று கரைத்தாள். "நீங்க அவன்கிட்டே கூடப் போக வேண்டாம். நல்லவர்-நல்லவரின்னு சொல்லிக்கிட்டிருந்தீங்களே உங்க உயிர்ச் சிநேகிதர் அவர்கிட்டே போங்க. இத்தனை நடந்திருக்குது: அவருக்கில்லையா இதனுல் வரப்போற அவமானமும் கேலிக் கூத்தும்! அவர் தன் மகள்கிட்டே சொல்லட்டுமே, நம்ம மகனுக்கு நல்ல வார்த்தை சொல்லி வீட்டுக்குத் திருப்பி அனுப்பும்படியாக" என்ருள் அவள்.

புஷ்பவனத்துக்குச் சச்சிதானந்தத்திடம் இவ்விஷயமாகப் போய்ப் பேசுவது இன்னும் தர்மசங்கடமாக இருந்தது. முதலில் சச்சிதானந்தம் விதவைகளின் நிலை அபிவிருத்தி அடைய வேண்டுமென்று மனப்பூர்வமாக விரும்புகிறவர். அடுத்ததாக, அவருடன் சேர்ந்து இவரும் அந்தக் கருத்துக்குப் பல தடவைகள் ஒத்துப் பாடியிருக்கிறார். இப்படி அது தன் தலையிலேயே வந்து விடியுமென்று அப்பொழுது கண்டாரா? இதை அவர் மனைவியிடம் கூறித் தயங்கியபோது மரகதத்தம்மாள் அவருக்கு நன்றாக உரையேற்றி விட்டாள்.

"அப்படிச் சொல்லுங்க! என்னடா அறுத்த பொண்ணு, கிராமத்திலே வந்து தறிகெட்டுச் சுத்திக்கிட்டு இருக்குது, மனுசர் சும்மா இருக்கிறாரேன்னு பார்த்தேன்; இப்பொல்லா தெரியுது அவர் மனசிலே என்ன வேலை செய்துக்கிட்டு இருந்தது என்கிறது. நீங்க அப்பாவி மனுசர், அதைப் புரிஞ்சுக்கிடாம, 'ஆமாம்' போட்டுக்கிட்டு இருந்திருக்கிறீங்க. அவர் அன்றைக்கு முதலே நம்ம சுந்தரத்தையும் அந்த ஆகாமப் போன பொண்ணு வீணாவையும் சேர்த்து விட்டுடத்தான் திட்டம் போட்டு வேலை செய்திருக்கிறாருங்க......"

'அப்படியும் இருக்கலாமோ?' என்று இப்பொழுது புஷ்பவனத்துக்குத் தோன்றியது. வீணா இங்கே வந்த நாளிலிருந்து அவளைக் கிட்டத்தட்ட சுந்தரத்தின் பொறுப்பில் விட்டுவிட்டதுபோல் அவர் நடந்து வந்ததைப் புஷ்பவனம் இப்பொழுது எண்ணிப் பார்த்தார். தம்மிடம், விதவைகளின் நிலை உயர வேண்டும்; அவர்களும் இதர பெண்களைப் போல் வாழ வேண்டும் என்றெல்லாம் பொதுப்படையாகப் பேசி வந்ததையும் நினைத்துக் கொண்டார். மரகதத்தம்மாள் கூற்றை அப்படியே நம்ப அவருக்கு இத்தகைய எண்ணங்களே போதுமானவைகளாக இருந்தன.

அவருடைய உள்ளம் குமுறியது. ஆயினும், ஒருகால் சச்சிதானந்தம், "என்ன தம்பி, அன்னைக்கெல்லாம் ஆகாமப்போன பொண்கள் வாழத்தான் வேணுமின்னு பேசிட்டு, இன்னைக்கு என் மகள் அப்படி வாழ நினைக்கிறபோது அதைத் தடுக்க வந்துட்டீங்களே!" என்று கேட்டு விட்டால் தமக்கு வாய் திறக்க வழி இல்லாமல் போய்விடுமே என்று அவர் மீண்டும் தயங்கினார்.

ஆனால் இதற்கும் மரகதத்தம்மாள் வழி சொல்லிக் கொடுத்திருந்தாள். விவாதம் எழுந்தால், மேலும் என்ன என்ன பேச வேண்டும், எப்படி எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதை அவள் அவர் மனத்தில் பதியச் செய்து தான் அனுப்பி யிருந்தாள்.

அந்தப் பாடத்தைப் புஷ்பவனம் இப்பொழுது இங்கே ஒப்புவித்தார். அவர் சொன்னார்: "ஆமாம்! சொல்லத்தான் சொன்னேன், அத்தான்! என்னமோ விதி செய்த கொடுமையினாலே நம்ம சமூகத்திலே பொண்களுக்கு வாழ்வு இல்லாமல் போயுடுது; அதுகளை நாமும் கொடுமைப்படுத்திக்கிட்டு இருக்கப்படாதுன்னு இப்பொவுந்தான் சொல்லுறேன். ஆனால், அதுகள் இப்படி இருக்கிறவங்களெல்லாம் வெளியே தலைகாட்ட முடியாதபடி, திரும்பவும் கலியாணம் கட்டிக்கிடலாமின்னு எப்போ அத்தான், உங்ககிட்டே சொன்னேன்? உங்க எண்ணம் அதுதானின்னு அது உங்களோட இருக்கட்டும்; நான் அதுக்கு ஒத்துக்கிட முடியாது. என் மகனை உங்க எண்ணத்துக்குப் பலி கொடுக்கவும் முடியாது."

"என் கொள்கைகளை ஒப்புக்கொள்ளும்படி உங்களை ஒருபோதும் கட்டாயப் படுத்தியதில்லையே, தம்பி! இது என்ன பேச்சுப் பேசுறீங்க?" என்று வாதாடினார் அந்த மாஜி வக்கீல்.

"வாயினாலே சொல்லாட்டி, என்ன? செயலிலே காட்டி யிருக்கிறீங்களே!"

"தம்பி! தெய்வ சாட்சியாச் சொல்லுறேன்; அவங்க பழக்கம் இப்படி வந்து முடியுமின்னு நான் நினைச்சதுகூட இல்லை!" இது உண்மையில்லைதான். ஏற்கெனவே இரண்டு - மூன்று மாதங்களாக, சுந்தரம் - வீணா உறவு திருமணத்தில் வந்து முடிந்தாலும் முடியலாம் என்று அவர் எண்ணியதுண்டு. ஆனால் வக்கீல்கள் தங்கள் கட்சியை நிலைநாட்டுவதற்கு, ஒரு பொய் என்ன, ஆயிரக்கணக்கில் வேண்டுமானாலும் பொய் சொல்லத் தயங்காதவர்கள் அல்லவா!

"சரி! நீங்க நினைச்சதில்லேன்னே வைச்சுக்கிடுவோம். நினைக்காதது நடந்துடிச்சு. நீங்க நல்லவங்களானு, மகளைக் கூப்பிட்டுக் கிராமாந்திரத்திலே இப்படி நடந்துக்கிடறது நல்லதில்லேன்னு புத்தி சொல்ல வேண்டாம்? என் மகனை விட்டுக்குப் போகச் சொல்லிடும்படி அவளுக்கு எடுத்துச் சொல்ல வேண்டாம்? நான் என்ன செய்யக் கிடக்குதுன்னு பேசுறீங்களே, அத்தான்! இதுதான் உங்களைப் போல் பொறுப்பான பெரிய மனுசங்க பேசுகிற பேச்சா?"

"பின்னே என்ன தம்பி பேசணும்?" என்று மீண்டும் திரும்பிக் கொண்டார் சச்சிதானந்தம். "நான் வக்கீலா இருந்தவன் தம்பி; சட்டம் தெரிஞ்சவன்.

# விசேஷ அளிப்பு

ஸ்டாக் உள்ளவரை

இந்த பீக்கர்
மட்டுமாக
விற்கப்
படுவதில்லை.

ஒரு பவுண்ட்
போர்ன்-விடா
டின்னும், மேன்மையான
ஸ்லீப்பிங் பீக்கரும்
சேர்ந்து விலை
ரூபாய் 5·75 தான்
(உள்ளூர் வரி தனி)

BUY NOW...

Cadbury's
**BOURN-VITA**




*For Strength and Vigour*

# இருமல் தொல்லையா !

## ஸெப்ரால் சாப்பிடுங்கள் அது உடனடியாக நிவாரணம் அளிக்கிறது



# 'ZEPHROL'

trade mark brand

## ஸெப்ரால் காப் ஸிரப்




தயாரிப்பாளர்கள் மே ஆண்ட் பேக்கர் லிமிடெட்

விநியோகஸ்தர்கள்

**மே ஆண்ட் பேக்கர் (இந்தியா) பிரைவேட் லிட்**

பம்பாய் . கல்கத்தா . கௌஹாத்தி

மதராஸ் . புதுடில்லி



அவங்க ரெண்டு பேரும் மேஜரானவங்க. அவங்க விஷயத்திலே தலையிடுவதற்கு நமக்கு உரிமை கிடையாது. தெரியுமா உங்களுக்கு ?''

அது புஷ்பவனத்துக்குத் தெரியாது தான். இப்பொழுது சச்சிதானந்தம் எடுத்துக் காட்டிய பிறகுதான் அதைப் புரிந்து கொண்டார். அப்படியானால்....? தாம் தமது மகனை இவர் மகளுக்கு இழந்ததுதானு? அவனை மீட்க வழியே இல்லையா? இல்லை, வழி இருக்கத்தான் இருக்கிறது. இவர் மகள் மட்டும் சுந்தரத்தை இனித் தன் வழிக்கே வரக் கூடாது என்று விரட்டி விடுவாளானல், அவன் கட்டாயம் மனம் திருந்தி விடுவான். அவளை அப்படிச் செய்யச் செய்ய இவரால்தான் முடியும்.

''மைனரோ, மேஜரோ? என் மகனுக்கு நானும், உங்க மகளுக்கு நீங்களும் புத்தி சொல்ல வேண்டியது கடமை. அந்தக் கடமையை நீங்க செய்யத்தான் வேணும். என் கடமையை நான் செய்து பார்த்துட்டுப் பயனில்லாமப் போயிட்ட இனலேதான் உங்ககிட்டே வந்திருக்கிறேன். நீங்களும் சொல்லிப் பாருங்க. 'சுந்தரத்தை மறந்திடு; அவனுக்கு நல்ல புத்தி சொல்லி வீட்டுக்குத் திருப்பி அனுப்பிடு. இந்த ஊருக்கு இதெல்லாம் சரிப்படாது'ன்னு நீங்களும்சொல்லுங்க. கடுமையாச் சொல்லுங்க. கண்டிப்பாச் சொல்லுங்க. அதை உங்க மகள் கேட்கலேன்னு....?''

''கேட்கலேன்னு...?'' என்று குறுக்கிட்டு வினவினர் சச்சிதானந்தம்.

''கேட்கலேன்னு, என் மகன் எங்களுக்கு உதவாமப் போனதுபோல் உங்க மகளையும் உங்களுக்கு உதவாமச் செய்துட்டுத் தான் நிற்பேன். சாது மிரண்டா ஊர் கொள்ளாது என்கிறதைக் கொஞ்சம் நினைப்பிலே வைச்சுக்கிடுங்க, அத்தான்! ஊர் அவமானத்துக்கு முன்னலே எனக்கு நாலு உசிரு பெரிசில்லே!''

''நீங்க என்ன சொல்லுறீங்க, தம்பி?'' சச்சிதானந்தத்தின் குரலே அவரது மனக்கலக்கத்தை இப்பொழுது வெளிக் காட்டி விட்டது.

''அவங்க ரெண்டு பேரையும் கொன்னுப்போட்டு நானும் மரகதமும் விஷத்தைத் தின்னு உசிரை விட்டுடறதுன்னு தீர்மானிச்சுப் போட்டோம்!''

''என்ன?'' என்று அலறினார் சச்சிதானந்தம் பிள்ளை.

''ஆமாம்; நீங்க மானத்தைக் காற்றோட விட்டுட்டீங்க. எங்களாலே அப்படி இருக்க முடியாது. எங்களுக்கு மானத்தைவிட உசிரு பெரிசில்லே.''




**பிச்சைக்காரன் :** எனக்குப் பசியா இருக்குதுங்க. காசு போடுங்க! தோசை வாங்கிச் சாப்பிடறேனுங்க!

**அவர் :** ஆமாம்! இப்படித்தான் பொய் சொல்லிவிட்டுக் காசை வாங்கிப் போவீங்க! காசு தருகிறேன்! நிச்சயம் தோசை வாங்கித் திங்கணும். பொய் சொல்லிவிட்டு வேறு ஏதேனும் வாங்கித் தின்னே, எனக்குக் கெட்ட கோபம் வரும்!

---

''ஐயோ! அந்தக் கெடுகாலியாலே எத்தனை உசிருதான் போகப் போகுதோ? வேண்டாண்டா தம்பி, இப்படி ஊர்ப் பாவத்தையெல்லாம் கொட்டிக்கிடாதே. உன் மகளைப் பேசாமல், இத்தனை கொழுப்புப்புடிச்சவளா வளர்த்து விட்டாங்களே, அந்த மகாராசாகிட்டேயும் ராணியம்மா கிட்டேயும் அனுப்பிப் போட்டுச் சிவனேன்னு இரு. இல்லேன்னு நீயும் மூட்டையைக் கட்டிக்கிட்டு அங்கேயே போயிடு; உங்க ரெண்டு பேர் போக்குக்கும், இந்தக் கிராமத்துக்கும் இனிமேல் ஒத்துக்கிடாது!'' என்று தைலம்மாள் வேறு பெரிதாகப் பிரசங்கம் செய்ய ஆரம்பித்து விட்டாள்.

சச்சிதானந்தம் மீண்டும் ஒரு தடவை நாடிகள் அனைத்தும் ஒடுங்கிப்போய் நின்றுர். பசுப் போலிருந்த புஷ்பவனம் ஒரு கணத்தில் புலியென மாறி, யாருமே அவரிடமிருந்து எதிர்பார்த்திருக்க முடியாத சொற்களைக் கொட்டியதுமே, சச்சிதானந்தத்தின் உறுதியில் பாதி கரைந்து விட்டது. விஜயவும் சுந்தரமும் இணைவதற்கு அவரையும் அவர் மனைவியையும்

இணங்க வைப்பது கடினமாக இருக்கும் என்றும், ஆயினும் அவர்கள் இணைந்து விட்டால் பிறகு அவ்விருவரும் வழிக்கு வந்து விடுவார்களென்றும் அவர் மனக் கோட்டை கட்டிக் கொண்டிருக்க, அவர் களைக் கொன்று விட்டுத் தாங்களும் தற் கொலை செய்துகொள்ள முடிவு செய்து விட்டதாகப் புஷ்பவனம் கூறிவிட்டாரே! சச்சிதானந்தத்தால் இதை வெறும் பய முறுத்தல் என்று கருத முடியவில்லை. அவருடைய நிர்மாணம் அனைத்தும் புஷ்ப வனத்தின் இம் முடிவால் நிலைகுலைந்து போய் விட்டது. இப்பொழுது அவருக் குத் தமது மகள் மறுவாழ்வு பெறாவிட் டாலும் வேண்டாம்; உயிரோடு மீண் டால் போதும் என்றாகிவிட்டது. ஆத லால் அவர் கருதி இறங்கியவராக, "இப்படியெல்லாம் பேசாதீங்க, தம்பி. இப்போ நான் என்ன செய்யணும், சொல்லுங்க. செய்துட்டு மறு வேலை பார்க்கிறேன்" என்றார்.

அப்பொழுது வாசலில் செருப்பொலி கேட்டது. பூசை அறையிலிருந்து தலையை நீட்டிப் பார்த்த தைலம்மாள், முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடிக்க, "அதோ அவளே வந்துட்டா அப்பா, மகராசி; ஊரையே தொடைச்சு முழுங்கப் புறப் பட்டிருக்கிற மகராசி!" என்றாள்.

அத்தையின் பேச்சைச் செவிமடுத்துக் கொண்டே உள்ளே வந்த வீணா, அங்கே புஷ்பவனம் பிள்ளை இருப்பதையோ, அவர்கள் எல்லாருடைய முகத்திலும் பீதியும் கவலையும் நிறைந்து காணப்படு வதையோ லட்சியம்செய்யாமல், "என்ன அப்பா, எல்லாரும் கூடிப் பேசிக் கொண் டிருக்கிறீர்கள்?" என்று கேட்டாள்.

புஷ்பவனம் குமுறினார்; தைலம்மாள் சீறினாள்; இடையே சச்சிதானந்தம் அவ ளுக்கு விஷயத்தை எடுத்துரைத்தார். ஆனால் வீணா அதையும் மிகச் சாதாரண மாகவே எடுத்துக் கொண்டு பேசினாள். "உயிர் எனக்கும் வெல்லப்பாகு இல்லை; சுந்தரத்துக்கும் அப்படியில்லை, அப்பா! ஆகையால், மாமா எங்களைக் கொல்வ தாக இருந்தால் தாராளமாகக் கொன்று கொள்ளட்டும். ஆனால் மேலே ஆண்ட வனும், கீழே அரசினரும் இருக்கின்றனர் என்பது மாமாவுக்குத் தெரியாது போல் இருக்கிறது. மாமா! அதைக் கொஞ்சம் நினைவில் வைத்துக்கொண்டு, இதையும் நினைத்துக் கொள்ளுங்கள். இது பச் சைக் குழந்தைகளிடமோ, பட்டிக்காட் டாரிடமோ காட்ட வேண்டிய பயமுறுத் தல். நாங்கள் இதற்குப் பயப்பட மாட் டோம். இன்றே ஒரு கால் காகிதத்தில் உங்கள் பயமுறுத்தலைப் பற்றிப் போலி சுக்குத் தெரிவித்தால் உங்கள் வீட்டிலும் என் ஆஸ்பத்திரியிலும் இரவு பகல் போலீஸ் பாதுகாப்பு ஏற்பட்டுவிடும்..."

சச்சிதானந்தம் குறுக்கிட்டார். "அப் படியெல்லாம் ஒன்றும் நடக்கக் கூடாது, அம்மா! அதிலும் நம்ம குடும்பத்தின் மூலமாக மாமா குடும்பத்துக்கு ஒரு அவக் கேடு ஏற்படக் கூடாது. என்னவோ நடந்ததெல்லாம் நடந்து போச்சன்னு ஒதுக்கிட்டு, சுந்தரத்தை வீட்டுக்குப் போகச் சொல்லு. அவனை நீ உன்னு டைய ஆஸ்பத்திரியிலே வைச்சுக்கிட்டி ருந்தால் என்னையுந்தான் ஊர்க்காரங்க தூத்துவாங்க."

"யாரை யார் தூற்றினாலும் சரி; யாரை யார் போற்றினாலும் சரி; இனி எங்களை எந்த மனிதராலும் பிரிக்க முடி யாது. என் வாயால் அவரை வீட்டுக்குப் போங்கள் என்று சொல்லவும் முடியாது" என்று தீர்மானமாக நிமிர்ந்து நின்று சொன்னாள் வீணா.

"நல்லா இருக்குதுடா, தம்பி! மான முள்ள பொண்ணு பேசற பேச்சா இது? இந்தா தம்பி, இவ்வளவு துணிஞ்சுட்ட இவள் இருக்கிற வீட்டில் இனிமே நாங்க இருக்க மாட்டோம். நீயாச்சு; உன் மகளாச்சு; அவள் செய்யுற அநியா யத்தை யெல்லாம் பார்த்து நீயே சந்தோசப்பட்டுக்கிட்டு இரு. நாங்க போறோம், காடோ, மேடோ, குளமோ குட்டையோ பார்த்துக்கிட்டு" என்று இரைந்து கத்தினாள் தைலம்மாள்.

இதுவரை அமைதியாகவே பேசிவந்த வீணா இப்பொழுது கோபத்துடன் தைலம்மாளை விழித்து நோக்கினாள். "இந்தாங்க அத்தை; எனக்காக நீங்க வீட்டை விட்டுப் போக வேண்டாம். இதோ நானே போயிடறேன். அப்பா! உங்களுக்காகவுந்தான்; மாமா! உங்க ளுக்காகவுந்தான். ஆனால் எங்கள் உறு தியை இனி யாராலும் மாற்ற முடியாது. நாங்கள், உங்களுடன் மட்டுமில்லை; இந்த உலகத்துடனும் போர் தொடுக்கத் துணிந்து விட்டோம். அதற்காக எதை யும், யாரையும், தியாகம் செய்யவும், எத்தகைய இன்னல் ஏற்பட்டாலும் சகித்துக் கொள்ளவும் தீர்மானித்து விட்டோம். எங்களுடைய இந்தச் சங்கல் பத்தை ஒரே ஒருவர்தான் மாற்ற முடியும் - கடவுள்! ஒன்றே ஒன்றுதான் அழிக்க முடியும் - மரணம்! நான் வரு கிறேன் அப்பா; வருகிறேன் மாமா; வருகிறேன் அத்தை."

வீணாவை நிறுத்த அவர்கள் யாருக்கும் துணிவு வரவில்லை. ஏனென்றால் அவள் அப்பொழுது தோற்றத்தில் கண்ணகியை ஒத்திருந்தாள்; சபதத்தில் பாஞ்சாலியை நிகர்த்திருந்தாள்!

(தொடரும்)




தேக ஆரோக்கியத்திற்கு இன்றியமையாதது — புத்துணர்ச்சி அளிக்க வல்லது!

# காவேரி சூபர்

வெப்பத்தினால் ஏற்படும் வியர்வை துர்நாற்றத்தையும், அழுக்கினால் ஏற்படும் அபாயத்தையும் ஒழிக்க அத்தியாவசியமான சோப் காவேரி சூபர்!



காவேரி சூபர் ஔஷத குணம் நிறைந்த சால்மூக்ரா தைலம் கலந்தது.

கையடக்கமானது. விலை குறைவானது.

**மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல் கார்ப்பொரேஷன் லிட்.**
**மேட்டூர் அணை R. S. சேலம் ஜில்லா**
மானேஜிங் ஏஜண்ட்ஸ்: **சேஷசாயி பிரதர்ஸ் பிரைவேட் லிமிடெட்**

MC 633




## 1. கந்தாசிரமம்

மலையில் கந்தாசிரமத்திலிருந்து பார்த்தால் அழகிய திருவண்ணாமலை நகர் முழுதும் நிலவில் குளித்தெழுந்து கொண்டிருந்தது நன்றாகத் தெரிந்தது.

வானத்து நிலவோடு உறவாடிக் கொண்டிருந்தாற் போன்ற நாற்கோபுரங்கள் தெரிந்தன. அதோ, நடுநாயகமாய் வள்ளாள மகாராஜன் கோபுரம் தெரிகிறது. கோபுரத்திலுள்ள சரவிளக்குகள் காற்றில் தொங்கும் மின்மினிகளாய்ச் சுடர் விடுகின்றன.

ஆசிரமத்து முன் வாயிலில் இருந்த வழுவழுப்பான சிமிட்டித்தரையில் அமர்ந்திருந்த நாகநாத உடையார் இந்தக்காட்சியைக் கண்டு சற்றே பெருமூச்செறிந்தார்.

அரை மணி நேரத்துக்கு முன்னால்தான் அமைதிவேண்டும் என்று நினைத்தார்; 'சரசர' வென்று மலைப்படிகளேறி வந்து இந்தக் கந்தாசிரமத்து முன் வாயிலில் உட்கார்ந்துவிட்டார்.

நல்ல இடகாத்திரமான மேனி நாகநாத உடையாருக்கு. திருவண்ணாமலையில் பிரபல மணிலாக்கொட்டை வியாபாரி. திருமஞ்சன வீதியில் – அவருடைய கிடங்கில் வருஷம் முழுதும் கடலை மணிலாமணிகள் வியாபித்துக் கிடக்கும்.

வட ஆற்காடு ஜில்லாவில் நாகநாத உடையாரின் நிலக்கடலை, கரும்பு நிலங்களுக்கு ஒரு மவுசு எப்போதுமே உண்டு. அவருடைய அதிருஷ்டம் அண்ணாமலையான் தந்த அதிர்ஷ்டமாகவே எல்லாரும் நினைத்தார்கள். ஜீவநதி போல் உடையாரின் செல்வம் தழைத்திருந்தது. ஆனாலும் இன்று அவர் இங்கே கந்தாசிரமத்தை நாடி வரும்படி யாகிவிட்டது. ஆம்! அவர் மன அமைதிக்குத்தான்!

திருவண்ணாமலையில் தினசரி கோயில் திருவிழாதான், உற்சவம்தான். ரத வீதிகளில் ஒன்றான திருமஞ்சன வீதியில் அன்று நாகநாத உடையார் தமது மணிலாக் கொட்டைக் கிடங்கின் முன்னால் 'கல்லா'வுக்கு அருகில் உட்கார்ந்திருந்தார்.

வாசனை பூசப்பெற்ற திருநீறு அவரது பரந்த நெற்றியில் துலங்கியது. எடுத்து அழகாக முடியப் பெற்ற கட்டான குடுமியும், குண்டு குண்டான வைரக் கடுக்கன்களும் கறுப்பான மேனியும் உடையாரை அன்று மிகச் சம்பிரமமாக எடுத்துக் காட்டியது.

வீதியின் தொடக்கத்தில் மேளச் சத்தம் கேட்டது. நாட்டை ராகம். அண்ணாமலை நாதர் அம்பிகை அபீத குசாம்பாளுடன் உலா புறப்பட்டிருந்தார்.

உடையார் கடைக்குள்ளே திரும்பி, ''ஏலே, அருணகிரி! தேங்காய், கற்பூரம் கொண்டா! சுவாமி வந்தாச்சு!'' என்றார்.

கடைக்கெதிரே சிவிகை நின்றது. கற்பூர ஒளியில் இறைவனும் இறைவியும் வர்ணித்தற்கரிய அற்புதத்துடன் விளங்கினார்கள். உடையார் சேவித்துக் கொண்டார்.

அப்போது அங்கே வந்தார் ராமசாமி. மணிலாத் தரகில் உடையாருக்கு வியாபார மவுசு ஏற்படுத்திக் கொடுப்பவர்களில் ராமசாமியும் ஒருவர். உடையாருக்கு அருகில் உட்கார்ந்து கொண்டார் ராமசாமி.

ஆரம்பத்தில் வியாபாரம் சம்பந்தமாய்க் கொஞ்சம் பேச்சு நடந்தது.

திடீரென்று ராமசாமி, ''உடையார்வாள்! உங்கள் மகள் அபீதாவின் திருமண விஷயம் என்னவாயிற்று?'' என்றார்.

''அண்ணாமலைநாதன் விருப்பப்படி வேளை வரவேண்டாமா, ராமசாமி?'' என்றார் நாகநாத உடையார்.

''தெய்வ யத்தனம் சரிதான், உடையார்வாள்! ஆனால் மனித யத்தனமும் வேண்டும்... நீங்கள் ஒன்றும் வித்தியாசமாக நினைத்துக் கொள்ளாமல் இருந்தால் ஒரு விஷயம் நான் சொல்ல வேண்டும்......''

''நீங்கள் சொல்வதொன்றும் புரியவில்லையே, ராமசாமி......!'' என்றார் உடையார்.




"சோமாஸ்பாடி சோமு உடையாரின் மகன் அண்ணாமலையைத் தெரியுமா உங்களுக்கு?"

சோமாஸ்பாடி சோமு என்றவுடன் நாகநாத உடையாரின் முகம் சற்றே சுருங்கியது. சோமாஸ்பாடி திருவண்ணாமலையிலிருந்து நான்குமைல் தொலைவிலுள்ள ஒரு சிற்றூர்.

சோமாஸ்பாடியில் சோமு உடையார் பிரபல மிராசுதார். கரும்பும் நிலக்கடலையும் அவர் நிலங்களில் விளைந்ததுபோல் மற்றெங்கும் அம்மாதிரி விளைவதில்லை என்று சொல்வார்கள். தலைமுறைகளுக்கு முன்னால், அருகே செஞ்சிக் கோட்டையில் ராஜா தேசிங்கின் யானைப் படைகளுக்குச் சோமு உடையாரின் மூத்தோர்கள்தான் தங்கள் நிலத்தில் விளைந்த கரும்பைத் தீனியாக வழங்கினார்கள் என்று சொல்வார்கள்.

சோமாஸ்பாடியில் நாகநாத உடையாருக்கும்ஏகதேசமாகப்புஞ்சைநிலபுலன்கள் உண்டு.

ஒரு சிறு தகராறில் இவ்விருவருக்கும் ஏற்பட்ட மனக்கசப்பு இன்று பெரிய ஆல விருட்சமாக வளர்ந்து விட்டிருக்கிறது. சோமு உடையார் நாலைந்து இடங்களில் ஊற்றுப் பறித்துப் பம்பு செட்டு வைத்து வெள்ளாமை நடத்தி வந்தார். அதோடு மட்டுமில்லாமல், நாகநாத உடையாரின் நிலங்களுக்கு அந்த வசதி ஏற்பட முடியாத வழியையெல்லாம் கூடச் செய்து விட்டார் சோமு உடையார்.

தரகு ராமசாமி இவ் விஷயத்தைத்தான் நாகநாதனிடம் ஓதிவிட்டுப்போனார். "சோமுவின் பிள்ளை அண்ணாமலையும் உங்கள் பெண் அபிராம்பாளும் கோயிலில் அம்மணி அம்மன் கோபுரத்துக்குக் கீழே நின்று பேசிக் கொண்டிருந்ததை நான் பார்த்தேன், உடையார்வாள்! பையன் நல்லவன்தான். அழகன். நல்ல சொத்தும் இருக்கிறது. ஆனால் உங்கள் நிலத்தை வாழவிடாமல் அடித்தவரின் பிள்ளை ...எச்சரிக்கை வேண்டும் என்று சொல்லவே வந்தேன்......"

ஓதி விட்டுப் போய்விட்டார் தரகு ராமசாமி. கடைக்குள்ளே மணிலாப் பருப்புகளைப் பெரிய வாணலிகளில் இட்டுப் புரட்டி வறுத்துக் கொண்டிருந்தான் கடைப் பையன் அருணகிரி. நாகநாத உடையாரின் மனமும் இப்போது அப்படி ஆயிற்று. அவர் நேரே வீட்டுக்குப் போகவில்லை. 'மளமள' வென்று மலையோரம் போனார். படிகள் ஏறிக் கந்தாசிரமம் வந்து உட்கார்ந்து விட்டார். உடையாரின் உள்ளத்துக்குச் சற்றே அமைதி ஏற்பட்டாற்போலிருந்தது.

## 2. சோமாஸ்பாடி முருகன்

திருவண்ணாமலையிலிருந்து திண்டிவனம் செல்லும் ரஸ்தாவில் இரு அதிசயங்கள் உள்ளன. ஒன்று செஞ்சிக் கோட்டை. ராஜகிரியென்றும் கிருஷ்ணகிரி என்றும் ரஸ்தாவின் இருமருங்கிலும் உள்ள சரித்திரப் பிரசித்தி பெற்ற கோட்டைகள். மற்றது, சோமாஸ்பாடி சிற்றூரில் உள்ள அழகிய முருகன் கோயில். அங்கும் ஒரு சிறிய குன்றின்மேல்தான் கொலுவிருந்தான் சண்முகநாதன்.

அன்று ஆடிக் கிருத்திகை. அபிராமும் அவள் அன்னை உண்ணாமலை அம்மையும் கூண்டு வண்டியேறித் திருவண்ணாமலையிலிருந்து சோமாஸ்பாடிக்குத் திருமுருகன் தரிசனத்துக்கு வந்தார்கள். உடையாருக்குக் கடையில் வேலை இருந்ததால் வரவில்லை.

கூட்டம் கொஞ்ச நஞ்சமல்ல. அவர்களது நிலங்களைக் கவனித்துக் கொள்ளும் குத்தகைதாரர் இருவரையும் கோயிலுக்கு அழைத்துக் கொண்டு போனார்.

பெரிய குடும்பத்து மனிதர் வரவும் அர்ச்சகர் முகமன் கூறி வரவேற்றார். அங்கே சன்னதியில் ஏற்கனவே அண்ணாமலை நின்று கொண்டிருப்பதைக் கவனித்துக் கொண்டாள் அபிராம்; அவனும் இவள் வந்ததைக் கவனித்துக் கொண்டான்.

எதிரே சன்னதியை நோக்கிப் புன்னகை பூத்திருந்த வேலேந்திய முருகன் இவ்விரண்டு

மலர்களையும் ஒன்றை மற்றது பார்த்த மாத்திரத்தில் மலரச் செய்தான்.

அபிஷேகமும் ஆராதனையும் நடந்து கொண்டிருந்தன.

"அம்மா! ஒரே புழுக்கம்...சற்று வெளியில் இருக்கிறேன்..." என்றாள் அபிதம்.

இரண்டு நிமிஷங்களில் இருவரும் வெளியே பிராகாரத்தில் இருந்தார்கள். பிராகாரத்தின் ஓர் ஓரத்தில் வந்து அவர்கள் நின்று கொண்டார்கள்.

"உன்னைப் பார்த்து ஒரு மாதம் ஆகி விட்டது அபிதம்!"

"நீங்கள் சபைப்பக்கம் வந்தால்தானே?... அருணகிரி திருப்புகழ் பாடுபவருக்குத் திருவண்ணாமலை மறந்தது எப்படியோ?" சிரித்தபடியே கேட்டாள் அபிதம்.

அண்ணாமலையின் மனத்தில் மகிழ்ச்சி தேனாய் நிறைந்தது. திருப்புகழ் சபையில் அவன் பாடிய திருப்புகழைக் கேட்டு மெய்மறந்து அவனுக்கு அடிமை யானவளல்லவா அபிதம்!

"அதிருக்கட்டும், அபிதம்! உன் அப்பாவிடம் நீ சொல்லு; என் அப்பாவிடம் நான் சொல்லி விடுகிறேன்..."

"சுலபமாய்ச் சொல்லி விட்டீர்கள்! ஆசையை ஆண்பிள்ளைகள் வெளியிடுவார்கள்; பெண்ணும் அத்தனை சுலபமாக வெளியிட முடியுமா? ஏற்கனவே அந்த ராமசாமி என்னுடைய அப்பாவின் மனத்தை ஏதோ குழப்பியிருக்கிறார்..."

"அபிதம்! இந்த அர்த்தமற்ற பகைக்கு நமது நிர்மலமான மனங்களா பலியாக வேண்டும்?"

"இதோ பாருங்கள், கொஞ்ச காலம் பொறுத்துக் கொள்ளுங்கள். எல்லாம் சரியாகி விடும். ஒரே மண்ணில் பிறந்தவர்கள் நாம். கரும்பு நம்மை இனிக்க வைக்கும்; மணிலாப் பருப்பு நம் வாழ்வை வளமாக்கும்..."

இதற்குள் கோயில் முன் வாசலில் தன் தாய் தட்டுப் படவே அபிதம், "அப்போ நான் வரட்டுமா? கவலைப்படாதீர்கள்! வெள்ளிக் கிழமை கோயிலில் இருப்பேன்...அருணகிரி சன்னதியில்..." என்றாள், போய்க்கொண்டே.

## 3 வள்ளாளராஜன் கோபுரம்

அன்று திருவண்ணாமலையில் திருப்புகழ் சபையில் வழக்கத்துக்கும் அதிகமான கூட்டம். பட்டணத்திலிருந்து வந்திருந்த பெரியவர் ஒருவர் கந்தபுராணம் சொல்லுகிறார் அன்று.

பிரவசனம் ஆரம்பமாவதற்கு முன்பு ஓர் இளைஞன் தனது கம்பீரமும் இனிமையுமான குரலில் பாம்பன் குமரகுருபர சுவாமிகளின் சண்முககவசத்தைப்பாடிக்கொண்டிருந்தான்.

"பல்லது கடித்து மீசை
பட பட வென்றே துடிக்கக்
கல்லினும் வலிய நெஞ்சம்
காட்டியே உருட்டி நோக்கி
எல்லினும் கரிய மேனி
எமபடர் வரினும் என்னை
ஒல்லையிற் றாரகாரி
ஓம்ஐம் ரீம்வேல் காக்க"

—என்ற இடத்தில் புராணம் சொல்ல இருந்த பெரியவரிலிருந்து மற்ற அனைவரும் புல்லரித்தனர். மண்டபத்து வாசலில் அப்போதுதான் கடையை விட்டு வந்து நின்றிருந்த நாகநாத உடையாரின் நெஞ்சமும் சிலிர்த்தது.

பாடியவனை அண்ணாமலை என்று 'சட்' டென்று புரிந்து கொண்டார் உடையார்.

இதயத்தில் பகை என்ற உணர்ச்சியை மீறிக் கொண்டு ஒரு சிந்தனை படர்ந்தது. உற்றுப் பார்த்தார். அண்ணாமலைக்கு எதில் குறைவு இருந்தது? சிவப்பு மேனி; வாட்ட சாட்டமாயிருந்தான்; முருகன் புகழ் பாடும் பக்தி மயமான உள்ளம்...தன் மகள் அபிதத்தின் உள்ளத்தை அவன் கவர்ந்ததில் ஆச்சரியமில்லை.

நிலத்துக்குத் தண்ணீர் கிடைக்காமல் சோழ உடையார் காரியம் செய்தால், அதற்காகத் தன் உள்ளத்தையா வறட்சியாக்கிக் கொண்டு விடுவது?

யோசனையில் ஆழ்ந்திருந்த நாகநாத உடையாரின் எதிரே மற்றொரு காட்சியும் புலனாயிற்று. அவன்—அண்ணாமலைதான்—மண்டபத்துப் படி இறங்கி வள்ளாளராஜன் கோபுரத்தை நோக்கிப் போகிறான்...அங்கே பிராகாரத்தின் நடுவில், நிலவில் தெரிந்த அந்தப் பெண் முகம்...

உடையார் மகள் அபிதம்!

'துணுக்' கென்றது உடையாருக்கு. நிலவில் விழுந்த நீண்ட நிழல்கள் பின்னிப் பிணைய அவர்கள் இருவரும் முன்னே போனார்கள்; நாகநாத உடையார் பின்தொடர்ந்தார்.

வள்ளாள ராஜன் கோபுரத்துக்கு அருகில் பவனி செல்லும் இறைவன் உள்ளே வர ஒரு திட்டி வாசல் உண்டு. அந்தத் திட்டி வாசல் முன் மண்டபத்தில் வேறு யாருமில்லை. அங்கே மண்டபத்துத் தூண்களின் நிழல்களோடு ஒண்டி உட்கார்ந்தார்கள் அண்ணாமலையும் அபிதமும்.

வேறொரு தூணின் மறைவில் நின்று கொண்டார் நாகநாத உடையார்.

"வெள்ளிக் கிழமை..."

"மறக்காமல் வந்து விட்டேனே, அபிதா! அதோ பார், வண்மைக் கவிஞர் கனவினைப் போல் நிமிர்ந்து நிற்கிறது வள்ளாள ராஜன் கோபுரம்... அந்தக் கோபுர உயரம் என் அன்பு உனக்காக!"

"உங்களுக்காக என் அன்பு அதைவிடவும் உயர்ந்தது!"

"அபிதம்! 'சுற்றி நில்லாதே போ, பகையே! துள்ளி வருகுது வேல்!' என்பது கவிஞன் வாக்கு; நம்மிடையில் வேலியாய் அடைந்திருக்கும் நம் தகப்பன்மாரின் பகை என்று ஒழியுமோ?"

மறைவிலிருந்த நாகநாத உடையாருக்கு மனக் கலக்கம் அதிகமாகி விடவே, அவர் அங்கிருந்து புறப்பட்டு விட்டார். இரவெல்லாம் யோசித்துக் கடைசியில் ஒரு முடிவுக்குவந்தார்.

விடியற்காலம் திண்டிவனத்துக்குச் செல்லும் முதல் பஸ்ஸில் சோமாஸ்பாடிக்கு அவர் செல்வதாக அறிந்ததும், தாயும் மகளும் அதிசயித்தனர்.

## 4 கரும்புக் களத்தில்!

சாலைக்கு இருமருங்கிலும் வேலை மும்முரமாக நடந்து கொண்டிருந்தது. ஒரு பக்கம்

கரும்பு அறுவடை: மறு பக்கம் கரும்பைக் காய்ச்சி வெல்லப் பாகைப் பக்குவப்படுத்திக் கொண்டிருந்தார்கள். சாலையின் ஓர் ஓரத்தில் சாய்வு நாற்காலியில் சாய்ந்தபடி வேலைகளைக் கண்காணித்து வந்தார் சோமு உடையார்.

சாலையில் கூப்பிடு தூரத்தில் அவரது மயிலைக் காளை வில் வண்டியின் 'கண கண' வென்ற மணிச் சத்தம். வேலூரில் 'ஃபெயின்ட்' செய்து தமது இஷ்டப்பிரகாரம் செய்து வந்த அந்த வண்டி சூரிய ஒளியில் மின்னும் தனது புது வர்ணத்துடன் காளைகளின் வேகத்தில் ஒய்யாற நடை போட்டு வந்தாற்போலிருந்தது.

வண்டியில் அதுவும் தனக்குச் சொந்தமான வண்டியில் வருவது யார்? வண்டி அருகே வந்து நின்றது. வெளிப் போந்த நாகநாத உடையாரைக் கண்டதும் திடுக்கிட்டார் சோமு உடையார்.

வண்டி சாலையில் சோமு உடையாரின் அருகில் வந்து நின்றது.

வண்டிக்காரன், "ஐயா சோமாஸ்பாடிக்கு உங்களைத் தேடி வந்தாருங்க. நீங்க கரும்புக் களத்துக்குப் போயிருக்கிங்கன்னு சொன்னேன். அவசரமாகப் பார்க்கணும்னுங்க.... அழைச்சிட்டு வந்தேன்" என்றான்.

நாகநாத உடையார் வண்டியிலிருந்து கீழே இறங்கினார். பகையாளிகள் இருவரும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள்.

திருவண்ணாமலையாரின் முகத்தில் புன்னகை இருந்தது: அவர் முன்னாலேயே தம்மைத் தயார்ப்படுத்திக் கொண்டு விட்டாரே?

சோமாஸ்பாடியார் தமது முகத்தில் எந்த விதமான பாவமும் காட்டவில்லை.

நாகநாத உடையார் சோமு உடையாருக் கெதிரே இருந்த முக்காலியில் அமர்ந்தார்.

"சோமு! நாம் பார்த்து நாளாயிற்று...."

"ஆமாம்!" —சோமு உடையார் குரலில் சலனமில்லை.

"பம்பு செட்டு நமது மனத்தைப் பந்தாடி விட்டது. சோமு நினைக்கவே எனக்கு வேதனையாக இருக்கிறது."

"நடக்கிறது எதுவாயிருந்தாலும் நடந்து தான் தீரவேண்டும், நாகநாதா! இப்போது பம்புசெட் வெள்ளாமை யாரும் நடத்தலாம். இங்கே உன் நிலங்களுக்குக்கூட அப்படி நடத்தலாமே?"—சோமு உடையார் குத்தலாகப் பேசினார்

அதை நாகநாதன் பொருட்படுத்தவில்லை. "என்னுடைய நிலங்களுக்கும் உன்னுடைய பம்பு செட்டுகள்தான் இனிமேல் தண்ணீர் தரவேண்டும், சோமு!" என்று அவர் பதில் தந்ததும் அதிர்ந்துபோனார் சோமு உடையார்.

"நாகநாதா! நீ என்ன எண்ணத்துடன் வந்திருக்கிறாயோ எனக்குத் தெரியாது....." அவரை மேலே பேசவிடாமல் நாகநாத உடையார் முக்காலியிலிருந்து 'சடா'ரென்று எழுந்து அருகில் கிடந்த ஒரு கரும்புக் கட்டிலிருந்து ஒரு கரும்பை எடுத்தார். அதை உடையாரிடம் நீட்டினார்.

"இதைப் பிடி, சோமு! இந்த மண் இனிமையைத் தருகிறது. அந்த இனிமையில் பிறந்தோம் நாம். நாம் பிரிந்தபோது இந்தப் பிராந்தியத்தில் எப்படிப்பட்ட பேச்சு நடக்கும்? உலகம் வேறே, பிறந்த மண் வேறே."

சோமு உடையார் ஒன்றும் புரியாமல் கரும்பைக் கையில் வாங்கிக் கொண்டார்.

"என் நிலங்கள் இனி உன் மகனுக்குச் சொந்தமானவை சோமு! என் மகளுக்கு அவற்றைச் சீதனமாக வழங்கி விட்டேன்! இனி உன் நிலத்தில் பாயும் ஜீவ கங்கை அந்த நிலத்துக்கும் பாய வேண்டும். உண்மையில் நிலமெல்லாம் ஒரே நிலம்தானே?" நான் வருகிறேன். உன் முடிவை இரண்டு நாட்களில் எதிர்பார்க்கிறேன்" — கூறிவிட்டுக் கொஞ்சம் கூடத் தாமதிக்காமல் வில் வண்டியில் ஏறிக்கொண்டார் நாகநாத உடையார்.

காளைகளும் வண்டிக்காரனும் மந்திரத்தால் கட்டுண்டவர் போலானார்கள். வண்டி 'ஜல் ஜல்' என்று பறந்து விட்டது. கையில் கரும்புடன் சோமு உடையார் அப்படியே அயர்ந்து உட்கார்ந்து விட்டார்.

இன்று சோமு உடையாருக்கு வலுவில் கிடைத்த வெற்றி இது என்ற மகிழ்வு கொஞ்சம் கொஞ்சமாகத் தோன்றவே, வெல்லப் பாகின் மணம்கூட அவருக்குத் திகட்டியது!

## 5. பகை நடுவினில்...

அண்ணாமலையான் சன்னிதியில் அந்தப் பிரபல திருமணம் மிகச் சிறப்பாக நடைபெற்றது.

அண்ணாமலையும் அபிநயமும் ஊர்வலமாகப் பிளஷர் காரில் வந்தனர். ஊர்வலத்தில் ஆளுக்கொரு சந்தனக் கிண்ணம் ஏந்தி எதிர்ப்படுபவர்களுக் கெல்லாம் கொடுத்துக் கொண்டு வந்தார்கள் நாகநாத உடையாரும் சோமு உடையாரும்.

அப்போது சோமு உடையாரின் சிப்பந்தி ஓடிவந்து, "எஜமான்! நமது நிலத்தில் பம்பு செட்டு ரிப்பேராகித் தண்ணீரை அடைக்க முடியாமெ பீறிட்டு அடிச்சுக்கிட்டிருக்கு... சாயங்காலம் ஐந்து மணிக்குத் தொடங்கியது இன்னும் ரிப்பேராகல்லே..." என்றுகூறினான்.

திருவண்ணாமலையாரும் சோமாஸ் பாடியாரும் ஒருவரையொருவர் அர்த்தபுஷ்டியுடன் பார்த்துப் புன்னகை செய்து கொண்டார்கள். அவர்களையும் அறியாமல் ஒருவரை நோக்கி மற்றவர் சந்தனக் கிண்ணியை நீட்டினார்கள்! இந்தக் காட்சியைக் காரிலிருந்து பார்த்துக்கொண்டிருந்த இளந் தம்பதியர் இருவரும் ஒருவரை மற்றவர் பார்த்துப் புன்னகை செய்து கொண்டார்கள்.

சோமு உடையார் சிப்பந்திக்கு உத்தரவு கொடுத்தார்: "காலையில் 'மெக்கானிக்குகளை' அழைத்துப் போனால் போதும். இரவு முழுதும் நிலமெல்லாம் நனையட்டும்...தாகம் தீரத் தண்ணீர் குடிக்கட்டும்!" அருகில் நின்று கொண்டிருந்த நாகநாத உடையார் இதயத்தில் புல்லரித்தார்.

பகை நடுவினில் நீ விருப்பதை உணரும் இதயம் பகை நடுவினில் அன்புருவாய் ஒளிரும் ஆண்டவனையும் நினைத்துப் பார்க்க ஆரம்பித்து விட்டால், அப்புறம் பகை இல்லை.

மலையை நோக்கியும் கந்தாசிரமத்தை நோக்கியும் வள்ளாள மகாராஜன் கோபுரத்தை நோக்கியும் நாகநாத உடையார் தமது இதயத்தில் அஞ்சலி செய்தார்.







# வாழ்க்கைத்தரம் உயர்வதற்கு I.O.B. உதவுகிறது

உங்கள் உபயோகத்துக்கு வேண்டிய நீடித்துழைக்கும் சாமான்களை வாங்குவதற்கும், சொத்து அபிவிருத்திக்க கடன்களும், சிறு வியாபாரக் கடன்களும், தவணையில் பணம் கொடுத்து வாங்கும் முறையில் விற்கும் ஏஜென்ஸிகளுக்கு பண உதவி செய்யும் கடன்களும் தரப்படும்.

சுலபமாகத் தவணைகளாக 6, 12, 18, 24, 30 மாதங்களில் கடனைத் திருப்பிக் கொடுக்கலாம்.




இந்தத் திட்டம்பற்றிய முழு விவரங்களுக்கு எழுதுங்கள்:

**தி இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்க் லிமிடெட்,**

151, மவுண்ட்ரோட், சென்னை-2

அல்லது

அகமதாபாத், பம்பாய், கல்கத்தா, கட்டக், ஹைதராபாத், சென்னை, புது டில்லி, தென்னிந்தியா முழுதும் உள்ள கிளைகள் எதிலும் பெறலாம்.

எம். ஸ்டி. முத்தையா, சேர்மன்.

வி. பி. துரைக்கண்ணு, ஜெனரல் மானேஜர்.

IOB-8-5A

---

# மிக அழகிய...

## அடர்ந்த நீண்ட ஒளியுள்ள கூந்தல்!

பிரதிதினமும் கால்கேட் பெர்ப்யூம்டு காஸ்டர் ஹேர் ஆயில் தடவி வந்தால், கூந்தலானது அடர்த்தியாகவும், நீளமாகவும் வளருவதுடன் இளமையின் ஒளியுடனும், அற்புத ஜ்வலிப்புடன் விளங்குவதைக் கண்டு நீங்கள் பரவசமடைவீர்கள். அது உங்கள் கூந்தலின் இயற்கை அழகை எடுத்துக்காட்டி எல்லோரையும் பிரமிக்கச்செய்யும்.

மகிழ்ச்சியூட்டும் நறுமணம—
உங்கள் குடும்பம்
முழுவதும் விரும்புவது!




# கால்கேட்

## பெர்ப்யூம்டு காஸ்டர் ஹேர் ஆயில்

**சிக்கனமான சைஸை வாங்கி பணத்தை மிச்சப்படுத்துங்கள்**

CCHO/G/5



# படித்துப் பாருங்கள்

## ஸ்ரீ அரவிந்தர் பகவத்கீதை - பேருரைகள்

(முதல் புத்தகம்)

**மா**தவனை அடைவதற்கு மௌனமும், தியானமும் யோகமும் மார்க்கம் என்று மகாபாரதம் கூறுகிறது. அந்த மார்க்கத்தை எல்லோரும் உணரும்படி அனுஷ்டித்துக் காட்டி யோகத்துக்கு மார்க்க தரிசியாக நமது காலத்தில் விளங்கிய மகாபுருஷர் ஸ்ரீ அரவிந்தர். மகாபாரதத்துக்கு மகுடம் வைத்தது போல் பிரகாசிக்கும் பகவத்கீதை வியாஸருடைய யோகதரிசனத்தின் சிகரமாய் விளங்குவது போல் அதற்கு விளக்கம் கண்ட அரவிந்தருடைய பேருரை சிந்தனை உலகின் சிகரமாக விளங்குகிறது. அரவிந்தர் இவ்விளக்க உரையைத் தன் புத்தி கூர்மையாலும் பரந்த கல்வி கேள்வியாலும் மட்டும் எழுதி விடவில்லை. கீதையை முதன் முதலாக திருதராஷ்டிர மகாராஜனுக்குக் கூறிய ஸஞ்ஜயர் வியாஸருடைய அனுக்கிரகத்தால் தாம் நேரிலேயே கண்ணனிடமிருந்து அக்கீதையைக் கேட்ட அனுபவத்தைத் தெரிவிக்கிறார்.

சீரார் வியாதன் திருவருளால் யான்கேட்டேன்
பேரார் மறையிதனைப் பேட்புடனே — தாராரும்
கண்ணனே என்முன் கழறவுயர் யோகமிதை
எண்ணரும்யோ கேசன்பால் சங்கு (கீதை 18-75)

இதேமாதிரி யார் யார் இறைவனுடன் ஒன்றுபட்ட உள்ளம் படைத்தவர்களோ, சிறந்த குருவினுடைய அனுக்கிரகம் பெற்றவர்களோ அவர்களும் இக் கீதையை நேரில் கேட்கின்றனர். கீதாசாரியனுகிய கண்ணனுடைய திருவுருவையும் காண்கின்றனர். அப்படிக் கண்டும் கேட்டும் அனுபவித்தவர் மகான் அரவிந்தர். அவர் 1908-09 ஆண்டுகளில் அலிபூரில் சிறைவாசம் செய்ய நேரிட்ட போது அவருக்கு உற்ற துணையாகவும், ஆறுதலாகவும் இருந்தது பகவத்கீதை. பகவத்கீதை காட்டிய வழியில் முழு மனத்தையும் செலுத்தி நிற்கையில் கண்ணனை நேரில் கண்டார். உள்ளத்தினுள்ளே மட்டுமல்ல; சுற்றி யிருந்த பொருள்களிலும் சிறையிலிருந்த கைதிகளிடமும் கண்ணனையே கண்டார். சிறையிலிருந்து வெளிவந்த பின் அவர் கூறியதாவது: "சிறையின் கம்பிகளையும் வெறும் சிராதிகளா யிருந்த கதவையும் நோக்கியபோது, கண்ணனையே கண்டேன். நாராயணனே பாராக்காரனுயிருந்து என்மீது காவல் புரிந்தான். படுப்பதற்கென அளிக்கப்பட்ட முரட்டுக் கம்பளத்தின்மீது படுத்திருக்கையில் கண்ணனின் கரங்களென்னைத் தழுவின. சிறையில் கைதியாயுள்ள கள்ளர், கொலைஞர், வஞ்சகர் அனைவரையும் நோக்கினேன். அப்போது கண்ணன் உருவமே எனக்குத் தென்பட்டது. ஆண்டவன் வாக்கு உள்ளத்தில் எழுந்தது. 'நான்தான் இவற்றை யெல்லாம் செய்கிறேன். என் இஷ்டம் எதுவோ அது நடந்தே தீரும். பிறர் விரும்புவது நடவாது. நான் செய்து முடிக்கக் கருதியதை மானிட சக்தி எதுவும் தடுக்க முடியாது. நான் எங்கும் உள்ளேன். எல்லா மனிதர்களிடமும் எல்லாப் பொருள்களிலுமுள்ளேன். நான் ஒவ்வொருவரிடமும் உள்ளிருந்தே வேலை செய்கிறேன். மக்கள் யாது செய்யினும் யாது எண்ணினும் அவர்கள் என் கருத்து நிறைவேறுவதற்கு உதவியாக இருப்பாரே யொழிய வேறொன்றும் செய்ய முடியாது. அவர்களும் என் பணியையே செய்கின்றனர். அவர்கள் என் விரோதிகளல்லர்; என் கருவிகளேயாவர்.'' (பக்கம் 4-5)

கீதையைப் பற்றி அரவிந்தர் கூறுவதாவது: 'அது சம்பூர்ண ஆத்மிக உண்மையும் சம்பூர்ண ஆத்மானுபவங்களும் நிறைந்த முழு உலகுக்கு வழி திறந்துவிடும் வாயிலைப் போன்றுள்ளது. அது அளிக்கும் காட்சியானது அந்த உன்னதமான உலகின் எல்லா அம்சங்களையும் தழுவி நிற்பதாகும்.

ஒரு நாட்டின் படம் எல்லா இடங்களையும் காட்டுவதைப் போல் அது எல்லாவித ஆத்மானுபவங்களையும் முறைகளையும் குறிப்பிடுகின்றது. ஆனால் அவற்றை ஒன்றோடொன்று முரண்படும்படி பிரித்தோ அவற்றுக்குள் வேலிகள் சுவர்களை எழுப்பியோ நமது வழியை எல்லைப் படுத்துவதில்லை.'' (பக்கம் 7)

அரவிந்தர் தமது கட்டுரைகளின் முதற் பகுதியில் ஆராயும் விஷயங்கள்: கீதை ஆராய்ச்சி, நமது நோக்கு, ஆசாரியன், சீடன், போதனை, குருக்ஷேத்திரப் போர், வாழ்க்கையும் போரும், ஆரியப் போர் வீரனின் கொள்கை, கீதை விளக்கும் ஸாங்கியம், யோகமும் வேதாந்தமும், புத்தியோகம், கருமயோகம், கருமமும் வேள்வியும், வேள்வியின் முதல்வன், இறைவன் பணியின் தத்துவம், இறைவனின் திரு அவதாரம், அவதாரமுறை, அவதாரத்தின் திருப்பணி, கடவுட் பணியாளன், சமதை, ஞானமும் சமதையும், இயற்கையின் நாணயமும் ஆன்ம சுதந்திரமும், குணங்களுக்கு அப்பால், நிர்வாணமும் உலகப் பணியும், கருமயோக ஸாரம். இத்தலைப்புகளை கவனித்துப் பார்த்தாலே அரவிந்தரின் ஆராய்ச்சிமுறை நன்குகப் புலப்படும்.



ஸ்ரீ அரவிந்தர்

பகவத்கீதை வாழ்க்கைப் பிரச்னையைத் தீர்க்க வழி காட்டும் அனுபவ நூலாதலால் அது மிகப் பழையதாயினும் என்றும் புதிதாக விளங்குகிறது. ஆர்வத்துடன் அதைப்படிப்பவர்க்கு இறைவ

னுடன் அளவளாவும் அதிசய அனுபவமும் அவன் அருளால் சுடர் விடும் அறிவின் உள்ளொளியும் ஏற்படுகின்றன. கிருஷ்ணன் அர்ஜுனனுடைய கேள்விகளுக்கெல்லாம் பதிலளித்துப் படிப்படியாகத் தன் பேருண்மை நிலைக்கு அவனை அழைத்துச் செல்லுவது போல் உள்ளன்புடன் நாடும் அனைவரையும் அழைத்துச் செல்லுகிறான். அதுவே அவன் அவதாரத்தின் முக்கிய நோக்கம்.

மனிதனிடம் உறையும் இறைவனுக்கும் இறைவனோடு ஒன்றும் மனிதனுக்கும் உள்ள தொடர்பு 'நர நாராயண தத்துவம்' எனப்படும். ஜீவான்மாவே நான், பரமான்மாவே நாராயணன். நரனை அர்ஜுனனாகவும் நாராயணனைக் கிருஷ்ணனாகவும் கீதையில் காண்கிறோம். நித்திய அவதாரமாயும், மானிட உறவில் இறங்கியுள்ள இறைவனாயும், எல்லா உயிர்களின் உள்ளத்திலும் இலங்கும் சாக்ஷியும், திரைக்குப் பின்னாலிருந்து நமது சிந்தனை, செயல் இதயத்தோட்டம் ஆகிய யாவற்றையும் உலகப் பெரு நிகழ்ச்சிகளையும் நடத்துவோனும் உள்ள கடவுளே கீதாசாரியனாகிய கிருஷ்ண பரமாத்மா. அவனால் நடத்தப்படும் இப்பெரிய உலகப் போராட்டத்தின் மானிடப் பிரதிநிதி அர்ஜுனன். அர்ஜுனன் மனத்தில் கடமையைப் பற்றிய பலவிதக் கருத்துக்கள் ஒன்றோடொன்று மோதிச் சிக்கப் படுவதால் மானிட அறிவினால் நிர்மாணிக்கப் பட்டுப் பயன்பட்டு வந்த அறிவு, நீதி என்னும் கட்டடம் முற்றிலும் இடிந்து விழுகின்றது. அதனின்றே கீதையின் போதனை எழுகின்றது. அந்த போதனையாவது ஞானத்தையும் கருமத்தையும் பக்தியையும் ஒன்றோடொன்று இணைத்துக் கருமத்தை ஞானத்தால் தூயதாக்கி, ஞானத்தைப் பக்தியினால் வளமடையச் செய்து, மூன்று வழிகளாலும் இறைவனுக்குப் பணியாற்றி நிற்றலே வாழ்க்கைப்பண்பும் பயனும் என்பதாம். உலகம் கடவுளைச் சார்ந்தது. கடவுளுடையது; வாழ்க்கை அவன் ஆட்சிக்குட்பட்டது; அது ஆராதனைக்குரிய வீடேயொழிய அகந்தையின் சுயதிருப்திக்காக ஏற்பட்ட களம் அன்று என்பதைத் தெளிவாக அறிதல் வேண்டும். விடுதலை அடைந்தவனுக்குத் தனி ஆசை கிடையாது. அவன் எப்பொருளையும் தன் சொந்த சொத்தெனக் கொள்ளுவதில்லை.

ஸ்ரீ அரவிந்தரின் கீதைக் கட்டுரைகள் ஆங்கிலத்தில் 1916 ம் ஆண்டு தொடங்கி 1920 ம் ஆண்டு வரையில் 'ஆரியா' என்ற மாதப் பத்திரிகையில் வெளிவந்தவை. பின் இவை தொகுக்கப்பெற்று முதல் தொகுதி 1922 லும் இரண்டாந் தொகுதி 1928 லும் புத்தக வடிவில் பிரசுரிக்கப் பெற்றன. அமெரிக்கப் பிரசுராலயமொன்று முழுத் தொகுதியையும் ஒரே புத்தகமாக 1950 ல் வெளியிட்டது. இருபத்துநான்கு கட்டுரைகள் அடங்கிய முதல் பகுதிக்கும் ஸ்ரீ பி. கோதண்டராமன் செய்த தமிழாக்கம் ஆகஸ்டு 1959 ல் முதன் முதலாக வெளிவந்துள்ளது. ஸ்ரீ அரவிந்தரின் கீதைக் கட்டுரைகள் ஆங்கிலத்தில் சிந்தனையாளரின் கருத்தையும் கவனத்தையும் ஏற்கெனவே கவர்ந்துள்ளன. தமிழ் மறுமலர்ச்சியில் இதுபோன்ற நூல்களுக்கு முக்கியமான இடமுண்டு. இந்து மதத்தின் உன்னதமான கருத்துக்களை உள்ளபடி அறிய விரும்புவோரும், ஆராய விரும்புவோரும், அனுஷ்டிக்க விரும்புவோரும் இந்நூலை ஆவலுடன் வரவேற்று ஆதரிப்பார்கள் என்பதில் ஐயமில்லை. இப்பதிப்பில் தத்துவக் கலைச் சொற்களின் அகராதியும் பொருள் அகராதியும் சேர்க்கப்பட்டுள்ளன. இந்நூலின் இரண்டாம் பகுதியும் வெளிவருவதை வாசகர்கள் ஆவலுடன் எதிர்பார்ப்பார்கள். இந்து மதத்தின் சிறப்பை உலகம் முழுதும் அறிந்துய்யும்படி அரும் பணியாற்றி வரும் அரவிந்த ஆசிரமத்தார் இந்நூலைத் தமிழில் வெளியிட்டுள்ளனர்.

—'அண்ணா'

தமிழாக்கம்: ஸ்ரீ பி. கோதண்டராமன்; கிடைக்குமிடம்: ஸ்ரீ அரவிந்த ஆசிரமம், புதுச்சேரி; விலை: ரூ. 3—00

## இமயத்தின் எல்லையில்

எத்தனையோ பேர்கள் காஷ்மீரத்துக்குப் போகிறார்கள்; வருகிறார்கள். ஆனால் காஷ்மீரத்தில் தாம் கண்டு கேட்டு உண்டுயிர்த்து நுகர்ந்த அழகின் அனுபவங்களை எல்லாம் ஒரு நல்ல நூலாக வடித்துத் தரும் திறனுள்ள ஒருவரை இந்தப் புத்தகத்தில் காண்கிறோம்; அல்லது இந்தப் புத்தகமாகவே காண்கிறோம் என்று வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளுங்கள். எப்படி வைத்துக் கொண்டாலும் ஆசிரியர் திறமைசாலிதான்.

இந்தப் புத்தகத்தின் ஒவ்வொரு பக்கத்திலும் காஷ்மீரத்தின் அழகைக் காண்கிறோம்; அதாவது ஆசிரியர் அழகான நல்ல புகைப்படங்களை வெளியிட்டிருப்பதைக் குறிப்பிடுகிறோம். தம்முடைய வர்ணனைத் திறனாலும், சொல்லும் முறையினாலும், படிப்பவர்களைக் காஷ்மீரத்துக்கே இழுத்துக் கொண்டு போய் விடுகிறார், 'இமயத்தின் எல்லையில்" என்ற நூலின் ஆசிரியரான திரு எம். எஸ். பி. சண்முகம் அவர்கள்.

ஆசிரியர் காஷ்மீரத்தின் ஏரிகளில் படகு வாழ்க்கையைப் பற்றிச் சொல்லும்போது நாமே காஷ்மீருக்குப் போய்த் தால் ஏரியில் ஒரு படகு வீட்டில் நின்று விடுகிறோம். பூஞ்சோலைகளைப் பற்றிக் கூறும்போது நம் கண் முன் பல்லாயிரக்கணக்கான பூக்கள் பூப்பது போல் ஒரு பிரமை ஏற்படுகிறது. வெள்ளிப் பனிமலைச் சிகரங்களைப் பற்றி — சினார் மரங்களைப் பற்றிக் காஷ்மீரக் கம்பளத் தொழிலைப் பற்றி, ஒவ்வொன்றைப் பற்றியும் ஆசிரியர் எழுதும்போது காஷ்மீரத்துக்கே போய்ப் பார்த்துக் கொண்டிருப்பது போல் ஒரு பிரமைத் தோற்றத்தை உண்டாக்கிவிடுகிறார். இப்படி ஒரு பிரமையை உண்டாக்குவதுதான் பிரயாணநூல் ஆசிரியருக்கு வெற்றி. அந்த வெற்றியைத் 'தமிழ்நாடு' நாளிதழின் உதவி ஆசிரியராகிய திரு எம். எஸ். பி. சண்முகம் அவர்கள் இந்த நூலில் பெற்று விட்டார். பிரயாண நூலுக்கு இன்றியமையாத 'நகைச்சுவை' அம்சமும் ஆசிரியருக்கு நன்றாக எழுத்தில் உதவியிருக்கிறது.

—கா. பா.

ஆசிரியர்: எம். எஸ் பி. சண்முகம் எம். ஏ. வெளியீடு: 'தமிழ்நாடு' அலுவலகம், ஆண்டாள்புரம், திருப்பரங்குன்றம் ரோடு, மதுரை. விலை: ரூ. 2-50.

யாருக்கும் காத்திராமல் ஓடும் காலத்தின் வேகத்தில் வாழ்வில் ஏற்படும் நிகழ்ச்சிகள் யாவும் உள்ளத்தினின்றும் அகன்றுவிடுகின்றன. என்றாலும் எங்கோ எப்போதோ ஏற்படும் ஓரிரண்டு நிகழ்ச்சிகள் மட்டும் நெஞ்சினின்றும் நீங்காமல் உள்ளத்துடன் ஒன்றி உறைந்து, இதயத்தின் அடித்தளத்தில் ஆழப் பதிந்துவிடுகின்றன. உயிர் உள்ளளவும், அந்நிகழ்ச்சிகள் நிழலாடிக் கொண்டுதான் இருக்கும். மனத்துடன் ஒட்டிவிட்ட நிகழ்ச்சிகள், காணும் நிகழ்ச்சிகளையெல்லாம் தொடர்புபடுத்திக் காணும் விந்தைதான் என்னவோ?

# தெய்வப் பிறவி



சாமா

நானும் மீனாட்சியும் சிறு வயது முதல், ஒன்றாகப் பழகி, ஒன்றாக வளர்ந்து, ஒன்றாக வாழ்ந்து வந்தோம். ஒரே பள்ளியில் பயின்றோம். என்னைவிட இரண்டு வகுப்புகள் கீழாகஇருந்தாள் மீனாட்சி. எங்கள் வீடுகள் மட்டும் வெவ்வேறு வீதிகளில் இருந்தபோதிலும் நாங்கள் மட்டும் ஒன்றாகத்தான் இருப்போம். ஒன்று அவளாவது என் வீட்டில் இருப்பாள், அல்லது நானாவது அவளது வீட்டில் இருப்பேன். எங்களைச் சாதாரணமாகத் தனித்தனியே பார்க்க முடியாது. எங்கள் இரு வீட்டாரிடையே சண்டை சச்சரவு ஏதுமில்லாததால் மிகவும் நெருங்கி வாழ்ந்து வந்தோம். விவரம் தெரியாத அந்தச் சிறு வயதிலேயே எங்கள் இருவருக்கும் முடிச்சுப் போட வேண்டுமெனப் பெரியோர்கள் பேசிக்கொண்டது இன்னும் என் நினைவில் இருக்கிறது.

மீனாவின் தந்தை சிறந்த சைவ பக்தர் மட்டுமின்றி, தமிழ்ப் பண்டிதரும் கூட. என் தந்தை என்னுடைய குழந்தைப் பருவத்திலேயே காலமாகி விட்டதால், மீனாவின் தந்தையின் கண்காணிப்பில்தான் நான் வளர்ந்து வந்தேன்.

சிறு வயதிலேயே, மீனாவுக்குப் பெரிய இட்டங்களும் பெரு வாழ்வும்தான். சிறு வயதுக் குறும்புகள் துளியும் காண முடியாது அவளிடம்! குடும்பத்துப் பண்பிலும் பழக்க வழக்கங்களிலும் ஊறியவள் அவள்; பள்ளியில் திருவாசகம், தேவாரப் போட்டி என்றால் முதற் பரிசு மீனாவுக்கே தவிர, வேறு

யாருக்கும் கிடையாது. கோயிலில் ஏதாவது விழாக் கூட்டம், சிவனடியார்கள் மகாநாடு என்று இருந்தால் முதல் இறை வணக்கம், மீனுவினுடையதாகத்தான் இருக்கும். தன்னை மறந்து தன் இனிய குரலில் அவள் இசை எழுப்பும்போது கூட்டமே தன்னை மறந்து ரசிக்கும் என்றால் என்னைப் பற்றிக் கூறவும் வேண்டுமா? சிறுமியின் சங்கீத ஞானமும், கடவுள் பக்தியும் பற்றிப் புகழாதவர்கள் அந்த ஊரில் யாருமே இல்லை எனலாம்.

வயதுக்கு மீறிய குணம், வயதுக்கு மீறிய பக்தி, வயதுக்கு மீறிய ஒழுக்கம்.

'மீனு, உனக்கு மீரா என்ற பெயர்தான் மிகவும் பொருத்தம்' என்று அடிக்கடி நான் நகைச்சுவையுடன் கூறுவதுண்டு.

பத்தாவது வகுப்புத் தேறிவிட்டேன் நான். அதற்கு மேல் கல்லூரியில் சேர்ந்து படிக்க வேண்டும் என்றால் அருகே உள்ள வேலூருக்குப் போய்த்தான் படிக்கவேண்டும்.

என் திருவண்ணாமலைப் படிப்பு முடிந்ததும், மீனுவும பள்ளிக்குச் செல்வதை நிறுத்திக் கொண்டுவிட்டாள்.

ஊருக்குப்புறப்படுவதற்குமுன் மீனுவின் வீட்டுக்குச் சென்றேன். பசந்தில் ஆண்டவனின் முன் அமர்ந்து மீனு திருப்புகழ் பாடிக்கொண்டிருந்தாள். நானும் என்னை மறந்து நின்று கொண்டிருந்தேன். அவள் என் முன் பிரசாதம் கொடுத்தபோதுதான் கண்களை நன்றாகத் திறந்தேன்!

வீட்டிலிருந்து விடைபெற்றுச் செல்லும் போது மீனுவின் கண்களில் துளித்து நின்ற நீர்த்திவலைகளை இன்று நினைத்தாலும், அதே நீர்த்திவலைகள் என்னுடைய கண்ணிலிருந்தும் வெளிப்படும்.

இரண்டு ஆண்டுகள் எப்படியோ ஓடி விட்டன. வேலூர் வாழ்வும் முடிந்துவிட்டது. இன்டர் பரீட்சையை எழுதிவிட்டு ஊருக்குத் திரும்பியதும், நான் மிகவும் மாறிவிட்டிருந்த தாக எல்லோரும் கூறினர்.

அதில் உண்மை இருந்ததோ என்னவோ, எனக்கு மட்டும் நகரத்து வாழ்வு மிகவும் பிடித்திருந்தது. சென்னை வாழ்வை எப்போது தொடங்குவது என்ற எண்ணம்தான் அப்போது என்னிடம் மேலோங்கியிருந்தது. 'இன்டருக்கு' மேல் படிக்க வேண்டுமானால் சென்னைதான் செல்ல வேண்டும்.

வேலூர் சென்று திரும்பிய அந்த இரண்டு ஆண்டுகளில் மீனு எவ்வளவு மாறிவிட்டிருந்தாள்! பருவத்தின் பூரண எழிலுடன் அவள் இருந்தாள்.

சிறிய சிறிய குக்கிராமங்களில்கூட நாகரிகம் பரவித்தான் வருகின்றது. சோப்பும், பவுடரும் தெரியாத பெண்கள் நாட்டுப்புறங்களில் கூடக்கிடையாது. ஆனால் மீனுவுக்கு அதில் துளியும் பற்றில்லை.

மணக்க மணக்க அரைத்த மஞ்சளை முகத்தில் பூசிக்கொண்டு, நெற்றியின் நடுவே வட்டமான பொட்டுடன் மீனுவைக் காணும்போது எனக்கு வியப்புத்தான் மேலிடும். என்னைக் கண்டதும் முகத்தைக் கவிழ்த்துக் கொண்டு உள்ளே சென்று விடுவாள், வெட்கம்! சிறுவயது முதல் ஒன்றாகப் பழகி வளர்ந்து வந்த என்னிடம் மீனுவுக்கு வெட்கம்! அவளுக்கு வெட்கம்! எனக்கு விந்தை!

கோடை விடுமுறைக்கு வரும்போது அவளுடன் எவ்வளவோ பேச வேண்டுமென்று நினைத்து வந்தேன். அவளைப் பார்த்ததும், பேச எண்ணியதெல்லாம் மறந்து விட்டேன்!

விடுமுறை முடிந்து, கல்லூரி திறப்பதற்கு முன்னமே சென்னை புறப்பட்டு விட்டேன். சென்னையில் தம் உறவினர் வீட்டில் தங்கிப் படிக்க ஏற்பாடு செய்தார் மீனுவின் தந்தை. வேலூருக்குப் புறப்படுமுன் மீனுவை எந்தக் கலங்கிய கண்களுடன் பார்த்தேனோ, அதே காட்சி தான் சென்னை செல்லும்போதும்!

மீனுவை என்னவென்று நினைப்பது? உடன் இருந்தபோது எதையும் பேச வில்லை, பேச இடமும் கொடுக்க வில்லை.





பிரியும் போது கண் கலங்குகிறாள். 'மீனா, ஒரு புரியாத புதிர்' என்ற எண்ணத்துடன் என் சென்னைப் பயணத்தைத் துவங்கினேன். அதுவே என் வாழ்க்கையின் புதுப் பயணமாகும் என்று அப்போது எனக்குத் தெரியாது.

நான் தங்கியிருந்த இடத்து உறவினர் என்னை மிகவும் அன்புடனும், ஆதரவுடனும் கவனித்து வந்தனர். உறவினரின் பெண் லீலா இண்டரில் சேர்ந்தாள். எனக்கு பி.எஸ்ஸி.யில் இடம் கிடைத்தது.

நாட்கள் மிகவும் வேகமாக ஓடின. லீலாவிடம் நெருங்கிப் பழக வேண்டியதாயிற்று. அடிக்கடி பாடத்தைப் பற்றிய சந்தேகங்கள் கேட்க வந்து என்னை மடக்குவதில் அவளுக்குப் பரம திருப்தி!

லீலாவுடன் பழகும் போதும், பேசும் போதும் மீனாவின் நினைவு தவறாமல் வரும். மீனாவைவிட லீலா அழகென்று கூறமுடியாது. ஆனால் அழகாகத் தோற்றம் அளித்தாள். காரணம் லீலா, இருபதாம் நூற்றாண்டிலும் மீனா பத்தாம் நூற்றாண்டிலும் வாழ்ந்து கொண்டிருந்தனர். மீனாவுக்கும் செயற்கைப் பூச்சுகளும் வெகு தூரம். லீலா செயற்கைப் பூச்சின்றி வாழமுடியாது. மீனா பேசவேண்டியதைக்கூட பேச மாட்டாள். லீலா பேச வேண்டியவை, பேசத் தேவையில்லாதவை எல்லாவற்றையும் பேசுவாள். மீனா வாழும் உலகும், லீலா வாழும் உலகும் வெவ்வேறு. ஒன்றுக் கொன்று முரண்பாடான உலகம்!

லீலா வாழ்ந்த உலகில் நான் வாழ்ந்த போதிலும், எந்த வாழ்வில் பற்று அதிகம் என்று எனக்கே தெரியவில்லை.

முதலாண்டுத் தேர்வை முடித்துவிட்டு, விடுமுறைக்கு ஊருக்கு வந்தேன்.

திருமணம் குறித்துப் பேச்சு எழுந்தது. உள்ளத்தில் குழப்பமும், பயமும் ஏற்பட்டன. காரணம் மீனாவின் போக்கா, சென்னையில் என் வாழ்வில் குறுக்கிட்ட உறவுப் பெண் லீலாவா என்று தெரியவில்லை. அப்போதைக்குத் திருமணம் வேண்டாம் என்று கூறித் தப்பி விட்டேன்.

பி.எஸ்ஸி.யும் முடிந்து, வழக்கம் போல் விடுமுறைக்கு வந்திருந்தேன். மனத்தளத்தின் போராட்டமும் மிகையாகி இருந்தது. மீனாவைக் காணும்போதெல்லாம் என் நெஞ்சம் நெட்டுயிர்க்கும். மீனாவின் போக்கு மிக மிக மாறிவிட்டிருந்ததை உணரும்போது என் குழப்பம் மிகுதியாயிற்று.

எப்படியாவது மீனாவைத் தனிமையில் சந்தித்து, திருமணம் குறித்துப் பேசுவது எனத் தீர்மானித்தேன். அவளுடன் பேச வீட்டில் எந்தவிதக் கட்டுப்பாடும் இல்லை. ஆனால் அவளாக ஏற்படுத்திக் கொண்ட கட்டுப்பாட்டை மீற யாரால் இயலும்?

மீனாவை மறந்துவிட்டால் என்ன? லீலாவை மணந்து கொள்வதில் தவறென்ன? எவ்வளவு அன்பைப் பொழிகின்றாள் லீலா? அவளிடம் இருந்து வரும் கடிதங்களில் எவ்வளவு உருக்கம், எவ்வளவு பரிவு, எவ்வளவு அன்பு, எவ்வளவு கனிவு? மீனாவிடம் மட்டும் அந்தப் பரிவு, உருக்கம், கனிவு, அன்பு இல்லையா? இல்லையென்று ஒருகாலும் கூறமுடியாது.

மீனாவை மறப்பதா, லீலாவைத்தான் மறப்பதா? இதை எண்ணும் போதெல்லாம் வேதனை நெஞ்சினைத் துளைத்தது.

பி. எஸ்ஸி. தேர்வின் முடிவும் வெளியாகி விட்டது. நானும் தேறிவிட்டேன். லீலாவும் இண்டர் பரீட்சையில் தேறிவிட்டாள். தேர்வு வெளியானதும் புறப்பட்டு வரும்படி எழுதியிருந்தாள்.

'இஞ்சினியரிங்' படிப்புக்காக நான் சென்னை புறப்படுவதென்று தீர்மானித்த முன்தினம் என் மனம் ஒரு நிலையில் இல்லை. அமைதியை நாடி ரமணர் ஆசிரமத்துக்குச் சென்றேன். சுற்றிப் பார்த்துவிட்டு, பஜனைக் கூட்டத்துக்கு வந்தேன். அப்படியே ஒரு கணம் திகைத்து விட்டேன்.

மீனா மஞ்சள் புடவையுடுத்தி, மணக்க மணக்க அரைத்த மஞ்சளை முகத்தில் பூசிக் கொண்டு, வட்டமான பொட்டு நெற்றியில் துலங்க, இறைவன் முன் அவள் தொழுது எழுந்த அந்தக் காட்சி....!

மீனாவிடம் எனக்குப் பக்திதான் ஏற்பட்டது. அவள் கண்களில் 'தெய்வீக ஒளி'யினைத்தான் என்னால் காண முடிந்தது. அவள் கண்களில் காதல் ஒரு துளியும் சுரக்கவில்லை.

இல்லற வாழ்வில் மீனாவுக்கு விருப்பமே கிடையாதா? மீனாட்சி மனிதப் பிறவிதானா? காதல் கற்பனைகள் காண வேண்டிய அந்த இளம் வயதில், மீனா கற்பனைக்கு அப்பாற்பட்டவளாகக் காட்சியளித்தாள்.

வீட்டுக்குத் திரும்பும்போது இருவரும் ஒன்று சேர்ந்துதான் வந்தோமே தவிர எதையும் பேசவில்லை. எங்களிடம் நீண்ட மௌனம்தான் நிலவியிருந்தது.

எனக்கு மிக மிக அருகில் அவள் இருந்த போதும் என் இதய அரங்கினின்றும் அவள் வெகு தூரத்துக்கு அப்பால் இருந்தாள். நாங்கள் ஒன்று சேர்ந்து இல்லற வாழ்க்கை நடத்துவது என்பது வெறும் கனவுதான்.

மீனாவைத் தவிர என் வாழ்வில் பங்கேற்க யாரும் கிடையாது என்று எண்ணியிருந்ததும் ஒரு காலம். மீனா என் வாழ்வில் பங்கேற்கவே முடியாது என்ற முடிவுக்கு வந்ததும் ஒரு காலம். முரண்பாடுகள் நிறைந்த கூட்டைதான் வாழ்க்கையா?

காலம் மாறியது. என் வாழ்வும் மாறியது. நாட்கள் எப்படித்தான் ஓடினவோ? 'எஞ்சினியரிங்' படிப்பும் முடிந்தது. லீலாவும் என் மனைவியாகி விட்டாள்.

திருவண்ணாமலையில்தான் திருமணம் நடந்தது. திருமணத்தன்று மீனா எவ்வளவு கலகலப்பாக இருந்தாள்? நான் துளியும் எதிர்பார்க்கவில்லை. ஓடியாடி வேலை செய்தாள். வளைய வளைய வந்து உபசரித்தாள். எனக்கு மிகவும் மன நிறைவு ஏற்பட்டுவிட்டது. மீனாவின் கண்ணிலிருந்து தப்பிவிட்டதாக ஒரு நினைப்பு, திருப்தி. ஆனால், அந்த மன நிறைவும், திருப்தியும் நெடுநாட்கள் நீடிக்கவில்லை.

மீனா ஊரைவிட்டு ஓடி விட்டாள்—மறைந்து விட்டாள், இரண்டே வரிகள் கொண்ட ஒரு துண்டுக் கடிதம் எழுதிவிட்டு.

'இறைவன் திருப்பதம் நாடிச் செல்கின்றேன்—தயவு செய்து தேடவேண்டாம்'—

மீனா மறைந்துவிட்ட பிறகு அந்த ஊரில் வாழக் கொஞ்சமும் பிடிக்கவில்லை.

பழங்காலத்து தப்பு அபிப்பிராயங்களும் கொள்கைகளும் நல்லதான வாழ்க்கையின் அனுகூலங்களை பயன்படுத்துவதற்கு இடையூறாயிருக்கலாம்.

உதாரணமாக வனஸ்பதியைப்பற்றி சிலர் பேசுவதைக் கேளுங்கள். "நமக்கும் வனஸ்பதிக்கும் ரொம்ப தூரம் ஸார். உடம்புக்கு நல்லதில்லே என்று கேள்வி!" தப்பு அபிப்பிராயம் என்றும் சாஸ்வதமல்லதான். ஏனெனில் கொழுப்புச் சத்து ஆரோக்கியத்திற்கு மிகவும் அவசியம் என்பதோடு, மிகச்சிறந்த கொழுப்புகளில் வனஸ்பதியும் ஒன்று என்பது விஞ்ஞானம் நிரூபித்துள்ள உண்மை!

# பழங்கால மூடக்கொள்கைகளை கடைபிடித்து மேலான வாழ்க்கைக்கான வாய்ப்புகளை நழுவவிடாதீர்கள்!



அத்தியாவசியமான விட்டமினுள்ளது திடகாத்திரமாகவும், ஆரோக்கியத்துடனும் இருப்பதற்கு ஒவ்வொருவருக்கும் நாளொன்றுக்கு குறைந்த பக்ஷம் இரண்டு அவுன்ஸாவது கொழுப்பு தேவைப்படுகிறது என்பதை விஞ்ஞானிகள் நிரூபித்துள்ளனர். உண்ணும் உணவின் உயிர்ச்சத்துக்களை உடலில் சேர்ப்பதற்கு உதவுவது கொழுப்புகளே. நோய் நொடிகளையும் சோர்வையும் எதிர்த்துப் போரிடுவதற்கும், மீண்டும் ஆரோக்கியத்தை அனுபவிப்பதற்கும் அவை உடம்புக்கு உதவியாக இருக்கின்றன.

கடலை எண்ணெய், நல்லெண்ணெய் முதலியவைகளிலிருந்து தயாரிக்கப்பட்ட தூய்மையான தாவரக் கொழுப்பே வனஸ்பதி. அது அருங்குணங்களெல்லாம் நிரம்பப் பெற்றது. ஆகவே வாங்குவதற்கும், உபயோகிப்பதற்கும் சிக்கனமானது. மேலும், ஆரோக்கியத்திற்கு அவசியமான ஒரு முக்கிய விட்டமினும் வனஸ்பதியில் சேர்க்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு அவுன்ஸ் வனஸ்பதியிலும் 700 இன்டர்நேஷனல் யூனிட் விட்டமின் 'ஏ' சேர்க்கப்பட்டுள்ளது. இந்த விட்டமின் கண்பார்வையையும், சரும ஆரோக்கியத்தையும் பாதுகாக்கிறது. மேலும், அது துரிதமாக உடம்பு தேறுவதற்கும், தொற்றுநோய் அணுகா வண்ணம் திசுக்களை ஆரோக்கியமாக வைத்திருக்கவும் அத்தியாவசியமானது.

ஆரோக்கியம் தழைக்கும் நல்வாழ்வை உங்களுக்கு அளிப்பது நல்லுணவே. தூய்மையிலும் ஊட்டமளிப்பதிலும், சிக்கனத்திலும் சிறந்த வனஸ்பதி இருக்கையில் அருமை உணர்ந்து கேட்கவா வேண்டும்! நீங்களும் வனஸ்பதியை உபயோகிக்கத் தொடங்கலாமே!

## வனஸ்பதி

— இல்லாளுக்கு வரப்பிரசாதம்

தி வனஸ்பதி மானுபாக்சரேர்ஸ் அஸோஸியேஷன் ஆப் இந்தியா ஸ்தாபனத்தார் வெளியிட்டது

திருமணமான இரண்டு மாதங்களுக்கெல்லாம், பிலாய் அலுவலகத்திலிருந்து வேலைக்கு உத்தரவு வந்தது. நான் முயற்சி செய்திருந்தால் ஊரிலேயே 'சாத்தனூர் அணை'யில் வேலைக்குச் சேர்ந்திருக்கலாம். ஆனால் அந்த ஊர்தான் என்னை முள்ளாகக் குத்தியதே!

சொந்த ஊரை விட்டு வந்து ஆண்டொன்றும் உருண்டோடிவிட்டது. என் அருகிலேயே இருந்தபோது, மீனு என் இதயத்திலிருந்து நெடுந் தொலைவில் இருந்ததுபோன்ற உணர்வு. இப்போது எங்கோ, நெடுந்தொலைவில் உள்ளபோது என் இதயத்துள்ளேயே இருப்பது போன்ற உணர்வு.

திருவண்ணாமலையில் அருணகிரிநாதர் விழா நடக்கப் போவதாகப் பத்திரிகையில் பார்த்தேன். எங்கிருந்தாலும் அந்த விழாவுக்கு மீனுவருவாள் என்ற உறுதியுடன், இருபது நாட்கள் விடுமுறையில் லீலாவுடன் ஊருக்குச் சென்றேன்.

அந்த ஆண்டு அருணகிரிநாதர் விழா மிகவும் விமரிசையாக நடந்தது. ஆனால் எனக்கு அது விழாவே அல்ல. எந்த நம்பிக்கையுடனும், உறுதியுடனும் வந்தேனோ அந்த நம்பிக்கை, உறுதி தளர்ந்து போய்விட்டது.

மீனு வரவில்லை—வரவேயில்லை. 'மீனு, நீ உயிருடன் இருக்கின்றாயா? மீனு, உன்னை நான் வஞ்சித்து விட்டேன் என்ற கோபமா?'

ஊருக்கு வந்த ஒரு வாரத்துக்குள் திரும்பி விட்டேன், உடைந்த உள்ளத்துடன்.

வரும் வழியில் விடாமல் பெய்து கொண்டிருந்த மழையின் சேதம் பெருகிக் கொண்டிருந்தது. நான் வந்த ரயில் வார்தா வரை வந்து நின்று விட்டது. வார்தாவுக்கும் நாகபுரிக்கும் இடையே ஏதோ ஒரு பாலம் பழுதாகிவிட்டதால் ஒரு நாள் முழுவதும் வண்டி நின்று விட்டது.

வார்தாவில் காந்தி மகானின் ஆசிரமம் இருக்குமிடத்துக்குச் சீக்கிரம் சென்று திரும்பலாம் என்றறிந்து நானும் லீலாவும் ஆசிரமம் பார்க்கச் சென்றோம். என்னைவிட லீலாவுக்கு அதில் அதிக ஆர்வம் மிகுந்தது.

காந்தி மகான் ஏற்படுத்திய அந்த ஆசிரமத்தில் நான் கண்ட ஒவ்வொரு காட்சியும் எனக்கு ரமணர் ஆசிரமத்தை நினைவூட்டியது: அமைதியையே இருப்பிடமாகக் கொண்ட அந்த ஆசிரமத்தில் ஒவ்வொருவரும் தத்தம் வேலையில் கண்ணும் கருத்துமாக இருந்தனர்.

ஒரு பக்கம் பெண்டிர் சிலர் கைராட்டை சுற்றிக் கொண்டிருந்தனர். அவர்கள் ஒவ்வொருவர் செயலிலும் காந்திமகான் வாழ்ந்து கொண்டிருந்தார்.

என் விழிகள் நிலைகுத்திவிட்டன. நான் காண்பது கனவா, நினைவா? இரண்டாவது வரிசையில் மூன்றாவது பெண். அவளே தான். மீனாட்சியேதான். சந்தேகமே இல்லை. மஞ்சள் பூசிய அதே முகம். அதே வட்டமான பொட்டு. நீண்ட சடை. துளியும் சந்தேகம் இல்லை. மீனுதான்—மீனுவேதான்.

'மீனு!' என்று உரக்கக் கூவ எண்ணினேன். ஆனால் எழுந்த குரல் என் தொண்டைக் குழிக்கிடையே புதைந்துவிட்டது.

எவளைக் காணவேண்டுமென்று துடியாய்த் துடித்தேனோ, எவளைச் சந்தித்துக் கதற வேண்டுமென்று எண்ணினேனோ அவள் என் எதிரில் இருக்கவும் என்னால் பேச முடியவில்லை.

ஆசிரமத்துச் சூழ்நிலை என்னை ஊமையாக்கி விட்டது; என் வாயைக் கட்டி விட்டது.

'இனியும் அவள் வாழ்வில் குறுக்கிட வேண்டாம்' எனக் கூறியது அந்தச் சூழ்நிலை.

ஆசிரமத்தை விட்டுத் திரும்பும்போது என் கண்களினின்றும் என்னையறியாமல் இரண்டு சொட்டு நீர்த்துளிகள் விழுந்தன. அது இன்பத்தின் விளைவா? துன்பத்தின் விளைவா?

'மீனு உயிருடன் வாழ்கிறாள்' என்ற நினைவில் எழுந்த இன்பமா? 'உன்னை இந்தக் கதிக்கு ஆளாக்கியவன் நான்தான்' என்ற எண்ணத்தில் தோன்றிய துன்பமா? எனக்கே அது தெரியாது.

சுயநினைவு ஏற்பட்டபோது வண்டி பிலாய் நோக்கி ஓடிக் கொண்டிருந்தது. என் எதிரே லீலா அரைத் தூக்கத்தில் உறங்கிக் கொண்டிருந்தாள்.

---

போட்டோ எடுக்கும்போது......



சாதாரண நேரத்தில்......!





# நாட்டு வைத்தியம்

## 127 கருடா! சுகமா?

அப்பனாகி-குப்பனாகி-அழகிய மணவாளனாகி - கப்பனாகி - கருப்பனாகி - கருப்பண்ணசாமியாகி.......

இப்படியே ஒருவருடைய அந்தஸ்து வளர வளரப் புகழும் செல்வாக்கும் பெருகப் பெருகப் பெயர் மாறிக்கொண்டே வந்து கடைசியில் ஒரு தசாந்தரம் வந்தபோது......! "பழைய கருப்பன்தானுங்க!" என்று ஆயிற்றும். இப்படி ஒரு கதை.

இன்றைக்குக் காது குத்தல்....தேங்காயெண்ணெயில் பெருங்காயத்தைக் காய்ச்சி இரண்டு சொட்டு விடவே குணமாயிற்று. நாலு மாசம் அல்லது ஆறு மாசமான பிறகு ஒருநாள் சிறிது மழையில் நனைந்தேன் — மறுபடியும் காதில் குத்தல் வலி ஒரு வாரப் படுக்கை. பிறகு டாக்டரிடம் சென்றேன். ஓர் ஊசி போட்டார். ஒரு டஜன் மாத்திரை கொடுத்தார். பிறகு குணம். மறுபடியும் ...என்று இப்படி ஆரம்பிக்கும் காது வலி காலக்கிரமத்தில் ஒரு சாதாரணச் சம்பவமாகி—"டொக் என்றால் போதும், காது வலிதான்" என்ற நிலைக்கு வந்து...அப்படியே சில காலம்...

இவ்விதம் கர்ண ரோகத்தை உபேக்ஷிப்பதாலோ அல்லது சரியான சிகிச்சையைச் செய்யத் தவறுவதாலோ கடைசியில் கர்ண நாதம் என்ற நோயில் போய் முடியும். இது ஒரு வகை.

தலையில் பொடுகு அல்லது கரப்பான். இதைச் சிலர் மண்டைக் கரப்பான் என்பர். இது போவதும் வருவதுமாகக் கண்ணுமூச்சி காட்டும் இயல்பு பெற்றது. பொடுகு உள்ளபோது தலையில் சொல்ல முடியாத அரிப்பு ஏற்படும். "வர்க்... வர்க்..." என்று சொறிந்தபடி இருப்பர். மேற்காற்றில் தூற்றிவிட்டது போல் சொறியும் தலையிலிருந்து பொல பொலவென்று தவிடுபோல் பொடுகிலிருந்து உதிரும் தூள்கள் முகம், காது, கன்னம் முதலிய பிரதேசங்களில் விழும். இந்தப் பொடுகு என்பது தாவர இனத்தைச் சேர்ந்த காளான் போன்ற கிருமிகளின் இனத்தைச் சேர்ந்ததென்று முன்னொரு கட்டுரையில் தெரிவித்துள்ளேன். சொறியும்போது இதின் துகள்கள் விழுந்த இடத்திலும்......ஏன்? விழும் இடங்களிலெல்லாம் இந்தக் காளான் பரவ வேண்டியதுதானே இதன் இயல்பு. அப்படித்தான் நெற்றியில் பரவும். புருவங்களை எல்லாம் கொஞ்சம் கொஞ்சமாக அரித்துக்கொண்டே செல்லும். இந்தப் பொடுகின் துகள்...காதினுள்ளும் செல்ல நேரிடுமானால் சிவலிங்கத்தின்மேல் ஏறிய எலியைப் போல் ஒரு கேந்திர ஸ்தானத்தை இருப்பிடமாகப் பெற்றுவிட நேரிடும். அங்கிருந்து அதை விரட்டுவது எளிதாகாது. கரப்பான் அல்லது மண்டைக்கரப்பான் ஏற்பட ஏதுவாகும். இதே போலத்தான் ஊறலெடுத்த இடத்தைச் சொறிந்த கையாலேயே காதைக் குடையநேரிட்டால் கரப்பானைச் சேர்ந்த காளான் கிருமிகள் காது என்னும் கேந்திர ஸ்தானத்தில் சேர்ந்து விடும். பிறகு கேட்க வேணுமா?

இவ்விதம் காதினுள் காளான் குடி புகுவதாலும் கர்ண நாதம் ஏற்படும்.

'கருடா! சுகமா?' என்று கேட்டதாம் சிவலிங்கத்தின் மேலிருந்தபடி ஓர் எலி.

'இருக்க வேண்டிய இடத்தில் இருந்தால்...' என்று இழுத்தாராம் கருடன். இப்படியொரு கதையுண்டல்லவா? இதைப் போலத்தான் காளான் புகுந்த காதும்.

காதினுள்ளிருக்கும் மிக மெல்லிய தான—மிருதுவான பாகங்களில் இந்தக் காளான் கிருமி [தாவர இனத்தைச் சேர்ந்ததானால்] தனது வேர்களை மெல்ல மெல்ல ஊன்றிக் கொள்ளும். அவ்வேர்கள் ரத்தத்திலிருந்து பரவும் லஸிகா [Lymph] வரையில் ஊடுருவிச் சென்று அந்த லஸிகாவைத் தனக்கு ஆகாரமாக [மரத்தின் வேர்கள் நிலத்தின் அடியிலிருந்து நீரைக் கிரகிப்பது போல்] ஏற்றுத் தினந்தோறும் பெருகிக் கொண்டே போகும்.

இப்படி வளரும் காளான் கிருமியின் சுற்றுப் புறத்திலுள்ள லஸிகா எல்லாம் கிரகிக்கப்படுவதால் அவ்விடத்தில் ஒரு வறட்சியுண்டாகும்.

இந்த வறட்சிப் பிரதேசத்தைச் சுற்றிலுமுள்ள நல்ல பிரதேசங்கள் தாமாகவே சிறிது பொக்கமும், வளர்ச்சியும் பெற்றுக் கடுகு அல்லது அதை விடச் சிறியதான கலைகளா போன்ற அளவில் அதிமாம்ஸமாக வளரும். ஏன்? இப்படி வளருவதால் அங்கு அதிக ரத்தம் பரவக் கூடும்.



பெங்களூர் பிரமுகர் திரு எஸ். வி. ராமசாமி அய்யரின் சகோதரரும், சாமக்குளம் போஸ்ட் மாஸ்டருமான திரு சுப்பிரமணிய அய்யரின் சஷ்டியப்த பூர்த்தி வைபவம் நவம்பர் மாதம் 4 ந் தேதி சைதாப்பேட்டையில் வெகு சிறப்பாக நடைபெற்றது.

---

அதிலிருந்து அதிகப்படியான வனிகாபரவும். ஆகவே அந்தப்பிரதேசத்தில் ஏற்பட்ட வறட்சி குறையும். இந்த எண்ணத்துடன்தான் "காதினுள்ளே ஒரு வகை சதை வளருகிறதோ?" என்று எண்ணக்கூடியவாறு மேற்சொன்ன போக்கங்கள் ஏற்படும். ஆனால், இதனால் அதிகமாகக் கிடைக்கும் வனிகாவை அதிகத் திருப்தியுடன் குடித்துக் காளான் கிருமி புத்திர பௌத்ராதிகளுடன் விருத்தியாகும்.

இவ்விதம் ஏற்பட்ட நல்ல பிரதேசங்களின் போக்கங்களைத் தமது "காவலி"க்கு ஓர் அரண்போல் அமைத்துக் கொண்டு அதன் நடுவில் காளான் பண்ணையின் உற்பத்திப் பெருக்கு முன்னேற்றம் அடையும்.

'காதைத் துடைப்போம்' என்று சிறியதொரு பஞ்சுத் திரியைக் காதினுள் செலுத்த முயன்றாலும் முடியாது. அரணாக ஏற்பட்ட பாகம் மிகவும் உயிர்ப்புள்ளதாய் இருக்குமாதலின் வெறும் பஞ்சுத் திரி அந்தப் பிரதேசத்தை அடுத்துச் செல்லும்போதே வலியும் கூச்சமும் உண்டாகும். "அப்ப்ப்ப!" என்று காதை இழுத்துக்கொண்டு விடுவார் நோயாளி. இந்த அரணைக் கடந்து தாம் உள்ள இடத்துக்கு ஒரு பஞ்சுத் திரியும் வரவொட்டாதபடி தற்காப்பாக இப்போக்கங்களை ஏற்படுத்திக் கொள்ளும் காதினுட் புகுந்த காளானின் அறிவையும் ஆற்றலையும் எப்படிப் புகழ்ந்தாலும் போதாது. எப்படியோ தப்பித் தவறிக் கேந்திர ஸ்தானத்தைக் காப்பாற்றிக் கொள்ள இவ்வளவு ஆற்றலும் பற்றுதலும் இருக்குமானால்......

ஸ்ட்ரெப்டோமைஸின் போன்ற சில (கிருமி நாசினி) மருந்துகளை அளவு மீறியோ அஜாக்கிரதையுடனோ கொடுப்பதாலும் ஒருவகை கர்ண நாதம் ஏற்படுவதுண்டு. குறிப்பிட்ட மருந்தைக் கொடுப்பதால் எதிர்பார்த்த பலன் கிடைக்கலாம். ஆனால் தலைவலி போகத் திருகுவலி வந்தது என்ற கதையாக இந்தக் கர்ண நாதம் வந்து சேரும்.

இவ்வகையைச் சேர்ந்த கர்ண நாதத்தில் மருந்தை உடனே நிறுத்தி விட்டு, வைடமின்கள் சிலவற்றை (முக்கியமாக 'பி' இனத்தைச் சேர்ந்தவைகளை) சில நாட்கள் சாப்பிட்டு வந்தால் மேற்சொன்ன இனத்தைச் சேர்ந்த கர்ண நாதம் சமனமாகுமென்று தெரிவித்திருக்கின்றனர்.

அதெல்லாம் இல்லை. ஸ்ட்ரெப்டோமைஸின் போன்ற கிருமிநாசினிகளைக் கொடுக்கும்போதே அவற்றுடன் வைடமின்களையும் சேர்த்துக் கொடுத்து வந்தால் இவ்வித உபத்திரவங்களை ஏற்படாது என்பது ஒரு சிலர் நம்பிக்கை. இப்படிக் கொடுக்கத் தவறியதாலோ, கொடுத்தும் பலன் படாததாலோ, குறிப்பிட்டவரின் சரீரக் கூறு காரணமாகவோ, மேற்சொன்ன இனத்தைச் சேர்ந்த கர்ண நாதம் உண்டாகும்.

கர்ண நாதத்தில் சமுத்திரத்தின் அலை யோசை போலவும், சுவர்க் கோழியின் கிரீச்சிடல் போலவும்—ரயில் இஞ்ஜினிலிருந்து நீராவி போகும்போது ஏற்படும் சத்தத்தைப் போலவும்-சில பக்ஷிகள் இடும் சப்தத்தைப் போலவும் பலவித மான சப்தங்கள் காதினுள் கேட்டுக் கொண்டே இருக்கும். முதலில் இது சில சமயங்களில் மட்டும் கேட்பதும் பிறகு தானே மறைந்து விடுவதுமாக இருப்பினும் காலக் கிரமத்தில் தொடர்ந்து கேட்டவண்ணம் இருக்கும். மேலும் சில நாட்களில் இந்தச்சப்தம் அதிகரிக்கும். சப்தம் அதிகமாக அதிகமாகக் காது கேட்பது குறைந்து கொண்டே வரும். அது மட்டுமா? தான் பேசுவதே தனக்கு ஒரு புதிய குரல் போலத் தோன்றும். வர வரத் தான் பேசுவதும் மெலிந்த குரலில் பேசும் இயல்புள்ளவராய் நாலு பேர்கள் நடுவில் புழங்கிடவே சங்கோசப்படுவார். இப்படியும் கொஞ்ச நாட்களான பிறகு காதே கேட்காத நிலை வந்து விடும்.

காளானுள்ள கர்ண நாதத்தில் காதில் எண்ணெய்களை விடுவது சிறந்ததல்ல. ஏனெனில் அந்த எண்ணெயே இக்காளானுக்கு ஒரு வகையில் ஆகாரமாகி விடுவதால் காளான்கள் இன்னும் அதிகமாகப் பெருகத்தான் ஏதுவாகும்.

Printed and Published by R. Ananthanarayanan for the Proprietors Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press, Kilpauk Madras 10
Managing Editor, T. Sadasivam.

# பளிங்குபோன்ற புதிய பளபளப்பு!

## இதுவே விம் தரும் பரிசுத்தம்!






**விம்** பவுடர் போட்டு விறுவிறுவென்று தேய்த்துப் பாருங்கள்; ஒளிப் பிழம்பாக எல்லாமே பளிச்சிடும்: பீங்கான்—கண்ணாடிச் சாமான்கள், சமையல் பாத்திரங்கள், பேஸின்கள், வீட்டுத் தரை எல்லாமே பளிச்சிடும். பாடுபடாமல், பிரயாசையில்லாமல், கீறலே விழாத பரிசுத்தம் செய்ய உங்களுக்கு உதவுவது விம். மிகமிகச் சுலபமான வேலை! ஒரு ஈரத் துணிமீது விம் பவுடரைத் தூவிக்கொண்டு இலேசாகத் தேய்த்துவிட்டுப் பாருங்கள்—அழுக்கும், களிம்பும் மாயமாக மறைந்துவிடுவதைக் காண்பீர்கள். மங்காத பெருமை தரும் உங்கள் வீடு மங்களவாசமாக விளங்க விம் உபயோகியுங்கள்!

## விம் பட்ட இடமெல்லாம் ஒளிப் பிழம்பே!

இந்துஸ்தான் லீவர் லிமிடெட் தயாரிப்பு

V. 100-50 TM

